உ

சிவமயம்.

# "சிதம்பர மஹாத்மியம்"

(வடமொழிக்கு நேர் மொழி பெயர்ப்பு).

## "நடன குஞ்சிதபாத சபை வெளியீடு" நெ. 27.



எழுதியவர்:

சிதம்பரம் C. S. ஸச்சிதானந்த தீக்ஷிதர்.

நெ. 6, தெற்குஸந்நிதி, சிதம்பரம்.

பதிப்பகம்:

கிராஸ்வேடு பிரஸ், சிதம்புரம்.



கிடைக்குமிடம்:

"நடன குஞ்சிதபாத ஸபை"

புராண நிலையம், தெற்கு ஸந்நிதி, சிதம்பரம்.



1—6—52

விலை] C. 1000. [ரூ. 1—8—0.

உ

சிவமயம்.

# "சிதம்பர மஹாத்மியம்"

(வடமொழிக்கு நேர் மொழி பெயர்ப்பு). 32·1

"நடன குஞ்சிதபாத சபை வெளியீடு" நெ. **27.**

எழுதியவர்:
புராணரத்னம், உபன்யாஸ சரபம்,
ஸம்ஸ்க்ருத விசாரதா,
**சிதம்பரம் C. S. ஸச்சிதானந்த தீக்ஷிதர்.**
நெ. 6, தெற்கு ஸந்நிதி,
சிதம்பரம்.

கிடைக்குமிடம்:
புராண நிலையம்,
"நடன குஞ்சிதபாத ஸபை"
தெற்கு ஸந்நிதி, சிதம்பரம்.

1—6—52



C. 1000.

விலை] [ரூ. **1—8—0.**

# முகவுரை.

புண்ய பூமியான பரத கண்டத்தில் திகழும் க்ஷேத்ரங்கள் 1008லும்
மிகச் சிறப்புவாய்ந்ததும், ஐந்து பூதங்களுக்குள் மிகச்ரேஷ்டமாயும்,
கடைசியான பாகமாக அமைந்துள்ள ஆகாசம் என்றும் பெயர்வாய்ந்த
தும், மந்த்ரசாஸ்த்ர ப்ரஸித்தமாக பார்த்தால் முதன்மையாக உள்ளதும்,
இடது பக்கமாகத்தான் எண்ணுவது என்ற வழியில் முதல்பாகமடைந்
துள்ளதும், உலக உத்தாரண ஹேதுவுக்கு மிக உத்தமமானது என
சொல்லப்படுகின்றதும், ஈசனுல் தானே நிர்மாணம் செய்யப்பட்டதாக
சொல்லப்படுகிறதும், உலகத்தில் உள்ள நர்த்தனங்கள் ஒன்பதுக்கும்
மேலானதும், உண்மையில் தானே நடித்து காட்டவேணுமென எண்
ணங்கொண்டு நடத்திக்காட்டிய இடமாயும், காளிக்கு கர்வமடக்கியதும்,
அதை நடத்திக்காட்டியதில் கடைசியில் அவமானமடைந்து எல்லைக்கு
அப்புறம் செல்லுகிறேன் என ஒப்புக்கொண்ட இடமாயும், முநிச்ரேஷ்
டர்களான பதஞ்சலி வ்யாக்ரபாதர்களால் நன்கு ஸதா பூஜிக்கப்படு
கிறதும், ஆனந்த தாண்டவம்தான் உலகில் உயர்ந்த தாண்டவம் என
அறியத்தகுந்ததும், அடைந்தால் உடனே முக்தி அடையும் இடமாயும்,
விஷ்ணுவை தனக்கு ஒத்தாசை செய்யவேணுமென எண்ணியே அவர்
வேண்டுகோளுக்கிணங்கி, இங்கேயே இருக்கவேணுமென உத்தரவு
அளித்த இடமும், சிவ விஷ்ணு அபேதமின்றி தர்சனம் செய்ய
யோக்யமுடையதும், முள்ளிச்செடிக்கு முக்திகொடுத்ததும், அப்பய்ய
தீக்ஷிதர், நந்தனர், மற்றும் பலருக்கு முக்தி அளித்ததும், மறுஜென்மம்
இன்றி முக்தி அடைய பார்த்தமாத்திரத்திலேயே முக்தி க்ஷேத்ரமாயும்,
உபமன்யுக்கு பாற்கடல் அளித்த க்ஷேத்ரமாயும், ஜனங்களுக்கு ஜன்மங்
களில் ஸம்பாதித்த பாபங்களை துலைக்கும் க்ஷேத்ரமாயும், அபயகரத்
தினுல் தனது மாயையின் போக்கை அடக்கிவந்தவரும், உலகிற்கே
திலகம் போல் விளங்கி மற்ற க்ஷேத்ரங்களுக்கு வழி காட்டியாயும்,
ஸமஸ்த ஈச்வரர்களும் இவ்விடம் இரவில் லயமடைவதால் மிக்க
பெருமை வாய்ந்ததும், வைதீக பூஜாதுரந்தரகார்யங்களுக்கு உலகில்
முக்ய ஸ்தானம் வகிப்பதும், உபநிஷத்துகளில் சொல்லி வர்ணித்துள்ள
உருவ ஸாக்ஷாத்காரத்தை நேரில் பாராதவர்களுக்கு பார்த்தே முக்தி
அடையலாம் என காண்பிப்பதுபோல் இருப்பதும், குஞ்சிதசரணத்தில்

அடைந்தவர்களுக்கு உடனே முக்தி அளிப்பதும், அனந்தமான ஆனந்தமளிப்பதும், பலவித 64 லீலைகளில் உண்மையாக உள்ள உருமுடையதும், ஸ்வயம்ப்ரகாசமாகவே இருப்பவரும், கைலாஸத்திலிருந்து முனிவர்களை முன்னிட்டு ஒரு ஸமயம் தானே வேண்டுகோளுக்கிணங்கி திரும்பியவரும், எப்பொழுதும் ஸ்திர வாஸமாக அடைந்தவரும் ஸிம்ஹவர்ம சக்ரவர்த்திக்கு ரோகத்தை நிவர்த்திசெய்து அவருக்கு அநுக்ரஹம் செய்த இடமும், 3000 முனிவர்களுள் ஒருவராக காணப்படுபவரும், க்ருஷ்ணன் பூஜித்து அன்பான புத்ரனை அடைந்த க்ஷேத்ரமாயும், இந்த்ரனுடைய கஷ்டத்தை நிவர்த்தித்த இடமாயும், வருணனுக்கு ஏற்பட்ட ப்ரம்ஹஹத்தியை நிவர்த்திசெய்ய கங்கணம் கொண்ட க்ஷேத்ரமாயும், ப்ரம்ஹாவினுல் ப்ரார்த்திக்கப்பட்டபொழுது முனிகளையும் மற்றவர்களையும் யாகத்திற்கு பூர்த்திசெய்ய் அநுக்ரஹித்த இடமாயும், உலகிலேயே யாவரும் போற்றத்தக்க இடமாயும், சரீர அமைப்பு போல் உள்ள க்ஷேத்ர உருவமாயும், 64 கலைக்கும் மிக்க உருவமடைந்து இருப்பதாயும், மஹணீயகுணமுடைய மஹிமையே எப்பொழுதும் முநிகள் உச்சரிப்பதாயும், தன்னைவிட ஆராதிக்கும் தீக்ஷிதர்களை முக்யமாக உயர்வு என தன் வாயால் உரைத்தவரும், மூர்த்தி, தீர்த்தம், க்ஷேத்ரம் என்ற மூன்று விஷயங்களுக்கும் குறிப்பு உள்ளதாயும், வ்யாஸ மஹர்ஷியால் ஸ்தோத்தரித்த க்ஷேத்ரமாயும், ஸ்காந்த புராண அந்தர்கதமாயும் ஐந்து மஹாத்மியங்களால் ப்ரகாசிக்கிறதாயும், தமிழ் வேதங்கள் எழுதிய அப்பர், ஸுந்தரர், ஜ்ஞானஸம்பந்தர், மணிவாசகர் முதலானவர்களால் பாடப்பட்டதாயும், பாணினி, பதஞ்சலி முதலான எல்லோராலும் எழுதிய புஸ்தகங்களுக்கு அரங்கேற்று அளித்த இடமாயும், பெரியபுராணம் எழுதிய சேக்கிழாருக்கு அடி எடுத்துக்கொடுத்த க்ஷேத்ரமாயும், உலகிலுள்ள மூர்த்திகளுள் மிக பெருமை வாய்ந்த உருவமாயும், பாக்யமுள்ளவர்களுக்கு அடைவதில் மேன்மைவாய்ந்த தன்மையும் உள்ள சிதம்பர க்ஷேத்ர மஹாத்மியங்களுள் முதலாவதான "சிதம்பர மஹாத்மியம்" வடமொழியிலிருந்து உள்ளது உள்ளபடியே மொழிபெயர்ப்பு செய்து வெளியிட்டுள்ளேன்,

அதில் என் ஸொந்த அபிப்ராயங்கள் இல்லாமல் உள்ளதை உள்ளபடியே எழுதி இருப்பதால் வித்வான்களும், மற்றவர்களும், பார்த்து இன்பமடைவதோடு அன்றி முக்தி படி அடைய எல்லாம்வல்ல ஈசன் அநுக்ரஹம் அளிப்பாராக!

அடுத்த புராணங்கள் புண்டரீகபுர மஹாத்மியம், ஹேமஸபா மஹாத்மியம், தில்வாரண்ய மஹாத்மியம், வ்யாக்ரபுர மஹாத்மியம் மற்றும்பல வெளிவருவதை ஈசன் எனக்கு அநுக்ரஹம் செய்ய வேண்டுகிறேன்.

சுபம்!

**C. S. ஸச்சிதானந்த தீக்ஷிதர்,**
No. 6 தெற்குஸந்நிதி,
சிதம்பரம்.
6—5—52.

ஸ்ரீசித்ஸபேசாய மங்களம்.

# அன்புரை.

**சாஸ்த்ராசார்ய ராஜா. ஸோமசேகர தீக்ஷிதர்,**
தெற்குவீதி, சிதம்பரம்.
1—5—52.

1. "ஆலயந்தொழுவது சாலவு நன்று" என்று ஸ்ரீஸரஸ்வதியின் அவதாரமான ஔவையாரின் தர்மஸூத்ரம். இதன் பொருள்; ஆலயம் = தேவாலயத்தை. தொழுவது = வணங்குவது. சாலவு = மிகவும் நன்று = நல்லது என்று. தேவாலயம் என்பது; தேவர் வஸிக்கும் ஸ்தானம் பிண்டமும் அண்டமுமாகும் பிண்டம் நமது சரீரம், அண்டம் இவ்வுலகு. கடவுள் ஒன்றே; கடவுள் ஒருவர் இருக்கிறார், கடவுள் எல்லாம் அறிந்தவர் என ஆன்றோர்கள் வாக்கியம் அந்தக் கடவுள் ஒருவரே கார்யவிசேஷத்தால் மூன்றுவிதமாகவும் கூறப்படுகிறார். ஸ்ருஷ்டியில் ப்ரம்ஹரென்றும், ஸ்திதியில் விஷ்ணுவென்றும், ஸம்ஹாரத்தில் ருத்ரரென்றும், அவருடைய சக்தியை முறையே ஸரஸ்வதி, லக்ஷ்மீ, பார்வதீ என்றும், இவர்களுக்குள் ப்ரஹ்மாவினுடைய பிரிவு, அஷ்டவஸுக்கள், இந்திரன் ப்ரஜாபதி என்று பத்தாகவும், விஷ்ணுவினுடைய பிரிவுகள் பன்னிரண்டு ஸூர்யர்களாகவும், ருத்ரருடைய பிரிவுகள் ஏகாதச ருத்ரர்களாகவும் ஆக முப்பத்தி மூன்று தேவர்களாகவும், இவர்கள் ஒவ்வொருவரும் கோடி பேதமடைவதால் முப்பத்திமுக்கோடி தேவர்களாகவும் கூறப்படுகின்றனர். பிண்டத்தில் இருக்கும் தேவாலயமாவது, சிரஸ் — ஸ்ரீபர்வதம், நெற்றி — கேதாரம், புருவங்களுடைய நடுவு—காசி, குசஸ்தானம்—குருக்ஷேத்ரம், ஹ்ருதயாம்புஜம்—ப்ரயாகை, ஹ்ருதயமத்யம்—சிதம்பரம், ஆதாரம்—திருவாரூர், என்றும்; யோகசாஸ்த்ர ப்ரசித்தமான, மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம், மணிபூரம், அநாஹதம், விசுத்தி, ஆக்ஞை, என்றும், ஆறு ஸ்தானங்களும் ஈச்வரனை உபாஸிக்கக்கூடிய ஸ்தானங்களென்றும், வேத சாஸ்த்ரங்களால் கூறப்படுகின்றன. இதுபோல் அண்டத்திலும் கீழ் கூறியவாறு ஸ்ரீ சைலம் முதலான க்ஷேத்ரங்களும், மூலாதாராதி ஸ்தான பிரதிநிதிகளாக, முறையே திருவாரூர், திருவானைக்காவல், திருவண்ணாமலை, சிதம்பரம், காளஹஸ்தி, காசி, ஆகிய க்ஷேத்திரங்கள் கூறப்படுகின்றன.

2. பிண்டத்தில் ஈச்வரனை உபாஸிப்பதே முக்யமாகும், ஆயினும் பெரிய யோகிகளால் செய்யக்கூடிய கார்யமாதலால் அதற்கு வழியாக அண்டத்தில் உபாசிக்க வேணும், இந்த ஸ்தானங்களுக்குள் சரீரத்தில் ஹ்ருதயஸ்தானமானது ஈச்வரனை உபாஸிப்பதற்கு முக்யமென்றும், அதில் ஈச்வர ஸான்னித்யம் அதிகமென்றும், ஹ்ருதயத்தில் உபாஸிப்பதையே, தஹரவித்யை என்றும், சாஸ்த்ரங்கள் கூறுகின்றன. ஆகையால் அண்டத்திலுள்ள தேவாலயங்களுக்குள் விராட் புருஷனுடைய ஹ்ருதயஸ்தானமான, சிதம்பராலயத்தை ஸேவிக்க வேண்டியது அவச்யமாகும். இந்தக்காரணம் பற்றியே ஆலயங்களுக்கு கோயில் என்று பொதுப்பெயராயிருந்த போதிலும்; சிதம்பராலயத்திற்கே, கோயில் என்று பெரியோர்களால் வழங்கப்படுகிறது. கோயில்களுக்குள் முக்யமென்றுஅர்த்தமாகும், சிதம்பரத்தில் ஸ்ரீ நடராஜரை உபாஸிப்பதே தஹரவித்யை என்று சாந்தோக்யம், கைவல்யம், முதலான உபநிஷத்துக்களில் தெளிவாக கூறப்படுகின்றன.

3. அதில் சாந்தோக்ய உபநிஷத் = ப்ரம்ஹபுரம் என்கிற சரீரத்தில் புண்டரீகாகாரமான ஹ்ருதய க்குஹத்தில் அதிஸூக்ஷ்மமான ஆகாசத்தில் ஜ்ஞானாகாச ரூபியான பரமாத்மாவை அனுஸந்தானம் செய்யவேண்டுமென்று தஹரோபாஸனத்தையும், ஹ்ருதயத்தில் தான் பரமாத்மாவின் ப்ரகாச ஸ்தாபனமென்றும்; ஹ்ருதயசப்த நிர்வசனத்தையும் கூறுகின்றது. இந்த தஹரோபாஸனஸ்தானமான ஹ்ருதய சப்தத்திற்கு ஆத்யாத்மிகமான மனுஷ்ய சரீரஹ்ருதயமென்றும், ஆதிபௌதிகமான விராட் புருஷனுடைய ஹ்ருதயமான சிதம்பர க்ஷேத்திரமென்றும், இருவகையான அர்த்தத்தை ப்ரம்ஹஸூத்ரகர்த்தாவான ஸ்ரீ வேதவ்யாஸ மஹர்ஷி; ஜைமினிக்கும், ஸூதருக்கும் புண்டரீகபுர மஹாத்மியத்தில் முதல் அத்யாயத்தில் விசதமாய் உபதேசித்து இருக்கிறார். இந்த அபிப்ராயத்தை ப்ரம்ஹஸூத்திரத்தில் தஹராதிகரண பாஷ்யத்தில் ஸ்ரீநீலகண்டாசார்யாளும் சிதம்பரம் என்ற பதத்தால் ஸூசனம் செய்திருக்கின்றனர்.

4. ஆதி தைவிகமெனும் மூன்றாவது உபாஸனமாக; ஸ்ரீவிஷ்ணுவை நமது ஹ்ருதயத்தில் த்யானம் செய்து அவருடைய ஹ்ருதயத்தில் பரமாத்மாவை உபாஸிப்பது என ஸூதஸம்ஹிதையில் விரிவாக கூறப்பட்டுள்ளது.

5. ஆதலால் ப்ரம்ஹபுரமான விராட் சரீரத்தினுடைய புண்டரீக ரூப, ஹ்ருதயரூபமான சிதம்பர சித்ஸபையில், தஹர சிதாகாச ரூபியான ஸ்ரீ நடராஜமூர்த்தியை தரிசிப்பது தஹரோபாஸனமாகும்; என்பதை ச்ருதி, ஸ்ம்ருதி, புராணம், ப்ரம்ஹஸூத்ரம், முதலானதுகள் ஸ்பஷ்டமாய் போதிக்கின்றன.

6. ஆகையால்; இந்த சிதம்பர க்ஷேத்திரத்தில் வஸிப்பவர்கள் யாவரும் தஹரவித்யோபாஸகர்கள் என்கிறபடியாலும், ச்ருதி ரீதியாக தர்சனத்தினாலேயே முக்தியளிக்கும் க்ஷேத்ரமாகையாலும், ஹ்ருதய திருப்தியால் சரீரம் முழுவதும் திருப்தியடைவது போல் ச்ருதி ப்ரமாணப்படி விராட் ஹ்ருதய புண்டரீக வாஸியான ஸ்ரீ நடராஜ பூஜையால் ஸகல க்ஷேத்ரமூர்த்திகளின் திருப்தி எற்படுகிறபடியாலும், ஸகல இந்திரியங்களும் ஸுஷுப்தியில் லயத்தை அடைவதுபோல் ஸகல க்ஷேத்திரங்களும் சிதம்பரத்தில் லயமடைவதாலும், மற்றக்ஷேத்திரங்களில் இருக்கும் தேவதைகள் அர்த்தயாம ஸமயத்தில் சிதம்பரம் வந்து தர்சிக்கிறபடியாலும், ஸ்வஸ்வரூபானு ஸந்தானத்தால் ஆனந்த தாண்டவம் செய்கின்ற திவ்ய நடராஜமூர்த்தியை முகூர்த்தகாலம் த்யானம் செய்வதால் ஸர்வபந்த முக்தர்களாகினரூர்கள் என்று வராஹோபநிஷத் கூறுவதாலும், அன்ய, திவ்யக்ஷேத்ர மூர்த்திகளின் உபதேசத்தால் மணிவாசகர், நந்தன், முதலான பக்தகோடிகள் சிதம்பரம்வந்து முக்தியடைந்திருப்பதாலும், ஸூதஸம்ஹிதாதி பல புராணங்களால் போற்றப்பட்ட சிவகங்கை, பரமானந்தகூபம் முதலிய திவ்யதசதீர்த்தங்களோடு கூடியிருப்பதாலும், ஈச்வரனுடைய அநேக க்ஷேத்திரங்களுக்குள் சிதம்பரம் மிகச் சிறந்தது.

7. க்ஷேத்திரம், தீர்த்தம், மூர்த்தி, பூஜை, பூஜகர்கள், என்னும் ஐந்து அங்கங்களுடன் கூடியது புண்யஸ்தல மாகும் என்கிற ஆன்றோர்களின் வாக்கின்படி இச்சிதம்பரத்தில் ஐந்தும் மிகவும் உயர்வாக அமைந்திருக்கின்றன. முன் மூன்றும் முன்பு விவரிக்கப்பட்டன. பின்புள்ள பூஜை என்பது இச்சிதம்பரத்தில் மட்டும் வைதீக பூஜையை குறிக்கும் மஹாபாஷ்ய கர்த்தாவான ஸ்ரீ பதஞ்சலி மஹரிஷி "பூஜா பாதஞ்ஜலம்" என்றும் க்ரந்தத்தில் ஸ்ரீ நடராஜரின் நித்ய நைமித்திக விசேஷ உத்ஸவாதி வைதீக பூஜா கல்பங்களை தெளிவுர எழுதியுள்ளார். அதன்படியே இன்றளவும் சிதம்பரத்தில் ஸ்ரீ நடராஜமூர்த்திக்கு வைதிக பூஜை நடைபெற்று வருகிறது என்பது மற்றும் ஓர் உயர்வாகும். தீக்ஷிதர்களின் உயர்வு பற்றி சிதம்பர மஹாத்மியத்தில்

"தில்லை மூவாயிரவருள் நானும் ஒருவன்" என ஸ்ரீநடராஜ மூர்த்தியால் போற்றப்பட்டது. நான்காம் அத்யாயத்தில் விரிவாக குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்விதம் மஹா மஹிமை வாய்ந்த சிதம்பர க்ஷேத்திரத்தின் பெருமை தெரிந்து தொழுவது சாலச்சிறந்தது.

8. ஆதலால் அதன் பெருமைகளை விளக்கிக்கூறும் மஹாத்மியங்கள் ஐந்து ஊரின் பெயராலேயே ஏற்பட்டுள்ளன. அவையாவன; சிதம்பர மஹாத்மியம், புண்டரீகபுர மஹாத்மியம், ஹேமஸபாநாத மஹாத்மியம், வ்யாக்ரபுர மஹாத்மியம், தில்லாரண்ய மஹாத்மியம் என இவைகள் வடமொழியில் உள்ளன. முன்னிரண்டும் க்ரந்த அக்ஷரத்தில் வெளிவந்துள்ளன. மற்றவை ஹஸ்தலிகிதமாக இருக்கின்றன. இவ்வைந்து மஹாத்மியங்களின் ஸாரமாவது; உலகில் இந்த சிதம்பர க்ஷேத்ரம் உயர்வானது. இதைக்காட்டிலும் இங்குள்ள சிவகங்கை என்னும் தீர்த்தம் மிக உத்தமம். இதைக்காட்டிலும் சிதம்பரமென கூறப்படும் ஸ்ரீமன் நடராஜருடைய ஆனந்ததாண்டவ ஸ்தானமான சித்ஸபை மிக உத்தமம். இதைக்காட்டிலும் சிதம்பர பஞ்சாக்ஷர மந்திரமானது மிக உத்தமம், இதைக்காட்டிலும் ஸ்ரீ நடராஜராஜர் மிக உத்தமோத்தமர். இவை எல்லாவற்றைக்காட்டிலும் ஸ்ரீமதானந்த நடராஜராஜருடைய திவ்ய குஞ்சிதசரணகமலம் மிக மிக ச்ரேஷ்டமானது.

9. ஆகையால் அல்ப பலத்தை தருகின்ற மற்றதேவகணங்களை விட்டு ஸ்ரீமதானந்த நடராஜனின் குஞ்சிதசரண தர்சனமாத்திரத்தினாலேயே மஹரிஷிகளது மஹாதபோ விசேஷங்களால் அடையக்கூடிய பரம முக்தியையும், பாபியான மனுஷ்யனும் அடைகின்றான் என பலவாறு உயர்வை எடுத்துக்கூறும்; சிதம்பர மாஹாத்மியம் தென்மொழியில் செய்யுள்களாக கோயில் புராணம் என பெயரிட்டு உமாபதி சிவாசார்யர் அவர்களால் செய்யப்பட்டு வெளிவந்திருக்கிறது. இப்பொழுது வடமொழிக்கு வசனநடையில் எல்லோரும் படித்துணர எளிய தமிழ் நடையில் மொழிபெயர்த்து நமது ஸஹாத்யாயீ உபன்யாஸ ரத்னாகர C. S. சிவகாமஸுந்தர தீக்ஷிதர் அவர்களின் புத்ரர் பௌராணிக ரத்னம் உபன்யாஸ சரப ஸம்ஸ்க்ருத விசாரத C. S. ஸச்சிதானந்த தீக்ஷிதரால் வெளியிடப்படுகின்றது. ஆகையால் ஆஸ்திகர்கள் இந்நூலை ஆதரித்து வாங்கி, படித்து, அதன் பொருளை அறிந்து அதன்படி ஸ்ரீ நடராஜரை தர்சித்து விசேஷ நன்மைகளை அடைய ஸ்ரீ நடராஜரை பிரார்த்திக்கின்றோம்.

10. மேலும்; இச்சிதம்பர மஹாத்மியம், ஸ்ரீஸ்காந்த மஹா புராணத்திலுள்ளது. இதிலுள்ள அத்யாயங்கள் 26, ச்லோகங்கள் 1442 சிதம்பர மஹாத்மியத்திற்கு செய்யுள்களாக அமைந்த கோயில் புராணம் இருப்பதுபோல் புண்டரீகபுரமஹாத்மியத்திற்கும், ஹேமஸபா நாத மஹாத்மியத்திற்கும் முறையே தமிழில் உமாபதி சிவாசார்யர் அவர்களின் மாணுக்கர் பரம்பரையில் உள்ள "சைவபரஞ்ஜோதி முனிவராலும் ஸபாபதி நாவலராலும் செய்யுள்களாக, முறையே சிதம்பர புராணம் & சிதம்பரஸபாநாத புராணம், என்று இயற்றப்பட்டுள்ளன. இப்பொழுது வசன நடையில் சிதம்பர மஹாத்மியத்தை மொழி பெயர்ப்பாளர் வெளியிடுவதுபோல் மற்றுமுள்ள நான்கு மஹாத்மியங்களையும் வெளியிட முயற்சி செய்து வருகிறபடியால் சீக்ரத்தில் வெளிவர ஸ்ரீநடராஜர் அருள்புரியவேண்டுகிறோம். இச்சிதம்பர மஹாத்மியத்திலுள்ள விஷய ஸூசிகையை சிறிது தெரிவிப்போம் — எல்லாம் ஸ்ரீநடராஜர் கிருபை.

———

# விஷய ஸூசிகை.

இயற்றியவர்,

மதுரகவி N. S. மீனாக்ஷிநாத தீக்ஷிதர்,

தெற்குவீதி, சிதம்பரம்.

ராகம்: பிலஹரி. தாளம்: ஆதி.

பல்லவி

1. நடனம் ஆடுகின்றான் சிதம்பரநாதன்
பாம்பும் புலியும் நிதம்பதம் பணிய (ந)

அனு பல்லவி

விடமுண்ட கண்டன் விரிசடையுடன்
இடர் களைந்தெரிய இடைவிடாமல் (ந)

சரணம்

எண்டிசையும் வணங்க ஸாமகானம் ஒலிக்க
தொல்லையில்லா தில்லை வாழந்தணர் மகிழ
வண்டுவிழி சிவகாமியோடு கனக ஸபையில்
ஆனந்த மாகவே ஒருபாதம் தூக்கி (ந)

---

ராகம்: ரஞ்சனி. தாளம்: ஆதி.

பல்லவி

2. ஆனந்த கூத்தாடினான் அம்பலவாணன்
சித் ஸபையில் வையம் உய்யவே (ஆ)

அனு பல்லவி

வானமும் புலியும் பதஞ்சலியும் புலியும்
மாலோடு அயனும் குஞ்சிதபாதம் பணிய (ஆ)

சரணம்

சேந்தழலும் ஒருகையில் உடுக்கையும் தாங்கி,
மக்கள் நலம்பெறவே தான்மிக ஏங்கி
சிந்தை மகிழுற சிவகாமி யோடு
சிதம்பரநாதன் பரிவு மிக கொண்டு (ஆ)

---

௨

# சிதம்பர மாஹாத்மியம்.

(வடமொழிக்கு மொழி பெயர்ப்பு.)

எதினின்று அண்டபிண்ட ஜகத் முழுமையும் உண்டாயிற்றோ? அந்த கருணாமூர்த்தியான நடேசருக்கு நமஸ்காரம் செய்கிறேன்.

நைமிசாரண்யத்தில் ரிஷிகள் ஸர்வஸம்பத்துகள் அடைந்து, சுத்தமான இடத்தில் எப்பொழுதும் கடுமையான தபஸ் செய்து, வஸிக்கலாயினர். நித்தியம் ஆனந்தத்தைத் தரும் பரப்ரும்ஹ ஸ்வரூபத்தைப் பற்றி பேசிக்கொண்டும், நிதான புதயலான ஸர்வ உலகங்களுக்கும் ஸம்ஸார பயத்தைத் தவிர்க்கும் உபாயத்தை தேடி, வித்யையால் அவர்கள் ப்ரகாசிக்கிறவர்களாகவும், பொருமையுள்ள சாந்தி அடைந்தும், அநுபூதிக்குள்ள ஸர்வ ஆசைகள் அற்றும், மறுபடியும் அநுபூதியையே பேசிக்கொண்டும், புண்ய தபஸினால் ப்ரஸன்னர்களாகியும், பூர்ண உல்லாஸமடைந்தும், அஹங்காரமற்றும், வேறு கார்யங்களினின்று விடுபட்டவர்களாகியும், சிவபூஜையே செய்து கொண்டும் இருந்துவந்தனர்.

தபஸினாலேயே புராணம், வேதம், இவைகளை சிந்தித்தலின் பொருட்டு பலநாட்களை ஒருநாழி கடந்ததாக எண்ணியும் வந்தனர். ஸூர்ய மண்டலம் போன்ற ப்ரகாச முடையவர்களாகவும், ஜ்வலிக்கும் அக்னி போன்ற சரீர உருவமுடையவர்களாகவும், ஜடை உடையவர்களாகவும், கண்ணால் பார்த்த மாத்ரத்திலேயே சுத்தமான உலகில் நான்குபுறமும் தேடுகிறவர்களாகவும், ஆனந்த முள்ள அடுக்குகளுடைய மூல பாகமுடையவர்களாகவும், சாந்தி போன்ற ஸமுத்ரத்திற்கு சந்த்ரன் போலவும், தஹிக்கிற அஞ்ஞானங்களை பிளக்குகிறவர்களாகவும், புண்யத்திற்கு முளைபோன்ற சுத்த பூமியை அடைந்தவர்களாகவும், இருந்துவந்தனர்.

ஜன்ம துக்கத்தை நீக்க நித்யம் ப்ரம்ஹத்தை ஆச்ரயமடைந்து ஜகத்தின் பரிசுத்த ஹேதுவுக்கு நித்யமான புண்ய ஹ்ருதயமுடையவர்களாகவும், காணப்பட்டனர். சுத்தர்களாய், அஹங்காரமற்றவர்களாய்,

தத்வ ஞானத்தை காண்பிக்கிறவர்களாய், சுத்தமான ப்ரஸன்னமுடைய தாமரைபோன்ற முகமுடையவர்களாய், ஸூர்யன் போலும் இருந்து வந்தனர்.

பிறகு ஒரு ஸமயம் குறைவற்ற ஸம்பத்துகள் அடைந்த ஸர்வ ரிஷிகளையும் பார்க்க, வ்யாஸரின் தபஸ் பலமாய் உருவெடுத்த ஸூதர் அங்குவந்தார்.

புராணமறிந்த முதன்மையான ஸூதரை மஹாத்மா போல் கண்டு, முநிகள் எதிர் கொண்டு அதிக ஆனந்த சித்தத்துடன், அவரை அழைத்தனர். அவ்விடம் க்ஷணிக காலம் அதிக கௌரவத்தால் ஆஸனத்தில் உட்கார வைத்து, நன்ருக நியமப்படி அர்க்யம் முதலிய பூஜைகளால் பூஜித்தனர். நேரில் அஞ்சலி செய்த முகமுடையவர்களாகி உட்கார்ந்து, மஹா புண்யமே உங்களது வருகை, உத்ஸவம் போன்றது, என ஸந்தோஷித்தனர். பூஜையால் அடிக்கடி ப்ரஸன்ன முகமுடைய ஸூதரை தேஜஸ்வியான முநிகள் ஸந்தோஷ ஹ்ருதயத்துடன் கேட்டனர்.

ரிஷிகள்—ஸூதரான நீர் ஸகல புராணங்களையும் அறிந்தவர். உமது பரிசுத்தமான தேஜஸ் இரண்டாவது ஸூர்யன் போல் ஜகத்தில் காண்கிறது. ஸமஸ்த புராணங்களுக்கும் நீரே குறைவில்லா ஆதாரம். லோகாநுக்ரஹார்த்தம் வ்யாஸர் முன்பு ஸ்ருஷ்டித்தார். பூமியில் எவ்வளவோ சிவஸ்தானங்கள் உள. அதன் வைபவங்களை எல்லாம், இதற்கு முன் விஸ்தாரமாக எங்களுக்கு சொல்லப்பட்டுள்ள புராண விஷயங்களில் கேட்டோம்.

அதற்குள் மறுபடியும் புண்டரீகபுரம் என்ற ஆச்ரயமுடைய, ப்ரபாவ புண்யத்தைக் கொடுக்கவல்ல, நித்ய போகமோக்ஷங்களுக்கு ப்ரமாணமுள்ள, விஷயங்களை நாங்கள் கேட்க விரும்புகிரும். ஸம்ஸாரத்தில் சேர்த்த பாபங்கள் மநுஷ்யர்களுக்கு அடைந்துள்ளது. க்ஷணிக காலத்தில் அதை போக்கவல்ல விஷயத்தை, உங்கள் மூலம் கேட்க பெரிய ஆதரவு எங்களுக்கு இப்பொழுது உள்ளது.

ஆகையால் ஸூதரே! அவ்விஸ்தார வைபவமுடைய பரமான ஜ்ஞானமடைய ஹேதுவுள்ள தத்துவார்த்தங்களை அறிந்த நீர் வியாஸர் சிஷ்யரானபடியால் சொல்லுதற்கு யோக்யமாகிறீர் என்று ஸமஸ்த

முநிகளும் தத்வ ஜ்ஞானத்தைத்தேடும் அபிமான முடையவர்களாகி, சொல்லிய பின் பௌராணிக ச்ரேஷ்டரான ஸூதர் அதிக ஸந்தோஷத் துடன் இருந்தார். ஜகத்காரணமுள்ள ஆதி அந்தம் இல்லாத புருஷனை புருஷார்த்தத்திற்கு அடைந்து, ஈசனையும், குருவான வ்யாஸரையும், நமஸ்கரித்து சொல்ல ஆரம்பித்தார்.

ஸூதர்—முநிகளே! நல்லது நல்லது உங்கள் பாக்யம் அநுஸரித்த புத்தி, எல்லாவற்றையும் கேட்க ஆசைப்படுகிறது. அவ்விடம் நூற்றுக் கணக்கான ஜன்மங்களானலும் நினைக்கத்தக்கது. இன்றைக்கும் வேதாகமங்களாலும், அசைக்கமுடியாத அதன் வைபவத்தை அறிய, மூன்று உலகங்களில் யார் சக்திவாய்ந்தவர்கள் உளர். தேவச்ரேஷ்டர் ப்ருஹஸ்பதி, நீதி விஷயமறிந்த அசுரகுரு சுக்ராசார்யார், ஆயிரம் முக முடைய சேஷன், மஹாபுத்திசாலியான ஸ்கந்தர், விக்னங்களை ஒழிக் கும் கணபதி, தேஜஸ் அதிபதி ஸூர்யன், இவர்கள் ஜகத்பதியான ஈசனைக் காண ஒரு ஸமயம் சென்றனர். திக்கு அதிபதிகள், பெரிய பராக்ரம சக்தி உடையவர்கள், முநிகள், முதலான எல்லோரும் சென்று அவருடைய விசேஷ மகாத்மியத்தை அறிய முடியவில்லை. மறை தலுக்கு எல்லாம் மறைவுள்ள, இப்பட்டணம் ப்ரம்ஹபுரம் என்ற பெய ருடையது. பரமேச்வரன் நர்த்தனத்திற்கு ஸதா விஸ்தாரமுள்ள நர்த்தன ஸ்தானம். இவ்விடம் இது, ஸத்யமாக உள்ளது. சொல்லு கிறேன் கேளுங்கள். எந்த பட்டணத்தை சங்கரர் அறிகிருரோ? அதை மூன்று உலகிலும் வேறு ஒருவராலும் அறிய முடியாது.

ப்ரம்ஹா, விஷ்ணு, ப்ரபஞ்சம், இவைகள் எல்லாம் எவர் அம்ச மாகச் சொல்லப்படுகிறதோ? அந்த தேஜஸ்தான் எப்பொழுதும் ஆனந்தத் தாண்டவம் செய்துகொண்டிருக்கிறது. அதன் ஸமீபத்தில் மஹாதேவி, ஸதா தாண்டவத்திற்கு ஸாக்ஷியாக, ஸர்வ உலகங்களுக் கும் ஆனந்தத்தைக் கொடுப்பவளாக, ஸூர்யன் போல் ப்ரகாசிக்கிருள். எந்த தேவியின் புன்னுநவல் காந்தி, உலகிற்கு நல்முத்துபோல் ப்ர காசிக்கிறதோ? அந்த தேவி பரமான ஆனந்தமுடையவள். அவள் சந்த்ரோதயம் போன்ற இரவு உருவமுடையவள். எவளுடைய கடைக் கண்ணிஞல் ஸகல ஸம்பத்துகளும் கிடைக்கிறதோ? அவள் சிவ என்ற பதத்தை முன்னுடைய பெயரிஞல் காமஸுந்தரி என்ற பார்வதியும் ஆவள். சிதம்பரம் என்ற பெயருடைய க்ஷேத்ரச்ரேஷ்ட மஹிமையை மஹாதேவரும் அறிவரோ? மாட்டாரோ? தெரியாது.

18 புராணங்களிலும் இதுதான் புராணம். பரம ஸம்மதமுள்ளது. போக மோக்ஷங்களைக் கேட்ட மாத்திரத்திலேயே பாபங்களை விலக்கி, கொடுக்கக்கூடியது. இந்த சிதம்பரம் உண்டான விஷயம் புராணமாக உள்ளபடி பரமேச்வரனே முந்நாளில் ப்ரீதியுடன் நந்திக்கு கேட்கையில்; சொல்லியது. அதை அவர் ஸனத்குமார முனிக்கு விஸ்தாரமாக ச்ரத்தையுடன் சொன்னார். அவர் ச்ரத்தையுடன் வ்யாஸருக்கு விரிவாக மறுபடி சொல்லியது. நான் திவ்ய விஷயத்தைக் கேட்ட ஸமயம் எனக்கு சொன்னார். அதை உங்கள் காதுக்கு இனிமையாக சொல்லுகிறேன். சிதம்பர ஆச்ரயமான விஷயத்தை மனிதன் ஒருவன் ச்ரத்தையின்றிக் கேட்டாலும், புராணம் அவனது பாபங்களை உடனே தொலைக்கிறது. இந்தஸ்தானம் தபஸ், தானம், செய்ய மிக்க ஸுகமாகும். தாமரைப் புஷ்பம் போன்ற பரமேச்வர பாகத்தில் எவனுக்கு தாண்டவ வாசனை உண்டாகிறதாக காண்கிறதோ. அவன்தான் புண்யத்தன்மை அடைகிறான்.

முதல் அத்தியாயம் முற்றிற்று.

---

## இரண்டாவது அத்தியாயம்.

சூடாமணி போன்ற ப்ரஸன்ன முகமுடைய கைலாஸ பூபதியை முன்னொரு ஸமயம், நந்தீ நமஸ்கரித்து தெரிவித்தது.

நந்தீ—எப்பொழுதும் அண்ட பிண்ட சராசரம் எங்கும் நீரே கருணை உருவமாக என் எதிரில் விளையாடிக் கொண்டிருக்கிறீர் என எனக்குத் தோன்றுகிறது. பரமாணு, மஹத், எல்லாம் நீரே இருந்து, ஸர்வ உலகங்களுக்கும் ஸ்ருஷ்டி, ஸ்திதி, நாசம், என்ற காரண உருவத்தை காட்டுகிறவர். உமது சக்தி இன்றி ஒரு புல்லும் அசைகிறதில்லை. இது உண்மை. தேவர்களுக்குக் கருணையுடைய உமது பார்வையால் குறைவற்ற ஸுகம் அடையப்படுகிறது. எந்த மனுஷ்யர்களுக்கு ஒரு ஸமயமாவது உமது ஸேவை கிடைத்தாலும், அவர்கள் ஜன்மத்தில் உள்ள நிபந்தனை உள்ள பாசங்களை விட்டு, க்ஷணிக காலத்தில் மோக்ஷமடைகின்றனர். தீர்த்த ஸேவை, தபஸ், ஹோமம், இவை ஒருவனுக்கு கர்மாவினால் கிடைக்காது. உபவாசம், காயக்லேசம், நியமம், இதிஹாசம், புராணம், சாஸ்த்ர சிந்தனை, வேதசிந்தனை, இவைகள் ஒன்றாலும் ப்ரயோஜனமில்லை. தபஸாலும், ஸித்திக்காது. பரமேச்வர பாத ஸேவை மூலம்தான் அது க்ஷணிக காலத்தில் ஸித்தியை அடைவிக்கும்.

உமது ஸேவை முதலிய மற்ற கார்யங்களால் உமது ஸ்வரூபம் அடையச் செய்கிறது, சுபோதயமான உமது பாதங்கள் எவ்விடம் காண்கிறதோ? அவ்விடம் ஸர்வ ஸம்பத் ஸித்திகள் காண்கின்றன. அநேக உயர்ந்த ஸ்தானங்கள் உமக்கு ஸர்வ உலகங்களிலும், இருக்கின் றன. அதனுள் உமக்கு மிக்க ப்ரியமுள்ள இடம் எது முக்யம் என்பதை கேட்கிறேன். அதை எனக்கு சொல்லவேணும். புண்டரீகபுரம் என்ற பெயருடைய பட்டணம் பூமியில் எங்கு ப்ரகாசிக்கிறது? அதன் மஹாத் மியம் உங்களிடம் கேட்க இச்சை அடைந்துள்ளேன். அதன் வைபவம் கேட்க, ஆசை உள்ள எனக்கு விஸ்தாரமாகச் சொல்லவேணும். என நந்தீ சொல்லியவைகளைக் கேட்டு ப்ரஸன்ன முகத்துடன் ஈசன் ப்ரீதி யாகச் சொல்ல ஆரம்பித்தார்.

ஈசன்—நந்தி! நல்லது! கேட்கும் ஆவலுடைய உனக்கு நான் விஸ்தாரமாக ஸர்வ மஹாத்மியங்களையும் சொல்லுகிறேன். என்னைத் தவிர வேறுயாரும் சொல்லமுடியாது. உன்னைத்தவிர வேறு யாரும் கேட்டதில்லை. புண்டரீகபுரம் என்ற பெயருடைய பட்டணம் அற்புத விசேஷங்கள் நிறைந்த விஷயம். அதன் வைபவத்தைக்கேட்க, அகில உலகத்திலும் ஒருவனும் இல்லை. மறுபடியும் ஸாக்ஷாத்தாக அதன் ஸ்வரூபத்தைச் சொல்லமுடியாது என்பது உண்மை. எனது நிர்மல மான எந்த உருவம் பரமரஹஸ்யம் என எவர்கள் அறிகிறார்களோ? அந்த புண்டரீகபுரத்தின் ப்ரபாவ மஹிமையை அவர்களாலும் சொல்ல முடியாது. எந்த க்ஷேத்ர ஸ்மரண மாத்ரத்தினாலேயே அநேக கோடி ஜன்மங்களில் சேர்த்த பாபங்கள் மனுஷ்யனுக்கு விடுபட்டு உடனே மோக்ஷமடையச் செய்கிறதோ? அவ்வூரின் மஹாத்ம்யத்தை வர்ணிக்க என்றால் முடியாது. ஸ்தானங்களில் எல்லாவற்றிலும், அது தான் எனக்கு ஸதா ரொம்பவும் பிரியமுள்ளது.

அவ்விடம் ஒரு யோஜனை விஸ்தீர்ண நீள அகலமுள்ள இடத்தில் முநிகள், யமனை ஸம்ஹரிக்க எப்பொழுதும் என்னையே ஸேவை செய்து கொண்டிருக்கிறார்கள். அவர்களும் பெரிய கௌரவமுள்ள எனது உலகத்தில் சேர்க்கப்படுகிறார்கள். மற்றவர்களுக்கு மூன்று உலகங்களிலும் இவ்விடம் போல் ஸமான இடம் இல்லை. அவ்விஷயத் தில் கேள். அப்பிரபாவத்துடன் எப்பொழுதும் அதைவிட என்றால் முடியாது. எனது மூர்த்தியும், கோபுரங்களும், அங்கு அழகு வாய்ந்த னவை. ஸமஸ்த ஸம்பத்துகளுக்கும் இருப்பிடம். எனக்கும் ப்ரியம்.

ஒரு உபாதி இன்றிப் புண்யங்களுக்கு இருப்பிடமாய், கொடி நந்தவனங்களில் சுபமான உதயமடைந்து, வித்யைகளுக்கு எல்லாம் இருப்பிடமாய், அமைந்துள்ளது. இலையின் வளர்ச்சிக்கு லீலா விநோதமான பெரிய ஒப்பரிகைபோன்ற பட்டணமுள்ளது. காலராத்திரிக்கு ஸமமாக, நித்யம் கலியில் பாபி, ஆதரவுடன் அவ்விடம் வாஸம் செய்வானுகில்; க்ஷணிக காலமோ? அதிகயோ? தாண்டமுடியாத ஸம்ஸார ஸமுத்ரத்தினின்று தாண்டினவனுகிருன்.

அவர்களே செய்த நன்றி உள்ளவர்கள். நித்யம் எனக்கு அவர்கள் ப்ரியமுள்ளவர்கள். உலகத்திற்கு பரிசுத்த ஹேதுவை தேடுபவர்கள். பாபஜன்மம் அடைந்தவனும் சுத்தமடைகிருன். ஜ்ஞான ஸ்வரூபத்துடன் என்னை எவர்கள் நித்யம் கண்ணுல் பார்க்கிருர்களோ? அவர்கள் என்னையே பார்ப்பவர்கள் ஆவர். ஸத்ய ஜ்ஞான ஸ்வரூபத்துடன் என்னையே நமஸ்கரிப்பவர்கள். மிக்க மனேவாக் காயங்களுக்கு எட்டாத வைபவமுடையவர்கள். புலப்படாத சுத்த ஜன்மா அடைந்தவர்களாகிருர்கள்.

மனுஷ்யர்கள் கொஞ்சகாலம் புண்டரீகபுரத்தில் வஸிப்பார்களேயானுல்; அவர்கள் என் உலகத்தில் எப்பொழுதும் பூஜிக்கும் தன்மை அடைகின்றனர்.

இரண்டாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## மூன்றுவது அத்தியாயம்.

ஈசன்—அக்னி எப்படி சுத்தம் செய்யுமோ? அவ்விதமே பாபங்களை பட்டணம் சுத்தம் செய்கிறது. புண்டரீகபுரம் யோகத்திலிருக்கும் முநிகளினுல் போக மோக்ஷங்களுக்காகவே அர்த்தமாக ஸேவிக்கப்படுகிறது. விஷ்ணு, ப்ரம்ஹா, கணபதி, திவ்ய ஆஸ்திகர்களான முநிகளும், என்னை ஆதரவுடன் இப்பட்டணத்தில் ஸேவிக்கின்றனர்.

புராதன முயற்சி உள்ள அந்தஸ்தானம், ச்ருதி ஸ்ம்ருதிகளில் முக்கிய ஸ்தானமாக வஹிக்கிறது அந்த சுபமான புண்ய எல்லை உடைய ப்ரதேசம், காண்பித்து அடைய போதுமானது இல்லை. என்னைப் பார்த்தவர்கள் வேறுபட்டணமடைய மாட்டார்கள். அமங்களம் ஒழிக்கும் தன்மை உள்ள அப்பட்டணம், மற்ற மனுஷ்யர்களால் அடைய

முடியாது. பூமியில் வஸிப்பவர்களுக்கு நித்யம் அப்பட்டணம் ஆனந்த காரண முள்ளது. மஹத்தான தேஜஸ்வினுல் கோடி ஸூர்ய ப்ரகாச முடையது. என நீ தெரிந்து கொள். பழமையான புண்யங்களுக்குக் குறையாத ஸம்பத். நித்யம் என்னுல் நிர்மாணம் செய்யப்பட்டது. அபாயமில்லாதது. இது உத்தமோத்தம ஸ்தானம். இந்த ஸ்தானம் அதிக ஸம்பத்துகளுடன் ஜ்வலிப்பது. ஸமஸ்த வேதவித்துகளும் அங்கு ஸேவிக்கின்றனர். பார்வதியால் என்னை ஆதரவுடன் பூஜிக்கப் படுகிறது. அவ்விடத்திலேயே பரமசுத்த ஸுகபோத ஹ்ருதய ஸ்தானத்தில் இருந்து, பக்தர்களுக்கு நான் நித்யம் பரமான அநுக்ரஹம் செய்கிறேன். ஜகன்மாதாவான பார்வதி எனது இடதுபாகத்தில் அலங்காரமடைந்திருக்கிருள். ஆனந்தத்தால் செய்யப்படும் என் நர்த்தனத்தை ஸதா ஆதரவுடன் பார்க்கிருள்.

விக்னன் போன்ற இருட்டை ஒழிக்கும் ஸூர்யன்போல் பெரிய கீர்த்தி உடைய கணபதி இமை கொட்டாது என் நர்த்தனத்தை ஸந்தோஷ முகத்துடன் பார்த்து ஆனந்தப்படுகிருன். ப்ரம்ஹா, விஷ்ணு, இந்த்ரன், லக்ஷ்மி, ஸரஸ்வதி, இவர்கள் மலர்ந்த கண்ணுடையவர்களாகி, தாமரை போன்ற ப்ரகாச கண்களால் விளங்கும் தன்மையுடன் என்னை பார்க்கின்றனர். சுத்தமான ஜ்ஞானக்கண் அடைந்த மத்யந்தினர் பிள்ளையும், சப்தத்தை எல்லையுடைய பூமிக்கு நாயகனுகத் தாங்கும் ஸர்ப்பங்களுக்கு அதிபன் பதஞ்சலியும், என்னைப்பார்க்கிருர்கள். மூவாயிரம் முநிச்ரேஷ்டர்களை அடைந்த ஹேமவர்ம அரசனும், அவ்விடம் திவ்ய ஆனந்த தாண்டவத்தை ஸாக்ஷாத்தாகப் பார்க்கப் போகிருர்கள். எனது நர்த்தனத்தைக் கேவலம் புழு கூடப் பார்க்க முடியவில்லை என்ருல்? அதற்கு எவ்வளவு புண்யமிருந்தும் பாபமுண்டாகிறது. உண்மையே, என் ப்ரஸாதத்தால் உண்டான திவ்ய தேஜஸுடைய கண்களால் ஆனந்த தாண்டவம் நன்ருகக் காண்கின்றனர். சப்த கூட்டங்களாலும், தர்க்கங்களாலும், மோஹ மடைந்த மநுஷ்யர்கள், பக்தி இல்லாதவர்கள், எல்லோரும் எனது உத்தமோத்தம நர்த்தனத்தைப் பார்க்கமுடியாது. வேதத்திற்குப் புறம்பான நினைத்த மார்க்கமுடைய கேவலப்ரஜைகள், அவ்வழியே போக மோஹமுடையவர்களது என்பது அவர்கள் எனது தாண்டவத்தைப் பார்க்கவே முடியாது. மழுங்காத எனது நர்த்தனத்தை அவ்விடம் எவன் பார்க்கிருனே? அவன் யஜ்ஞங்களால் ஸ்வர்க்கமடையலாம் என அதைச் செய்ய இச்சிக்க மாட்டான். சித்கனமான ஸுகப்ரத முக்தி உள்ள எனது 'நர்த்தனம்

பார்ப்பவர்கள் அங்கு மனதினுல் வேறு ஒன்றையும் அபேக்ஷிக்க மாட்டார்கள். கண்களுக்குப் பரமானந்த தாண்டவம் உத்ஸவம் போன்றது. முதன்மையான பாபம் செய்தவனும் கூட, அடைகிறதில்லை. இது எனது மதம்.

ஜன்மாவிலும் அவனுக்கு அதர்ம மோஹ உற்பத்தி உண்டாகுமானுல், முக்தி அடையாமல், பாசங்களால் கட்டுண்டு, அநேக ஜன்மாக்கள் அடைந்து, சுற்றுகிருன் மோக்ஷ மடைகிறதில்லை. இந்த ஸ்தான வைபவம், வெகுவாகச் சொல்லி முடியாது. ஆகவே உனக்கு விஸ்தாரமாக இங்கு என்னுல் சொல்லப்பட்டது. மறைதலுக்கு எல்லாம் மறைவான விஷயம் மற்ருென்றும் கேள்! கொடுமையான தபஸ் வெகுகாலம் செய்த புண்யவான்களுக்கும் முக்தி கொடுக்கக்கூடியது. யத்னமின்றி அவ்விடம் வஸிக்கும் மநுஷ்யர்களுக்கும் கிடைக்கக் கூடியது. புண்டரீகபுரம் உத்தமோத்தமமாய் உள்ளது.

அந்த அங்கணத்தில் தாண்ட விதி நித்யம் நடைபெறுகிறது. பூமியில் என்னுல் யத்னத்துடன் கல்பிக்கப்பட்டது. ஸர்வ உலகங்களுக்கும், கண்ணுக்கும் பெரிய ஆனந்த உத்ஸவமாக அமைந்துள்ளது.

ஸூதர்—அந்த ஸ்தானத்தின் மஹிமையைச் சுத்த ஆத்மாஉள்ள நந்திக்கு ஈசனுல் முன்பு சொல்லப்பட்டது. அவ்விதமே வ்யாஸர் எனக்கும் சொல்லியது. முநிகளே! புண்டரீகபுரம் மஹத்தானது. மோக்ஷமடைய ஹேது உள்ளது. ஆகையால், ஈசன், ஈச்வரி, இவர்களது ஸேவைக்கு நீங்கள் எப்பொழுதும், அடைக. இத்திவ்ய உருவமுடைய அத்தியாயத்தைப் படிக்கிறவன், கேட்கிறவன, ஸர்வ கஷ்டங்கள் நீங்கி, ஜீவன் முக்தி அடைகிருன் என்பது நிச்சயம்.

மூன்ரும் அத்யாயம் முற்றிற்று.

---

## நான்காவது அத்தியாயம்.

ஈசன்—எவ்விதம் நான் நர்த்தனத்தை பரப்ரகாசமாகச் செய்கிறேனே? ஸதா செய்யும் என்னை பார்வதி அவ்விதம் பார்த்துக் கொண்டிருக்கிருள். அங்கு பக்தி உள்ள மநுஷ்யர்களுக்கும், நான் எப்பொழுதும் ப்ரஸன்னனுகிறேன். ஜகத்தில் நர்த்தனம் செய்யும் என்னைப் பார்த்தவர்கள் பாபங்களைவிட்டு அவ்விடமே மோக்ஷமடைகின்றனர்.

எல்லா ஸ்தானங்களிலும் எனக்கு அந்த ஸ்தானம் மிக்க ஸதா ப்ரியமுள்ளது. அவ்விடம் செய்யும் ஜபம், ஹோமம், தானம், எல்லாம் கணக்கில்லா குணமடைவிக்கும். அவ்விடம் ஓர் ச்ரேஷ்டமான குளம் இருக்கிறது. அதன் பெயர் சிவகங்கை அதன் தெற்குக் கரையில் நான் ஆனந்த தாண்டவம் செய்கிறேன். அந்த விஷயம் கேட்ட மாத்ரத்திலேயே எவனுக்கும் பாப கட்டங்களை உடனே துலைக்கிறது. ஸம்ஸாரத்தில் மூழ்கிய மநுஷ்யனுக்கு கோடி ஜன்ம பாபங்களும் துலைகிறது. ஸர்வ தீர்த்தங்களுள் உத்தமமும், புண்யத்தை விருத்தி செய்யக்கூடியதும், மங்களமுள்ளதுமுள்ள தீர்த்தத்தில் எவர்கள் ஸ்நானம் செய்கிறார்களோ? அவர்கள் உடனே எனது ஸாயுஜ்யமடையக் காரணமாகிறார்கள். பார்ப்பதற்கு அவதாரமுள்ள என்னை விளையாட்டாகவோ? உண்மையாகவோ? மனுஷ்யன் பார்ப்பானுகில், யமனுக்கு சரீரத்தில் நடுக்கமும், பயமும், உண்டாகிறது. அந்த தீர்த்தத்தில் மனுஷ்யன் விளையாட்டாக ஸ்நானம் செய்தாலும், அவன் என் இடமான சிவலோகத்தில் பூஜிக்கப்படுகிறான். இவ்வழகுடைய தீர்த்த ச்ரேஷ்டத்தில் எவன் ஸ்நானம் செய்து, அவ்விடம் தப்ரஸபாநாதனை என்னை, ஸந்தோஷத்துடன் பார்க்கிறானோ? அவன் முக்தியே அடைகிறான்.

அவ்விடம் பிரீதியுடன் (1008 தடவை) எவன் முதன்மையுள்ள ஷடக்ஷர மந்த்ரத்தை ஜபிக்கிறானோ? அவன் ஸர்வ பாபங்களினின்றும் விடுபட்டு, மோக்ஷமடைகிறான். ஸூர்யன் மேஷமாதத்திற்கு வருகையில்; இப் பரிசுத்த தீர்த்தத்தில் மனுஷ்யன் ஸ்நானம் செய்வானுகில்; அவன் உடனே ஸர்வ பாபங்களினின்று விடுபட்டு, மோக்ஷமடைகிறான். மிதுன மாதத்தில், ஸூர்யன் ப்ரவேசிக்கையில்; புண்ய தினமான க்ருஷ்ணுஷ்டமி வருகையில்; மநுஷ்யன் அங்கு ஸ்நானம் செய்வானுகில்; உடனே அவன் புண்யமடைகிறான். துலா மாதத்தில், ஸூர்யன் ப்ரவேசிக்கையில்; விடியற்காலையில் எவன் ஸ்நானம் இந்தத் தடாகத்தில் செய்கிறானோ? அவன் ஸம்ஸார பீதியினின்று விடுபட்டு, மோக்ஷமடைகிறான். மகர மாதத்தில்; புஷ்ய நக்ஷத்ரம் ஞாயிற்றுக்கிழமையில் வருகையில், எவன் ஒருதடவை ஸ்நானம் இந்தத் தீர்த்தத்தில் செய்கிறானோ? அவன் ஸம்ஸார பீதியினின்று விடுபடுகிறான். மாகமாத மக நக்ஷத்திரத்தில் இந்த மஹோன்னதமான தீர்த்தத்தில், இச்சையின்றி எவன் ஸ்நானம் செய்கிறானோ? அவன் ஈசனுக்கு ஸமானனுகிறான். பங்குனி மாதத்தில், ஸூர்யன் ப்ரவேசிக்கும் ஸமயம், மநுஷ்யன் இத் தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து, ஸம்ஸார பந்தத்தினின்று விடுபட்டு,

எனது உருவமடைந்து, ஸுகமநுபவிக்கிறான், சுக்ரவாரத்தில், எவன் ஸ்நானம் செய்கிறானோ? அவனது மாஹாத்மியத்தை என்னால் அறிந்து சொல்ல முடியாது. அவ்வளவு ஸுகமநுபவிக்கிறான். மாகமாத க்ருஷ்ணபக்ஷ அஷ்டமியில், சிவகங்கை எனப் பெயரிய ஸர்வ தீர்த்த உத்தமத்தில்; எவன் ஸ்நானம் செய்கிறானோ? அவன் விசேஷ புண்ய மடைகிறான். அவ்விடம் ஸ்நானம் விதிப்படி செய்து ச்ராத்தம் எவன் செய்கிறானோ? ஆதரவுடன் செய்யும் அவன் பித்ருக்களுக்குத் திருப்தி செய்த தர்ப்பண பலம் அடைவிக்கிறது. ஆவணி மாதத்தில், எந்த மநுஷ்யன் ச்ராத்தம் செய்கிறானோ? அவன் 21 தலைமுறை பித்ருக்கள், க்ஷணிக காலத்தில் புண்ய தர்ப்பண பலன் அடைகின்றனர். மார்கழிமாத க்ருஷ்ண பக்ஷத்திலோ? சுக்ல பக்ஷத்திலோ? அவ்விடத்தில் ஸ்நானம் ச்ராத்தம் செய்தாலும், அவனால் ஏழு தலைமுறைக்குத் தர்ப்பணம் செய்த புண்ய பலமடையச் செய்கிறது.

ஸூர்ய க்ரஹண காலத்தில், எனது நக்ஷத்திரமான திருவாதிரையில், சிவகங்கைக்கு ஸமீபத்தில் ச்ராத்தம் ஆதரவுடன் எவன் செய்கிறானோ? அங்கு அவன் மோக்ஷகதி அடைகிறான். அவன் குலத்திற்கே ஓர் விளக்குப்போல் ஆகிறான். துக்கமான யமகதியை உடனே தாண்டி, ஆத்ம ஸ்வரூபமடைய ப்ரம்ஹ குலமடைகிறான். அக்குளக்கரையில் எவன் ஸந்தோஷத்துடன் கேவலம் ப்ராம்ஹணர்களுக்குச் சாப்பாடு போடுகிறானோ? அவன் வம்சத்தினர் எல்லோரும் உத்தமோத்தம முக்தி அடைகின்றனர். அதற்கு ஸமானமாக உலகத்தில் எந்த ஸ்தானமும் கிடையாது. அங்கேயே இருப்பவன் ஸம்ஸார பந்தமற்று, மோக்ஷமடைகிறான். அவ்விடம் அன்னம், தீர்த்தம், இவை எவன் கொடுக்கிறானோ? அவன் ஸர்வ பாபங்களினின்று விடுபட்டு, பரமகதி அடைகிறான். அவ்விடத்தில் வீடு, மடம், யோகிகளுக்கு எவன் கொடுக்கிறானோ? அவன் ஸர்வ பாபங்களினின்று விடுபட்டு, நல்ல ஸ்தானமடைகிறான் என்பதில் ஸந்தேஹமில்லை. ஆதலால் மநுஷ்யர்களுக்கு அந்த ஸ்தானம் ஸர்வதோஷ நிவ்ருத்திக்கே என்னால் முன்பு நிர்மாணம் செய்யப்பட்டது. கேவலம் அது க்ருபை பலத்தால் மாத்ரமே என நீ அறி! அநேக கோடி கல்பங்களில் சேர்ந்த புண்ய கட்டங்களால் உயர்ந்த ஸ்தானமாக, அங்கு அடைவிக்கப்படுகிறது. என்னால் அந்த ஸ்தான வைபவம் முழுமையும் உனக்குச் சொல்லப்பட்டது. ப்ரீதிக்கே ஜனங்களால் ஸதா ஸேவிக்கப்படுகிறது. அதுதான் என் முக்யஸ்தானம்.

அவ்விடம் ப்ராம்ஹணச்ரேஷ்டர்களது புண்ய ப்ரபாவம் கொஞ்சம் சொல்கிறேன் கேள். எதினுல் ஸதா கேட்கிறுர்களோ? அதினுல் அவர்கள் காதுகளுக்கு அம்ருதம் போல் அது விளங்கும்.

நான்காம் அத்தியாயம் முற்றிற்று.

---

## ஐந்தாம் அத்தியாயம்.

ஈசன்—அவ்விடம் ப்ராம்ஹணர்கள் 3000 பேர்கள் எப்பொழுதும் வஸிக்கின்றனர். அவர்களுடைய வாக்குகள் ஸரஸ்வதிபோல் உண்டாகிறது. ப்ராம்ஹணர்கள், நல்ல ஜன்மா உடையவர்கள். தபஸில் சித்தமடைந்து, வேத அத்யயனத்தில் ரொம்பவும் ப்ரஹஸ்பதிக்கு ஸமான முள்ளவர்கள், எல்லோரும் பெயரினுல் ப்ரம்ஹாவுக்கு ஸமான முள்ளவர்கள். நல்ல தக்ஷிணை உள்ள பெரிய யஜ்ஞங்களால் யஜ்ஞங்களை நடத்திக்கொண்டு, ஸதா தேவர்களுக்கு த்ருப்தி செய்கிறவர்களாக, போக்கரித்தனமில்லா மனதுடன் எனது பூஜையைச் செய்து வருகின்றனர். ஜடையின்றி, சந்திரனின்றி, மூன்ருவது கண்ணின்றி, பார்வதி இன்றி, மறுபடி எம்மூர்த்திக்கும், அவர்களுக்கும், இதுதான் மாறுதல், வார்த்தைகள் ப்ரஸன்னமாக ஸரஸ்வதி போன்றது. கடைக்கண் பார்வையில், லக்ஷ்மிபோன்றவர்கள். சித்தங்களில் சாந்தி அடைந்து, தேஹங்களில் காந்தி அடைந்து, அவர்களுக்கு ஸதா காண்கிறது. காமக்ரோதம் முதலிய தோஷங்கள் விட்ட பாக்யசாலிகள்.

மற்றும்; மநுஷ்யர்களது துஷ்ட கார்யங்களைத் துலைக்கத் தகுந்தவர்கள், ஸத்யவ்ரதங்களில் ஆசை உடையவர்களாகி, அக்னிஜ்வாலைக்கு ஸமான தேஜஸ் உடையவர்கள், தர்மம் என்ற பர்வதசிகரமேறி பாபத்தை ஒழிக்கும் ஸூர்யன் போன்றவர்கள். இல்லாத போக முடையவர்களாகி, சுத்தஜ்ஞானம் கொடுக்கிறவர்களாக, உள்ளவர்கள். அத்தபஸ்விகள், சிவனைச் சித்தத்தில் பார்ப்பவர்களாக, ஸந்தோஷமடைகின்றனர். பரமான சுத்த ஸ்வரூபர்களான ப்ராமணச்ரேஷ்டர்களது வார்த்தைகள் மநுஷ்யர்களுக்கு ஹேது இன்றிப் பாபங்களை போக்குகின்றன. தபஸ்விகளது பத்னிகள், கலாவிலாஸினிகள். வித்யையில் யுவதிகளாகி, நாயகனை அடைந்தவர்கள். சாஸ்த்ரம் போன்ற ஸமுத்ரத்திற்கு சந்த்ரன் போன்றவர்கள். வேதமாகிற நந்தவனத்திற்கு கோகிலபக்ஷி போன்றவர்கள்.

அதிதி பூஜை, ஸதா செய்கின்றவர்கள். ஆறு கர்மாக்களைச் செய்வதில், ஸதா ஆசை அடைந்தவர்கள். மூர்த்திகளால் ஸத்ய சுத்தமுள்ளவர்கள், அவர்களுள் நானும் ஒருவன். அங்கு இருக்கிறேன். அங்கேயே இருந்து அவர்களுடன் ப்ரீதி அடைகிறேன். பாதத்திற்கு எல்லாம் பரமான என் வைபவத்தை, நான் கொஞ்சமும் அறியமுடியாதவன். அவர்களை ஒருதடவை பார்ப்பது வெகுகாலம் செய்த தபோ பலம். அதன் ஸ்மரணை சீக்ரம் ப்ரம்ஹஹத்தி முதலிய பாதகங்களையும், லயமடையச் செய்யும். தனது சக்தியால் சிதம்பரத்தை ஸாக்ஷாத்தாக அவர்கள் காப்பாற்றுகின்றனர். அதன் ப்ரபாவம் மனதிற்கும், வாக்குக்கும், அறிய முடியாது என நன்றாக அறிகின்றனர். எந்த அநுக்ரஹம் மஹத்தானதோ? அது ஸதா ஆலயத்தில் இருப்பிடமுள்ளது. உள்ளங்கை நெல்லிக்கனிபோலும், நல் முத்து போலும், மாயை அற்றும், உள்ளது. எனது மஹிமையை அவர்களாலும் அறியப்படுகிறது. அநுபூதி மஹாத்மியங்களைத் தாரணங்களால் க்ஷணிக காலமும் அறிகின்றனர். விபூதி மஹாத்மியத்தை ஸர்வ ஸம்பத்துக்கும் புஷ்ப மொட்டுப்போல், அறிகின்றனர். எனது பூஜை, மஹாத்மிய வைபவங்களை விதிப்ரகாரம் சுத்தமான சித்தத்துடன், ப்ராம்ஹணர்கள் நன்கு அறிகின்றனர். அழகிய பெருமையுடைய சித்தத்தில் எக்காரணம் பற்றி லிங்கப் பிரதிஷ்டை உடையவனாக நான் இருக்கிறேனோ? அக்காரண முடைய ப்ராம்ஹண ச்ரேஷ்டர்களது விஷயம் பரமரஹஸ்ய முள்ளது. என அறிகின்றனர். அவர்களது மனதை ஆச்ரயித்து, எப்பொழுதும் நான் அங்கு இருக்கிறேன். பொருமையே ஸர்வ ஹேதுக்கும் குறைவற்றது. எப்பொழுதும் முநிகள் விபூதி அணிந்த சரீர முடையவர்களாகி, கஷ்டமில்லாத தேஹமடைந்துள்ளவர்கள். பெரிய தபஸ்பாவமே அது என அங்கு காணத்தக்கது. யத்னமின்றி ஸுலபமாய் ஸத்ய மடைந்துள்ளது. ஸர்வ தீர்த்தங்களும் அங்கு ஸேவிக்கும் தன்மை உள்ளது. ஸர்வ சிவஸ்தானங்களுக்கும் ஸேவகரூபம் என அவ்விடம் சொல்லப்படுகிறது. புத்தியால் என் உருவமறிகிறார்கள். அவர்கள் எனது ப்ரிய காரியங்களைச் செய்கிறவர்கள். அவர்கள் ப்ரீதிக்கே நான் ஸதா கல்யாண உருவஸபையில், ப்ரகாசமுள்ள ஆனந்த தாண்டவம் காண்பித்து வருகிறேன். அவர்களது வைதீக விளையாட்டின் நிச்சய சித்தங்களுக்கு நான் ஒருவனே ஸமம் உள்ளவன். மூன்று உலகங்களிலும் வேறு ஒருவரும் இல்லை. லஜ்ஜை, புத்தி, பயம், காமம், க்ரோதம், மோஹம், இவைகளுடன் என் தாண்டவத்தை எதிர்ச்சையாக எவர்கள் காண்கிறார்களோ? அவர்களும், ப்ரார்த்த மாத்

திரத்திலேயே முத்தி அடைகிறார்கள். அதில் ஸந்தேஹமில்லை. அதிகமாக மறுபடி சொல்லி என்! பக்தி பாவனையுடன் எந்த ஜனங்கள் என்னை உபாஸிக்கிறார்களோ? அவர்கள் அதை அடைகிறார்கள். அவ் விஷயமுள்ள மஹத்தான திவ்ய தாண்டவம் பரம அத்புதமாய் உள்ளது. அவர்களே அறிகிறார்கள். அவர்கள் அந்த க்ஷேத்ரத்திலேயே வஸிப்ப வர்கள் என உனக்கு அந்த ஸத்யமுள்ள விஷயம் இங்கு சொல்லப் படுகிறது.

அவர்களுள் நான் ஒருவன் அவர்களது முழுவைபவங்களையும், சொல்ல முடியாதவன். ஹேம வர்ம அரசன், வ்யாக்ரபாதர், பதஞ்ஜலி, முநிகள், எல்லோரும் குறைவில்லாத என் நர்த்தனத்தை எப்பொழுதும் பார்க்கின்றனர்.

ஸூதர்:— ஈசன் ப்ராம்ஹணர்களது வைபவத்தை இவ்விதம் முன்பு சொன்னார். ஸந்தேஹமின்றி உங்களுக்கு இப்பொழுது விஸ்தாரமாக எனஞல் சொல்லப்பட்டது. இவ்வத்யாயத்தை யார் படிக்கிறார்களோ? கேட்கிறார்களோ? அவர்கள் அநுஷ்டானமுடைய வர்கள். அவர்களது பாபங்கள் தொலைந்து, சிவலோகத்தில் பூஜிக்கப் படுவர்.

ஐந்தாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## ஆறும் அத்தியாயம்.

ரிஷிகள்:— ஸூதரே! புண்டரீகபுரத்தில் தத்வார்த்தத்தி லேயே இருந்து, ஸேவிக்கும் வியாக்ரபாதர் என்ன தபஸ் செய்தார்? எவ்விதம் ஆச்சர்யமாக அடையமுடியாத புலிக்கால், புலிக்கை, புலிக் கண், உருவமடையப்பட்டது? அவ்விடம் நர்த்தனம் அவருக்கு எப்படி காண்பிக்கப்பட்டது? இவை முழுமையும் விஸ்தாரமாய் எங்களுக்குச் சொல்லவேணும்! அதைக் கேட்கப் பெரிய ஆசை இவ்விஷயத்தில் வேகமாக உள்ளது.

ஸூதர்:— முநிகளே! முன்பு ப்ரம்ஹத்தினிடம் மனமடைந்த புண்ய தபஸ்வி மத்தியந்தனர் என்ற முநி நினைக்கத்தகுந்தவர் ஒருவர் இருந்தார். தபஸ், ஸத்யம், தயை, சாந்தி, இவைகள் எந்த தர்மத்தி னின்று உண்டாயிற்றோ? அதுதான் பெரிய தேஜஸ். அதுவே

பரிசுத்த தன்மை உள்ள உயர்ந்த பூமி. அவருக்கு அக்னிபோன்ற ப்ரகாசமுடைய புத்தி உள்ள ஒரு பையன் உண்டானான். சிவ ஜ்ஞானத்தில் ப்ரகாசமுடையவன். ஆத்மஜ்ஞானி, உலகின் கஷ்டத்தைப் போக்குபவன். ஒரே பிள்ளையைப் பிதா அடைந்து, உங்களில் கேள்விப்படும் தன்மை அடைந்து பரமானந்த மனதுடன் அவனுக்கு ஒரு ஸமயம் சொன்னார். அப்பையனுக்கு தர்மஜ்ஞர் விதிப்ரகாரம் தன் குலத்திற்கு உசித காலத்தில் அத்யயனாதிகள், ஸர்வ வேதங்கள், இவை நன்கு கஷ்டமில்லாமலேயே சொல்லிக் கொடுத்தார். திவ்ய பஞ்சாக்ஷர மந்த்ரம் பாசமறுக்க கூடியதாக உள்ளது என ரஹஸ்யார்த்தத்துடன் மஹாதிவ்யமாக விதிப்ரகாரம் சொல்லுகிறேன் கேள்! எனப் பையனுக்குச் சொல்லிவைத்தார். உனக்கு எங்கு இச்சையோ? அங்குள்ள ஸர்வ கதி விஷயங்களையும் விதிப்ரகாரம் சொல்கிறேன் கேள்! எனவும் சொன்னார்.

இவ்விதம் சொல்லிய தகப்பனாரைப் பையன். அப்பொழுது வணங்கி, மரியாதையுடன் அடைந்து, அஞ்ஜலி செய்து கேட்டான்.

ஸூதர்:— முக்திக்கு மூலமுள்ளது தபஸ். அது நித்யம் குறைவில்லாத ஸம்பத். எதினின்று உண்டாகிறதோ? அது தாண்ட முடியாத உலகத்தில் உத்தமோத்தம ஸர்வஸித்தியையும் கொடுக்கக் கூடியது தபஸ் ஒன்று தான். ஸம்ஸார ஸமுத்ரத்தில் மூழ்கியவர்களுக்கு உள்ளது எது உடனே உத்தாரணம் செய்யுமோ? அது அவ்விடத்தில் ஸதா ஆனந்தம் உண்டாக்குகிறது. எவ்விதம் கஷ்டங்கள் நிவர்த்தியாகிறதோ? அதுதான் முக்யம். எக்காரணத்தால் பகவான் அங்கு பூஜிக்கப்படுகிறார்? என்பதை எனக்கு விஸ்தாரமாகச் சொல்ல வேணும் என்றதும்; ஸர்வ ரஹஸ்யங்களையும் அறிந்த பிதா, புத்ரனது வார்த்தையைக் கேட்டு, அம்ருதம் ஒழுகும்படி மெதுவாக பதில் சொன்னார்.

ஹேமந்தருதுவிலும், சரத்காலத்திலும், வர்ஷாகாலத்திலும், சிசிரருதுவிலும், மது மாஸத்திலும், காமோத்வேகம் உண்டாகும் வஸந்தருதுவிலும், அடிக்கடி வெயிற்காலத்திலும், நித்யம் மிக்க கொடுமையான ஸந்தாபத்திலும், இதர புண்ய காலங்களிலும், ஸூர்ய கிரணங்களிலும், தடுக்க முடியா குளிர்காலத்திலும், பெரும் காற்று வீசும் இரவிலும், ஜலமத்தியத்திலும், தாழ்வரைகளிலும், மலைச்சிகரங்களிலும், திவ்ய க்ஷேத்ரங்களிலும், கொடுமையான வனங்களிலும், பெரிய நதிக்

கரையிலும், குளிர்மையான மலைஅடிவாரங்களிலும், மரஅடியிலும், நந்தவனங்களிலும், நன்ருக மலர்ந்து பூங்கொத்துகள் ப்ரகாசிக்கும் கிளைகளிலும், மற்றப்ரதேசங்களிலும், மனதிற்கு ரம்யமான தபஸ் இடங்களிலும், காய்கனி ஆஹாரங்களுடன் மர இலை சாப்பிடுதலிலும், ஜலபானம் செய்வதில் ப்ராணனைத்தரிப்பதிலும், சுத்த ஸ்தானத்தில் உருவமடைவதிலும், காற்றை ஆஹாரம் செய்து திருப்தி அடைவதிலும், ப்ரம்ஹஸ்வரூப புத்திகளில் ஸதாத்யானமும், எந்தத் தபஸ்வியும் நல் உலகமடைய எப்பொழுதும் கடுமையான தபஸ் செய்யவேணும்.

அதே ப்ரம்ஹலோகமடைவதில் கேவலம் ஸாதனமடைந்து, திரும்பிவரவில்லா சிவஸாயுஜ்யமடையக் காரணமாகும். அப்பதமடைய இஷ்டமிருந்தால் பரமேச்வர ஸேவை செய்வதால் எவனுக்குச் சித்தத்தில் பரமான முக்தி ஏற்படுகிறதோ? அவனுக்கு அதுவே முதல் ஹேது. உத்தமோத்தம சிவஸேவைசெய்ய இச்சை இருக்குமாளுல், தபஸினுலே போதும்! ஸர்வமும் பரமேச்வரனுலேயே அடையும். பரமேச்வரனும், பாபகஷ்டங்களைத் தூரத்தில் தள்ளச்செய்து, ஸம்ஸாரக் கஷ்டங்களை நாசமாக்கி, பரமானந்த ஸுகமடையக் கொடுப்பார்.

ஸுதர்—என்ற தகப்பனுர் சொல்லிய மதுர உருவ வார்த்தையைக் கேட்டு ஸந்தோஷமடைந்த ஹ்ருதயத்துடன், பையன் புத்திசாலி ஆனதால், மறுபடியும் தகப்பனுரைப் பார்த்துச் சொன்னுன்.

இவ்வுலகமெங்கிலும் சிரஸில் சந்திரன் அலங்காரமுடைய சிவன், கருணை உருவமாகவே ஸாந்நித்யம் செய்கிறுர். அந்த ஸ்தானம் தான் உத்தமோத்தமமாக எனக்கு ஏற்பட்டுள்ள ஸ்தானம் அங்கு உள்ளது என அதைத் தெரிந்துகொண்டேன். அவ்விடத்தில் ஜன்ம நிவ்ருத்திக்கு நான் பெரிய தபஸ் செய்யப் போகிறேன்.

பிதா—அங்கு தான் சிவனது ஸந்நிதி. அவ்விடம் ஸர்வப்ரபஞ்சமும் உள்ளது. அதைக்காட்டிலும் மோக்ஷமடைய ஜகத்தில் வேறு ஒரு இடமும் இல்லை.

இந்த ஜகத்தில் அதே புத்தியுடன் அவர் பாவனையை எவர்கள் செய்யாமல் சித்த பாகத்தினுல் ஹீனனுகி ஸதா ஜன்மமடைந்து மூழ்குகிருர்களே? அவர்கள் தபஸ் பரிபாகமற்றவர்கள் ஜ்ஞானமற்றவர்கள்.

அந்த ஜனங்களே வீண் என எண்ணப்படுவர். அவர்கள் மறுபடி புழு பூச்சி முதலிய ஜன்மமடைந்து, பாப புத்தியை வ்ருத்தி செய்ய ஹேது உள்ளவர்கள். அப்படி இருந்தும், எவ்விடம் ஸதா ஸாந்நித்யம் சிவன் செய்கிறரோ? அவ்விடம் ஸர்வ உலகங்களிலும் ஸ்தோத்தரிக்கப் படுகிறதாயுள்ளது. புண்ய சரீர பீஜங்களுக்கும் சுத்தமான உலகிற்கும் புது கண்டமாக உள்ளது. மேருக்கு மூலாதார அடிப்பாகமுள்ளது. ஸூர்யகிரணங்கள் போல் முக்ய மஹிமை உடைய குலபர்வதங்களுடன் நல் முத்துரத்னம் போல் சேர்ந்து நக்கும் அலங்காரமுடையது. பெரிய எல்லேயுடைய பூமியில் மஹாத்மாக்களாலும், தடுக்கமுடியா இடம். பரமேச்வரனுலும் சுருக்கமாகச் சொல்ல நூற்றுக்கணக்கான வர்ஷங்களானுலும், முடியாது.

ஸர்வாதார விஸ்தாரமுள்ள இப்பூமியில் அவ்விடம் மஹாத்மாக்களில் பலர் பரமதேஜஸுடன் வஸிக்கின்றனர். அவர்களது முக்திக்குப் பரமேச்வரனும் பூமியில் அநேக ஸ்தானங்களில் ஸதா குறை வில்லாத ஆனந்த ஸ்வீகாரத்துடன் ஸாந்நித்யம் செய்கிருர். அந்த ஸ்தானங்கள் பூமியில் அநேக ஆயிரம் இடங்கள் உள்ளன. அவைகளுள் பரமேச்வரனுக்கு ப்ரியமான இடத்தை உனக்கு உலகில் சொல்கிறேன். அவைகளுள் தில்லவனம் திவ்யபூமி. மஹத்தான தபஸின் வ்ருத்திக்கு முக்ய முள்ளது. ஸர்வ புராணங்களிலும் ரொம்பவும் உத்தமமான இடம். ஸ்ரீமூலஸ்தானம் என்ற பெயருடையது. அதன் மத்தியில் சிவன் ஜகத்திற்கு தீபம் போல் அசையாது ப்ரகாசிக்கிருர். ச்ரேஷ்டமான அந்த லிங்க உருவத்தில் எவர் ஸதா ப்ரகாசிக்கிருரோ? அவர் சந்த்ர சூடர். உன்னுல் நித்யம் பூஜை செய்யவேணும்.

ஆரும் அத்தியாயம் முற்றிற்று.

---

## ஏழாம் அத்தியாயம்.

மத்தியந்தனர்:— உனக்கு மற்ருெரு மஹிமை உள்ள க்ஷேத்ர விஷயம் ஹிதமாய் சொல்லப்போகிறேன். கேள்! ஜயத்திற்கு இருப்பிடமும், காதுகளுக்கு ஆயுஷ்யமும், உத்தமோத்தமுமுள்ளது. இந்த்ரன் எவ்விடத்தில் பெரிய தபஸ் செய்து சத்ருக்களே முறியடித்து, மறுபடியும் கஷ்டமின்றி, ஸ்வர்க்கம் அடைந்தானே? அவ்விடத்தில் முன்பு மஹாவீரனுன வால்கலி என்ற அஸுரன் தேவர்களாலும்,

கந்தர்வர்களாலும், ராக்ஷஸர்களாலும், ஜெயிக்கமுடியாதவனாய், இருந்து வந்தான். வீர்ய பலத்தினால் பூமியில் ஸர்வத்தையும் அவன் வசமாக்கி, ஒரு ஸமயம் அஸுரர்களால் ஸேவிக்கப்படும் தேவர்களது இருப்பிடமான ஸ்வர்க்கமடைந்தான். அவ்விடம் பெரியதோர் யுத்தம் ஒருவர்க்கொருவர் பயங்கர காரணமடைந்து நடந்தது. அஸுரர்கள், தேவர்கள், அவரவர் ஜெயிக்க அங்கு ஆசையுடையவர்களானார்கள். அவ்விடத்தில் கோடி வருஷங்கள் ஜயமடைய ஆசைகொண்டு இருவர்களும் யுத்தமோஹ சேஷ்டைகளால் அவர்களுக்கு வெகுகாலம் தெரியாது சென்றது. யுத்தபூமி முழுதும் ரத்தஜலம் சேறு அடைந்து, எங்கும் மேரு மந்த்ர பர்வதம் போன்ற அவர்களது எலும்புக் கூட்டங்கள் ஆயிரக்கணக்காய் கிடந்தன. ஆயிரம் வருஷங்களுக்குப் பின்பு யுத்தத்தினால் தேவர்கள் ச்ரமமடைந்ததும் வால்கலியினால் தோற்ற இந்த்ரன் கஷ்டமடைய நேர்ந்தது.

பின்பு அவன் ஸ்வர்க்கத்தை விட்டு ஸர்வதேவர்களுடன் ச்வேத த்வீப மடைந்து, பாற்கடலைப் பார்த்து, லக்ஷ்மீ நாதனைச் சரணடையச் சென்றான். ஆயிரம் கண்களும் இன்றுதான் பரமபலம் அடையப் பட்டது என நினைத்தான்.

எவ்விடம் விஷ்ணு விசேஷமாக சேஷசயனத்தில் படுத்துக் கொண்டு லக்ஷ்மியினால் பிடித்த பாதங்களை உடையவராக யோக நித்திரை செய்கிறாரோ? அவ்விடம் அடைந்தான். பிறகு அந்த ஜகத்பதி விஷ்ணுவை வைதீக ஸ்தோத்திரங்களால் ஸ்தோத்தரிக்கையில் பரம பக்தியுடன் தேவர்களும் நமஸ்கரித்தனர். நாகசயனத்தினின்று விடியற்காலையில் எழுந்து இந்திரனை முன்னுடைய தேவர்களைப் பார்த்து அம்ருத தாரைக்கு ஸமானமாய், ஜகத்திற்கு ஆனந்தத்தைக் கொடுக்கும் மின்னல்போன்ற ப்ரகாசமாய், காளமேகம் போல் தாமரை உருவமுடைய விஷ்ணு சில வார்த்தைகளைச் சொன்னார்.

விஷ்ணு:—இந்திரனே! அதிகாரத்தில் ப்ரதிஷ்டை அடைந்துள்ள உங்களுக்குக் கொஞ்சகாலம் ஸுகம் உள்ளத்தில் என் இப்படி ஆனீர்கள்? இப்பொழுது ஸ்வர்க்க லோகங்களை விட்டு ச்ரமத்துடன் மருத் கணங்களுடன் இங்குவந்த காரணம் என்ன? என்றதும்,

இந்திரன்:—வால்கலி என்ற பெயருடைய அஸுரன் சிவனிடமிருந்து பெரியவரமடைந்து பலிஷ்டனாகித் தேவர்களால் ஜெயிக்க

முடியாது யுத்தத்தில் எங்களை ஜெயித்துவிட்டான். அக்காரணத்தால் தான் இப்பொழுது அவன் ஸ்வர்க்கத்தில் வஸதி அடைந்துள்ளான். ஆகவே தேவர்களுடன் நாங்கள் உம்மைச் சரணடைந்து திரும்ப ஸ்வர்க்கமடைய ஹேதுவைக் கேட்க வந்துள்ளோம். முன்பு ஹிரண்யாக்ஷன், ஹிரண்யகசிபு, இவர்களது பாபத்தால் பயமடைந்த நாங்கள், உம்மால் அவ்வஸுரபயத்தினின்று காப்பாற்றப்பட்டோம். இப்பொழுதும் பலம் உள்ள கொழுப்புடைய அஸுரர்களிடமிருந்து எங்களைக் காப்பாற்ற வேணும்! வால்கலியை அழிக்க உம்மையன்றி வேறு ஒருவராலும் முடியாது. நாங்கள் உண்மையாகவே சொல்லுகிறோம்.

விஷ்ணு :— அதிக பலமுடைய அவனை நான் ஸமயம் வரும் பொழுது கொல்லப்போகிறேன். அதுவரை ஸமயத்திற்கு ஏற்க தபஸ் நித்யம் நீ செய். தபஸினால் உனக்கு எந்தச் சக்தி உண்டாகுமோ? அதினால் அப்பொழுது பாபி வால்கலியை அழித்து, அஸுர வதம் செய்ய யோக்யமாகும்.

இந்த்ரன் :— எந்த க்ஷேத்திரத்தில் பெரியதோர் தபஸ் செய்ய வேணும்! அந்த அஸுர நாசத்திற்கு எது முக்ய இடம்! அதை எனக்குச்சொல்லும்! செய்கிறேன்.

ஸூதர் :— க்ஷேத்ரம், தீர்த்தம் இவைகளை ஜ்ஞானதிருஷ்டியால் பார்த்து, நிச்சயித்துப் பகவான் ஸுர நாயகர் புன்சிரிப்புடன் சொன்னார்.

விஷ்ணு :— உலக அநுபூதிக்கு ஈசன் பார்வதியுடன் எங்கு நர்த்தனம் செய்கிறாரோ? அவ்விடம் தில்லவனம் எனப் பெயர் பெற்று விளங்குகிறது. அங்கு ஸர்வ ஸித்தியும் கொடுக்கக்கூடியது. அவ்விடத்தை அத்புதமாய் அடைந்து, அவனைக்கொல்ல நீ தபஸ் செய்.

இந்த்ரன் :— நீங்கள் இன்றி நாங்கள் போகமாட்டோம். அவனது வீர்யத்தால் நாங்கள் எல்லோரும் ஸதா பயமடைந்துள்ளோம். ஆகையால் நீரே நேரில் வாரும், உம்மால்தான் காப்பாற்றப்பட வேண்டும். மஹத்தான தபஸ் அவ்விடத்தில் செய்கிறேன். ஸரி என ஸர்வ தேவர்களுடன் விஷ்ணு உடனே ஸ்ரீமத் வ்யாக்ரபுரம் அடைந்தார், அவ்விடம் ஸர்வ தேவர்களுடன் மஹத்தான தபஸ்செய்ய ஆச்ரமங்களை அடைந்து, அதிப்ரீதியுடன் ஆரம்பித்தனர்.

அப்புண்ய ஸ்தலத்தில் பகவான் அவ்விடம் அழகிய க்ஷீர ஸமுத்ரத்தைச் சீக்ரமாக அழைத்தார். அதில் சயனம் செய்து யோக நித்ரையும் அடைந்தார். தேவர்களால் ஸ்தோத்தரிக்கப்படும் ஈசனது தாண்டவத்தைக் கண்ணுல் பார்த்தார். ஆடிமாத ஆரம்பத்தில், சுபமான க்ருஷ்ண பக்ஷத்விதீயையில், தபஸ் செய்யும் இந்திரனை ப்ருஹஸ்பதி அடைந்து சொன்னுர். இந்த்ரனே! த்விதீயையில் அசூன்ய சயனம், என்ற வ்ரதம் ஸமுத்ரத்தில் படுத்துள்ள விஷ்ணுவுக்கு ப்ரியமானது. அத் திதியில் நான்குமாதம் வரை, விஷ்ணு பூஜிக்கப்படுவரேயாகில்; அவ்வளவு காலம்வரை ஹ்ருதயத்தில், த்யானம் செய். ஸர்வ இஷ்டங்களேயும் அவர் கொடுக்கப்போகிருர் அதினின்று சாஸ்த்ர விதானமாக நீ இவ்விஷ்ணுவைப் பூஜைசெய். மறுபடி உடனே கஷ்டமில்லாமல் ஸ்வர்க்கமடையலாம்.

ஸூதர்:— இவ்வார்த்தையை ஆதரவுடன் இந்த்ரனும் கேட்டு விதி ப்ரகாரம், "அசூன்ய சயனவ்ரதம்" ஆடிமாத க்ருஷ்ணபக்ஷ த்விதியையில், விஷ்ணுவை அடைந்து பூஜை செய்தான். சங்கு, சக்ரம் முதலிய ஆயுதங்களால் ஸேவிக்கப்படுகிற விஷ்ணுவைத் திவ்யமாய்ப் பூஜை செய்தான். பெரிய அலங்காரம் செய்து, திவ்ய புஷ்பங்களால் வரமளிக்கும் நாராயணனேப் பூஜை செய்தான்.

மாதம்தோறும் விதிப்பிரகாரம் ச்ரத்தையுடன் சந்தனம், புஷ்பம், தூபம், தீபம், இவைகளுடன் அநேக நைவேத்யங்கள். பக்ஷ்ய போஜ்யங்களுடன், கெட்ட எண்ணமற்ற புத்தியுடன், ஸதா ஜயமடைய மனதோடு செய்தான். இந்த்ரன் ஸ்நானம் செய்து, சுத்தனுகி, அங்கு ஜெயத்திற்காகவே நான்குமாதம்வரை ஈசனேப் பூஜைசெய்து வந்தான். அதன் பிறகு கார்த்திகைமாத ஆரம்பத்தில், இந்திரன் நாராயணனே ஆராதித்து, முடிவுவரை வேதவேதாங்கம் அறிந்த முநிகளே அழைத்து, வஸ்திரம், ஆபரணம் கொடுத்துப் பூஜித்தான். விஷ்ணுவை வைதீக ஸ்தோத்ரங்களால் ஸ்தோத்தரித்து அ; 'சூன்ய சயனம' என்ற வ்ரதத்தை முடித்துக்கொண்டான். பிறகு அவரது ப்ரபாவத்தால் இந்த்ரன் பெரிய ஜயமடைந்து, பயம் நீங்கி உடனே ஸ்வர்க்க போகங்கள் அநுபவிக்கலானுன்.

ஆகையால் ஈசனது ஸேவைக்காக ஸ்ரீமத் தில்லவனத்தில் திவ்ய தபஸ் செய்யச் செல். இவ்வத்யாயத்தை ச்ரத்தையுடன் படிக்கிறவன்,

கேட்கிறவன், எல்லோர்க்கும் லக்ஷ்மீகடாக்ஷம் குறைவின்றி உண்டாகும்.

எழாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## எட்டாம் அத்தியாயம்.

பிதா:— குழந்தாய்! அந்த க்ஷேத்ர வைபவத்தை மற்றும் நான் சொல்லப்போகிறேன் ச்ரத்தையுடன் நீ கேள். உடனே ஸர்வ பாபங்களும் துலேகிறது. எந்த ஸ்தானத்தில் ஸர்வ பாபங்களும் துலேகிறதோ? க்ஷேத்ரத்தில் அங்கு ஒரு நிமிஷமோ? அரை நிமிஷமோ? வஸிப்பதால் ஸகல மங்களங்களும் அடையப்படுகிறது.

முன்னாளில் பாபியான புல்கஸன் ஒருவன் இருந்தான். ப்ராம்ஹணர்களது குலங்களேக் கொடுமையுள்ள எண்ணத்தால் கொலே செய்து வந்தான். மார்க்கங்களில் ப்ராணி ஹிம்ஸை, பணம் திருடுதல், முதலியன முதல்தரமாக அபஹரிப்பதே இஷ்டமாக, வ்யாபாரத்தால் வெகு காலம் தயவின்றிப் பூமியில் ஸஞ்சரித்து வந்தான். அவன் விட புருஷர்களுடன் அபஹரித்ததை எல்லோர்க்கும் பகிர்த்து ஸந்தோஷத்துடன் கொடுத்து வந்தான். பண லாபத்தில் ஸந்தோஷப்படுகையில்; ஒரு ஸமயம் ப்ராம்ஹணன் ஒருவன் வந்து அவனுக்கு நல்ல புத்தியை உபதேசித்தான்.

ப்ராம்ஹணன்:— பாபி! உன்னால் ஈவு இரக்கமின்றி, எப்பொழுதும் பாபங்கள் செய்யப்பட்டன. இதற்கு அநுதாபம் இப்பொழுது இல்லே என ப்ராம்ஹணனால் போதிக்கப்பட்டு, அந்த துராத்மா புல்கஸன் மிகக் கஷ்டமடைந்த மனதுடன் இது தைவீக கதியால் எற்பட்டது கஷ்டம். அநேக கொடுமையுள்ள பாபங்கள் என்னால் செய்யப்பட்டது மூடனான நான் இனி என்ன செய்வேன். இப்பொழுது க்ருபை இல்லாதவனாகிறேன். பாபநிவ்ருத்திக்கு நீர் உபாயம் ஒன்று சொல்லும். ஒன்றும் நான் அறியவில்லே மனம் சிந்தையில் ஆழ்ந்துள்ளது.

ப்ராம்ஹணன்:— நல்லது! நல்லது! உன்னால் இவ்விஷயம் கேட்கப்பட்டது. ஹிதமானதைச் சொல்லுகிறேன் கேள்! பூமியில் புராதனமுள்ள திவ்ய க்ஷேத்ரங்களுள் உத்தமோத்தமம் ஒன்றுள்ளது. முநிகள், ஸித்தாள், கந்தர்வாள், தேவர்கள், இவர்களால் ஸதா ஸேவிக்கப்படுகிறது. ஸ்ரீமத் தில்லவனத்தில் அம்பிகாபதி நர்த்தனம் செய்கிறார்.

அங்கு நீ ச்ரத்தையுடன் விதிப்ரகாரம் விடியற்காலையில் ஸ்நானம் செய்து, தூரமுள்ள ஸபையைப்பார்த்துப் பூமியில் நமஸ்கரி. யோகிகளுக்கும், போகிகளுக்கும், எல்லா ஸொத்துக்களையும் தானம் செய். பயம் உண்டானால் மனதைத் திடப்படுத்திக்கொள். நித்யம் முயற்சியுடன் செய், என ப்ராம்ஹணனால் சொல்லியதை ப்ரீதியுடன் புல்கஸன் கேட்டு, தில்லவனமென்ற புண்ய இடத்தை ச்ரத்தையுடன் அடைந்தான். ப்ராம்ஹணன் அவனுடன் சேர்ந்து இருந்து வந்தான். புல்கஸனும், ப்ராம்ஹணர்களும், மற்றவர்களும், தான் சேர்த்த பணங்களைத் தானம் செய்து, தினமும் அத்புத வைபவமுடைய திவ்ய இடத்தில், வஸித்து வந்தான். வெகு தூரத்தில் இருந்தபடியே நமஸ்கரித்து, பரமப்ரீதியுடன் இருக்கையில் பலகாலம் சென்று, அவ்வியாஜமாக அங்கேயே மரணமடைந்தான். உடனே அவன் ஸ்ரீமானாய் புண்ய வசத்தால் இஷ்டமுள்ள உலகங்களை நன்றாய் அடைந்து, அநுபவித்துக் கடைசியில் ஸ்ரீமத் அம்பிகாபதியின் க்ருபைக்குப் பாத்ரமானான்.

அவ்விடத்திலேயே பரம முக்தியும் அடைந்தான். அந்தப்ராம்ஹணனும், புத்திசாலி ஆனதால் அந்தஸ்தானமடைந்து ஈசனை முன் சொல்லிய ப்ரகாரம் பூஜை செய்து வந்தான். பூஜை செய்துவரும் ப்ராம்ஹணனுக்கு ஈசன் உத்தம முக்தியைக் கொடுத்தார்.

ஸூதர்:— இவ்விதம் தபஸில் நிச்சயமடைந்து ப்ரீதியடைந்த குழந்தைக்கு மத்தியந்தனர் சுத்தமான விபூதியை நெற்றியில் எடுத்து தடவினார். ஆதரவுடன் உயரிய வரத்தையும், ஆசீர்வாதத்தையும், கொடுத்துச் சிரஸில் உச்சி முகர்ந்து, போகச் சொல்லி, ஹிதங்களைப் பிதா சொன்னார். அவனும் அவ்விடம் ப்ரஸன்ன மனதுடன் மலர்ந்த தாமரை போன்ற மனமடைந்து அப்பா, அம்மா, இருவரையும் நமஸ்கரித்து நின்றான்.

ஸர்வ உலகங்களின் நன்மைக்காகவே ஜன்மா எடுத்த முநிபுதல்வன், ஈச்வர பாதத்தை த்யானம் செய்து, தபஸ் செய்ய, அத்தில்லவனமடைந்தான். நக்ஷத்திரங்கள் மாதிரி அடையாளமுள்ள, நிழல், நல் முத்து கூட்டங்கள் போல் ப்ரகாசிக்கும் ஸமுத்ரக்கரை இவைகளை அடைந்து, கடைசியில் உத்தமோத்தம வ்ருக்ஷமூலமடைந்தான். யானை, ஸிம்ஹம், முதலிய மற்ற ஜந்துக்கள் மநுஷ்யர்களுக்கு எங்கு பார்த்தாலும் பயத்தைக்கொடுக்கும் இடம். அந்தகானகுபுற தேசம் அடைந்தான்.

சந்தன வ்ருக்ஷம், கல்பக வ்ருக்ஷம், ஆறு ருதுக்கள், இவை ப்ரகாசிக்கும் விளையாட்டிற்கு இருப்பிடமுள்ள உத்யான வனத்தை, உத்தமோத்தமமாக அடைந்தான். இங்குமங்கும் தமாலம், தாளம், மாலை இவை அலங்காரமுள்ள, வரிசையுள்ள வ்ருக்ஷங்களால் அசைவற்ற ஆகாசம்போல் அங்கு காணப்பட்டது. கண்களுக்கு அடையமுடியாத பெரிய இருப்பிடமுள்ள அநேக புஷ்பங்கள் நழுவும் நான்கு புறம் அடைந்ததாக மத்யப்ரதேசம் இருந்தது. நித்யம் உல்லாஸ காரணமுடைய புண்ய கொடிகளும் இருந்தன. நஷ்டமடையாத நதிக்கரை மகத்தான கிளைகள் போல் உள்ளது. இதற்கு முன் பாராத விஸ்தீர்ணம் மனதிற்கு எட்டாத இடம். அவ்வனத்தை பஞ்சாக்ஷர ஸஹாயத்துடன் ஆதரவோடு அடைந்தான். அதன் மத்தியில் பெரிய வேதத்வனி சுத்தமாக இருந்தது. ஸங்கீதம், முரஜம், முதலிய வாத்யங்கள் உருவமடைந்திருந்தன. ஸமஸ்த முநிகளால் ஸேவித்துப் பூர்ணமாய் ஒழுகும் தேன் போல் வண்டுகளின் கலகல சப்தத்துடன், அநேக அலங்காரமான வர்ண தாமரை குளக்கரையில் தீர்த்தராஜனது ப்ரபாவத்தால் சுத்தப்பட்ட நதி, பர்வதம், கல்ஹாரம் முதலிய துளிகளால் நனைக்கப்பட்ட பரமானந்த காரணமுடைய அத்திவ்ய பட்டணத்தை நன்கு பார்த்து, சுத்த ஆத்மாவை ப்ரஜ்ஞானத்துடன் ஸந்தோஷமாக எண்ணினன்.

ஸர்வ பாபங்களும் உடனே நாசம் செய்யும் சுபமான ஸ்வர்ண தாமரைத் தடாகம் என்ற பெயருடைய தீர்த்தத்தை மறுபடியும் அவன் நமஸ்கரித்தான். அதன் தெற்குக் கரையில் ஜன்ம ஸாபல்ய காரணமுடைய ஸ்தானத்தை அடிக்கடி முனி கண்டான். ஸர்வ ஜகத்திற்கும் முக்யமுள்ள பரமான மூலஸ்தானம் என்ற பெயருடையதும், நினைத்துப் பார்த்த மாத்ரத்திலேயே பாபத்தைத் துலைக்கக் கூடியதும், உள்ள அதன் மத்தியிலுள்ள மஹாதேவர் ஸ்வயம்புலிங்கமாயும், விளையாட்டினுல் ஈசன் பக்கத்தில் வ்யாக்ரபாதமுடையவரும், கங்கையின் அலைமாலைகளால் சோதித்த ஜடாபார முடையவரும், ஆனந்த படிக்கட்டிற்கு மூலமுள்ளவரும், கோடி ஸூர்ய ப்ரகாசமுடைய புன்சிரிப்புள்ளவரும், ப்ரணவ பார்வையால் நான்கு புறமும் ப்ரகாசிக்கிறவரும், நக்ஷத்ரம் போன்ற வனபோக முடையவரும், உள்ள ஜ்யோதிர்மயமுள்ள ஈசனைப் பார்த்து ஆனந்தத்தினுல் அடிக்கடி நமஸ்கரிப்பவரும் உள்ள அவரை கண்டு ஸ்தோத்தரித்தான்.

தேவரே! ஜகந்நாதரே! ஜகத்வ்யாபாரத்தைத் தாங்குபவரே! பரமேச்வர! விருபாக்ஷ! உன்னை நமஸ்கரிக்கிறேன். அநுக்ரஹம் செய்ய வேணும்! ப்ரம்ஹா, விஷ்ணு, ருத்ரன், இவர்கள் உலகவ்ருத்திக்கு மூன்றுவிதமாக செய்த உருவமுடையவர்கள். சூலபாணியே! உன்னை நமஸ்கரிக்கிறேன். எந்த ஸேவை பரமான ப்ரம்ஹத்தை நிர்மலமாய் ஸ்தோத்ரம் செய்கிறதோ? அக்க நுணைநிதியான சூலபாணியே! உனக்கு நமஸ்காரம். இவ்விடத்திலேயே முன்பு என்விசேஷ ஹேதுவை முன்னிட்டு வஸித்திருந்தும், எந்த ப்ரஸன்னாத்மாவாக ப்ரகாசிக்கிறீரோ? அந்த சூலபாணியே! உம்மை நமஸ்கரிக்கிறேன். இவ்விதம் ஈசனை ஸ்தோத்தரித்து, அடிக்கடி நமஸ்கரித்த சிரமுடையவனாகி, வணங்கி இவ்விதம் சொன்னான்.

எனது பூஜை உமது பாதகமலங்களில் ஸதா செய்யப்படுகிறது குறைவோ, நிறைவோ, இருப்பினும் அதை உமது ப்ரீதிக்கே செய்யப்படுகிறது. என அவ்வீசனை இவ்விதம் ப்ரார்த்தித்து, அடிக்கடி ஆதரவுடன் புண்யசாலி முனி; வெளிக்கிளம்பிச் சென்றான். அவ்வீசனது மேற்குப் பாகக் குளக்கரை வடபாகத்தில் புஷ்பம், வ்ருக்ஷம், நிறைந்த இடத்தில் மடம் நிர்மாணம் செய்துகொண்டு அழகிய தபஸ் செய்ய நிச்சயமுடையவனாகி, அதன் மத்தியில் ஈசனை விதிப்ரகாரம் ப்ரதிஷ்டை செய்து நியமமாகப் பக்தியுடன், கடுமையான தபஸ் செய்துகொண்டு, ஸ்ரீமூலநாதரைப் பூஜித்து வந்தான்.

எட்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## ஒன்பதாம் அத்தியாயம்.

ஸூதர்:— வாடிய சரீரத்துடன் தபஸ் செய்துகொண்டு, அவ்விடத்திலேயே வெகுநாள் சிவபூஜை செய்துகொண்டு, வஸிக்கையில்; பலநாள் சென்றது. ஒரு ஸமயம் விடியற்காலையில் எழுந்து, தனது ஸூத்ரப்ரகாரம் விபூதி ஸ்நானம் செய்து, தண்டம், கமண்டலு, இவைகளுடன் புஷ்பக்குடலை தாங்கி, ஜடைகள் எட்டும் நிரம்பி, அலங்கார சிரஸடைந்த முநி ஈசன் பூஜைக்குறிய புஷ்பங்களை கொண்டுவர வனமடைந்தான். அவ்விடம் மலர்ந்த புஷ்பங்கள் மஹத்தானவாசனை உள்ளதாகவும், ருசியான கந்தமூலங்களும் ஜீவாதார ஹேதுக்கு உகந்தனவாகவும், இருந்தன. தர்ப்பம், புஷ்பம், ஸமித், இவைகளை வனத்தி

ளின்று எடுத்து, ஈசன் ப்ரத்தியக்ஷமாக எங்கு இருக்கிறரோ? அந்த தன் ஆச்ரமத்திற்கு வந்தான்.

பின்பு ஈசனுக்குப் பூஜை செய்யப் புஷ்பங்களைச் சோதனை செய்கையில்; புஷ்பங்கள் பூச்சியால் கடிக்கப்பட்டுள்ளதை பார்த்துப் பயந்து மறுபடி சொன்னன். ஸூர்ய உதயம் ஆன பிறகு வனத்திற்குச் செல்வனேயாகில்; அதுவரை உண்டான புஷ்பங்கள் தேன் பலத்தால் கட்டாயம் துஷிக்கப்பட்டே இருக்கின்றன. விடியற்காலை எழுந்து போக எற்பாடு செய்தும், செல்ல இருட்டினுல் மறைந்தவழி அடையக் கஷ்டமாயுள்ளது. அப்படி இருந்தும், நான் பூஜைக்குப் புஷ்பங்கள் எடுக்கச் செல்லும் ஆசையே கொஞ்சம். வேறு ஒன்றும் முடியாது. விழுந்த பனித்துளிகளால் நன்கு புஷ்பங்கள் அபிஷேகம் செய்யப்பட்டுள்ளன. ஆகாசத்தில் மேகங்கள் போல் கிளைகளில் அதிக ருஜுத் தன்மை அடைந்து பெரிய கஷ்டத்தை அடைவிக்கிறது. விழுந்த பனித்தாரை உள்ள மரங்களில் நான்கு புறமும் எறக் கால், கை, வழுக்குகிறது. கையிலும் ருஜு இல்லை, ஒருஸமயமும் முடியவில்லை. வண்டுகளால் ஸாப்பிடப்பட்டு மொட்டுடன் கூடிய புஷ்பங்கள், முதல் நாள் மலர்ந்த புஷ்பங்கள், வாஸனையற்று விசேஷமாய் உள்ளது. வேத வாக்யங்களால் பூஜைக்கு அப்புஷ்பங்கள் தள்ளப்பட்டுள்ளன. என்ன செய்வேன்! என்ற சிந்தனையுடன் அடிக்கடி துக்கமுடையவனுகிறேன். ஈசனே! எனக்கு இப்பொழுது அநுக்ரஹம் செய்யவேணும். கருணை இருக்குமானல், ஸத்யமாக என்னை இப்பொழுது காப்பாற்றும்! பக்தி இல்லாத எனக்கு ஈசனே! உம்மையன்றி எனக்குச் சரணம் அடைய வேறு கதி இல்லை! என்ற நிச்சயமனதுடன்; வேதனையால் மறுபடியும் சொல்லுகிறேன். நான் பக்தியின்றிச் செய்த பூஜை எங்கே? ஈசன் எங்கு இருக்கிறர்! ப்ரம்ஹா, விஷ்ணு, தேவர்கள் அர்ச்சித்தது எங்கே? பக்தி இல்லாத மனுஷ்யர்களுக்கும் உமது உருவம் காணப்படுகிறதில்லை. என்ற வேதாகம வாக்யங்களை நான் தத்வார்த்த மறைதலுடன் அறிகிறேன். துக்கமுடைய முநிகுழந்தைக்கு எதிரில் விருஷபாரூடராக அம்பிகையோடு கணங்களுடன், விஷ்ணு முதலிய தேவர்கள் ஸ்தோத்தரிக்க ப்ரத்யக்ஷமானீர், அப்புண்யசாலி உம்மை ஆனந்தமாகப் பார்த்து பாதங்களில் நமஸ்கரித்தான். அவனுக்கு அநுக்ரஹம் செய்தீர். அது போல் எனக்கும் தாங்கள் ஸந்தோஷமாக அநுக்ரஹிக்க வேணுமென நமஸ்கரித்துச் சொன்னன். உடனே அவனை உமாபதி, ஸந்தோஷமடைந்து,அம்ருத கிரணங்களால் பார்த்துச், சிலவார்த்தைகளைச் சொன்னர்.

குழந்தாய்! உனது தபஸ், ஒழுக்கம், இவைகளால் நான் ஸந்தோஷ மடைந்தேன். ச்ரத்தையுடன் நீ செய்த நித்ய பூஜையால் பயமில்லா மல் ஆயிற்று. எவ்வஸ்துவினிடம் உனக்குப் பூமியில் திவ்ய ஆசையோ? அதை வேண்டியவரை உனக்குக் கொடுக்கிறேன் கேள்!

ஸூதர் :— இவ்விதம் பரமேச்வரன் சொல்லியதும் முநி கேட்டு ஸந்தோஷமடைந்து அவரிடம் அழகிய வரம் யாசித்தான். விடியற் காலையில் உமது பூஜைக்குப் புஷ்பம் கொண்டுவரச் செல்லுதற்கு எப் பொழுதும் கை, கால்கள், கண்கள் புலி உருவமாக எனக்கு மங்களமாகக் கிடைக்கவேணும்! மற்றும்; பரமேச்வர! எவ்விதம் இவ்விடம் உமது பூஜையை நான் செய்தேனே? அதுபோல் புலி உருவம் தரித்த உருவ மும், எப்பொழுதுமே இருக்கவேணும். குறைவோ? நிறைவோ? செய்த குற்றங்கள் இனி சாந்தி அடைக! ஈசனே! இன்று முதல் என் பெயரி னால் இப்பட்டணம் ஸகல உலகங்களிலும் கியாதி அடையவேணும் என்று கேட்டதும்; எவராலும் அடையமுடியாத வரத்தை ஸந்தோஷத் துடன் ஈசன் அவனுக்கு கொடுத்தார். பிறகு ஸந்தோஷ சித்தமுடைய முநிக்கு, மனதில் ஆனந்தக்கண்ணீர் அதிகமாக உண்டாயிற்று. முனி ஈசனை ஆதரவுடன் வணங்கி, அடிக்கடி நமஸ்கரித்து நின்றான்.

பின்பு அம்முனிக்குப் பக்தி பாவனை உடைய பகவான் வரமளித்து பார்வதியுடன் ஆகாயத்தில் உடனே மறைந்தார். அன்றுமுதல் அம் முனிக்கு, வ்யாகரபாதர் என்ற பெயர் அடைந்து, அதிக க்யாதி அடைந்தது. மறுபடி முன்போல் தினமும் பூஜையே முக்யமாய்க் கொண்டு, விடியற்காலையில் பக்தியுடன் எழுந்திருந்து, முன் சொல்லிய ப்ரகாரம் பயமின்றித் தினசரி ஸமஸ்த கார்யங்களையும் செய்து, உலகம் நடுங்கும் வகையில் வண்டுகளால் முகர்ந்த உயர்ந்த வாசனை உடைய புஷ்பங்கள் பலவற்றைக் கொணர்ந்து, பகவானுக்கு நித்யம் பூஜை செய்து வந்தார். அங்கேயே வெகுகாலம் நல்ல அநுஷ்டானத்துடன் பரமப்ரீதியாக வஸித்து வந்தார். இவ்விதம் இவ்வத்யாயத்தை எவர் படித்தாலும், கேட்டாலும், ஸர்வ இஷ்டங்களும் அடைந்து, சிவ ஸாயுஜ்யமடைய ஹேதுவாகும்.

ஒன்பதாவது அத்தியாயம் முற்றியது.

———

## பத்தாம் அத்தியாயம்.

ஸூதர் :— இவ்விதமிருக்கையில்; ஸர்வ ஸந்தோஷத்துடன் சங்கரர் அநுக்ரஹ ஆச்ரயமுடைய நல்ல ஜன்மாவினால் தபோ உருவாகிக் குலத்திற்கு விளக்குப்போல் இருக்கும் அப்புத்ரனைக் காண அவரது பிதா கேள்விப்பட்டு தன்து தபோ வனத்திலிருந்து வந்தார். வருகிற தகப்பனாரைப் பிரீதியுடன் வேகமாகப் பையன் பார்த்து, எதிர்கொண்டு அழைத்து, அங்கு பூமியில் நமஸ்கரித்தான். தகப்பனர் பையனை எழுந்திருக்கச்செய்து, அடிக்கடி கட்டி அணைத்து, அவனைப்பார்த்ததும்; பெரிய ஸந்தோஷமடைந்தார். பையனால் காண்பித்த வழியுடன், அற்புத உருவமுடைய ஸ்வர்ண தாமரைக்குள தீர்த்தத்தை அடிக்கடி அவர் கண்டார். அச் சுபச்ரேஷ்டமான தீர்த்தத்தில் உடனே செய்த ஸ்நான விதி உடையவராகி ஸ்ரீமூலஸ்தான நிலயத்திலுள்ள சங்கரனைப் பூஜைசெய்தார். பையன் எங்கு ஈசனை ஸ்தாபித்தானோ? அங்கு ஆத்மாவுக்கு மடமுள்ள அவ்விடத்தில் ஈசனை விதிப்ரகாரம் பிதா, பக்தியால் பூஜை செய்தார். வனத்தில் உண்டான மெதுவுள்ள கந்த மூலாதிகளால் பிதாவுக்கு திருப்திசெய்து வைத்து, அவ்விடம் பலநாள் க்ஷணம் போல் கழிந்தது. இவ்விதம் வெகுகாலம் சென்று, பிறகு ஒரு ஸமயம் முனிவர் ஈசனைப் பூஜைசெய்து, பக்கத்திலுள்ள பையனைச் சொன்னார்.

குழந்தாய்! உன்னால் நமது வம்சம் நன்கு பிரதிஷ்டை அடைந்தது. நீ ஸகல பூமியையும் உயர்த்தி, நித்யம் பரிசுத்தம் அடையச் செய்தாய், மறுபடி நம் வம்சத்திலுள்ள பித்ருக்களுக்கு எப்பொழுதும் பித்ருபக்திக்காகத் தனது கடனை ஒழிக்க மனதைத் திடம்செய். முன்பு ஆச்ரமம் உன்னால் எவ்விதம் சுத்தமாகப்ரகாசித்து அடைந்ததோ? அவ்விதம் இவ்விடத்தில் நீயும் இரண்டாவதாகச் செய்ய வேணும். ஆகையால் நீ விசேஷமாக எனது வார்த்தையைக்கேள். என மறுபடியும் மதுர வார்த்தையை தர்ம பிதா சொன்னார்.

ஒழுக்கம், உருவம், அலங்காரம், முதலியவை உடைய வஸிஷ்டரது தங்கை பெண்ணை உனக்கு விதிப்ரகாரம் தர்மபத்னியாகச் செய்துகொள்! என்றதும்;

காலத்தில் ஒழுக்கமுடைய வ்யாக்ரபாதரால் அக்கன்னிகையைக் கல்யாணம் செய்வித்து, உபமந்யு என்ற புத்ரனையும் அடைந்தார். வஸிஷ்டரது தர்மத்திற்கு ஸத்ய உருவமுடைய தர்மபத்னீ ஸதீதேவி;

ரிஷிக்குக் குழந்தை உண்டானதாகக் கேட்டு, தபோவனத்தினின்று குழந்தையை அழைத்துவர சென்று புண்ய லக்ஷணமுள்ள ஸ்நேக தன்மையால் எடுத்துக்கொண்டு தன் ஆச்ரமத்திற்குக் கொண்டுபோய் அழகாக வைத்து, ஸர்வ உபகாரங்களுடன் வளர்த்துவந்தாள்.

காலம்தோறும் மிகச்ரத்தையுடன், குற்றமற்ற காமதேனு பால் குழந்தைக்குக் கொடுத்து த்ருப்திசெய்து வைத்ததில்; குழந்தை வளர்ந்து வந்தது. வஸிஷ்டரது ஆச்ரமத்தில் அவர்களால் நன்கு காப்பாற்றப்பட்டு வருகையில்; கொஞ்சகாலம் குழந்தைக்கு அங்கு விளையாட்டாகவே சென்றது. அப்பா, தாத்தா, இருவரும் ரொம்பவும் கேள்விப்பட்டவர்கள். அக்குழந்தைக்கு அதிக ஸ்நேஹம் கொடுத்து வந்தனர். தன்னைக் காட்டிலும் அதிகமாக குழந்தையாக உயர்வாகப் பார்த்து வந்தனர்.

காமதேனுவின் பால் குடித்து வளர்ந்த அப்பையன், மஹா தேஜஸ்வியாய் மறுபடி அங்கிருந்து தகப்பனார் ஆச்ரமத்திற்குக் கொண்டுவரப்பட்டான். பால் சாப்பிட்டு வளர்ந்துகொண்டு வந்து விட்ட பையனைத் தகப்பனார் பார்த்து தன் ஆச்ரமத்திற்கு உசிதமுள்ள கந்த மூலாதிகளையே அவனுக்குக் கொடுத்தார். அம்மா, அப்பா, இருவர்களாலும் ஆதரவுடன் கொடுத்த அவைகளைக் குழந்தை ஆதரிக்காமல், காமதேனுவின் பாலை நினைத்து அழ ஆரம்பித்தது. அப்பொழுது வருத்தமடைந்து வாடிக்கஷ்டப்படும் குழந்தை முன்னிலையில் அடிக்கடி தகப்பனார் பார்த்து இவ்விதம் சொன்னார்.

குழந்தாய்! என் அழுகிறாய்! எப்பொழுதும் இங்கு அழுது என்ன செய்யமுடியும்! உண்மையாகவே ஈசன் ஒன்று தவிர வேறு ஒன்றையும்; நான் அறிகிறேனில்லை. அந்தச் சுத்தமான காமதேனு தபோவனத்தில் இருக்கிறதல்லவா? அதன் பால் ரஸம் நான் ஒரு ஸமயமும் அறிகிறேன் இல்லை. குழந்தாய்! கேள்! உண்மையாகவே சொல்லுகிறேன். இப்பரமேச்வரனைத் தவிர; வேறு ஒன்றையும் இங்கு நான் காண்கிறதில்லை. முன்னொரு ஸமயம்; ஸமஸ்த தேவர்களுக்கும் தயாநிதி நித்யம் ஆனந்தம் கொடுக்கக்கூடிய நிறைய ரஸமுடைய அம்ருதம் கொடுத்தார். உனக்கும் ஈசனே பரமகதி. அவரது ப்ரஸாதத்தால் ஸர்வ ஸம்பத்துகளும் கிடைக்கும், எனச் சொல்லிய மதுரமான வாக்யத்துடன் குழந்தைக்கு ஈசனைக் காண்பித்து வைத்தார்.

அக்குழந்தையும்; பால் சாப்பிடுவதில் ஆதரவுடையதாகி, சுற்றிப் பார்த்து ஈசனது முன்னிலையில் மறுபடியும் அழுதது. பசி பயத்தால் கஷ்டப்பட்டு அழுதுகொண்டு முன்னிலையில் உள்ள பையனை வெய்யி லில் வாடிய புஷ்பம்போல், சங்கரர் பார்த்தார், கருணையின் பூர்ண புஷ்பம் போன்ற மலர்ந்த கண்ணுடைய ஈசன் பால் சாப்பிட இச்சை யுடைய அக்குழந்தைக்குப் பால் ஸமுத்திரத்தை உடனே கொடுத்தார். அப்பையனும் ஈசனின் வரமடைந்து, ப்ரஸன்ன மனதுடன் திக்குகள் எங்கும் கேள்விப்படத்தக்க வைபவமுடையவனாய், இருந்து வந்தான். பிறகு பிதா வ்யாக்ரபாதமஹர்ஷி பரமேச்வரர் ஸந்நிதியில் இந்த்ரியங் களை அடக்கிச் சிவபாவனை அடைந்த மனதுடன், ஆனந்தமளிக்கும் சைவயோகம் செய்ய ஆரம்பித்தான்.

இடது காலைக் கீழே ஊன்றி, தாளிட்ட பூமியுடையவனாகி கஷ்டத் துடன் கொஞ்சம் வணங்கிய கைபாவத்துடன், ப்ரகாசிக்கும் உதார பக்தியுடைய மார்புஸ்தானமடைந்தும், அசைவற்ற மரம்போல் உருவ மடைந்து, மேல்தூக்கிய இருகை அடைந்தும், அழகிய சரீரமத்தியில் அசைவற்ற பெரிய காந்தியுடைய சிரஸைநீட்டி, பற்களால் தொடப் பட்ட நாக்கு நுனியில் ப்ரகாசிக்கிற தாமரை போன்ற முகமுடையவ னாகி, கல்யாண குணமுடைய நீண்ட மூக்கு நுனியில் வைத்த கண்ணு டையவனாகி, இளம் காற்றினால் புஷ்ப மலரின் வாஸனைபோல் ஸேவித்து, பத்மாஸனத்தில் இருக்கும் முநிக்கு, ப்ரஸன்ன சித்தத்தில் பெரிய சிவயோகம் அப்பொழுது உண்டாயிற்று. இவ்விதமிருக்கும் அவனுக்கு; ஓர் ஸமயம் யோக வைபவத்தால் க்ருஹித்த ஈசன் ஸம்பந்த சுத்த ப்ரம்ஹப்ரவ்ருத்தி உண்டாயிற்று. அச்சமயம் சங்கரர் க்ருபை யால் மோஹத்தை ஸம்ஹாரம் செய்ய சிவன் யோகத்தால் இருட்டை ஒழித்து, ஆத்மஜ்ஞானமடைந்துள்ள முநிகளுக்கு, முன்பு தேவதாரு வனத்தில் திவ்ய தாண்டவம் எது காண்பிக்கப்பட்டதோ? அதைப் பார்க்கக் கட்டிஅணைத்த கழுத்துடையவனாகி, அவனுக்குப் பரமேச்வர னது பரமானந்த தாண்டவம் மனதில் கட்டுண்டது. அது கிடைக்காத தால் அடிக்கடி துக்கமடைந்தவனாகி, வெகுகாலம் அவ்விடம் சிந்தை யுடன் கஷ்டப்பட்ட சரீரமுடையவனானான். எந்தப் பூமியில் ஸாக்ஷாத் தாக ஆனந்த ஸமுத்திரத்தில் அம்ருதம் போல் ஈசன் தாண்டவம் செய்கிறாரோ? அவ்வனத்தில் தபஸிற்காக செல் என ஆஜ்ஞாபிப்பது போல் கேட்டு மூலஸ்தானத்தைப் பூஜை செய் என எனக்குப் பிதா சொல்லியது எங்கே? இல்லாவிட்டால் தானே அறியக்கூடிய ஸர்வ

உலகிற்கும் ஸுகமளிக்கவல்ல பரமேச்வரனது பாதாரவிந்தத்தை எவ் விதம் பூமியில் பார்க்கப்போகிறேன்.

மற்றும் எனக்குப் பரமான அப்பாக்யம் இல்லேயோ? எனக்குப் பார்வதியுடன் கூடிய ஈசன் பரமான ஜ்ஞானத்தால் ஆகக்கூடிய ஆனந்த தாண்டவத்தை எப்படிக் காண்பிக்கப் போகிருர்? எனக்கஷ்ட மடைந்த மனதுடன் பிதாவின் வாக்யவசத்தால் இருப்பவனுனேன். ஸ்வபாவமாகவே ஈசனது ஆனந்த தாண்டவம் காட்டப்படுகிறது. என அதில் மறுபடியும் நினைத்துக்கொண்டிருக்கிற முனிக்குத் தன் கஷ்டத்தைத் துலேப்பதில் காரணமடைந்தது. உன் பார்வையில் அர்த்தமுடைய அவனுக்கு ஸர்வ மங்களமுடன் எவ்விடம் நர்த்தனம் செய்கிருரோ? அவ்விடம் பெயர்கள் கேள்விப்படுகிறது. பூமியில் அவர் பரமானதத்வஜ்ஞான குரு. ஸர்வ இஷ்டங்கள் கொடுக்கக்கூடிய புதையல், சுத்தமாய் ஸத்உருவமுள்ள பரமானந்த நித்யர், புண்டரீக குஹையில் ச்ரேஷ்டமாய் சுத்தமுள்ள உட்புரமடைந்துள்ளவர். உத்தம முள்ள அற்புதமாய் பரிசுத்தமடைந்த ஆகாச உருவம். உண்மைக்கு இருப்பிடம், ஆனந்தஜ்ஞான ஸுக உதயமுடைய ஸூஷுமினை நாடி. தனது முக்திக்குச் சிதம்பரம். ப்ரகாசிக்கிற ப்ரம்ஹ உருவம். தேவர் களுள் ச்ரேஷ்டர். பெரியதோர் சக்தி உடைய திவ்யமான பெரிய சிவாலயம் அவ்விதம் இருக்கிறது. இவ்விதம் மற்றக் கோடிக்கணக் கான வேத ஆகமங்களால் எப்பொழுதும் சொல்லப்பட்டும், கேட்கப் பட்டும், உள்ளது. இவ்விதம் சொல்லிஉள்ள பரமான ஈசனது நர்த்தன பூமி, அக்காரணத்தால் நன்கு விஸ்தரிக்கப்பட்டுள்ளது.

எவ்விதம் பூமியில் முன்பு காணப்பட்டதோ? அவ்விதமே சபை இங்கு உள்ளது. அப்படி இருந்தும், பூமியில் முநிகளால் ஈசனது தாண்டவத்தைப் பார்க்கப்பட்டது. அது நினேக்கப்பட்டு, அது எனக்கும் இவ்விடத்தில் உண்டாகப்போகிறது. என மனமும் தாண் டவத்தைப் பார்க்கவேணுமென்ற இச்சை. முநிக்கும் துக்கம், ஸந்தோ ஷம், இரு ஸமுதாயத்திலும் மனம் முழுகி இருந்தது. மறுபடி விழித்த முநிக்கு ஈசன் அநுக்ரஹத்தால் இதுதான் யோகாநுபூத நர்த்தன ஸ்தானம், எனப்புத்தி உண்டாயிற்று. கருணமூர்த்தி ஈசன் ஸாக்ஷாத் தாகச் சிதம்பரம் இதுதான் என இவ்விடம் அடைந்த எனக்குத் தேவர் ஸஹாயம் கொடுத்துக் காண்பிக்கப்போகிருர்? என்று இவ்விதம் மனதில் நிச்சயித்து, வ்யாக்ரபாதர் வெகுகாலம் அவ்விடம் இதர மன மின்றி இருந்து நர்த்தனத்தைக் காண இருந்தார்.

ஸூதர்:— முநிகளே! இந்த அத்யாயத்தை எவன் படிக்கிறனே? கேட்கிறனே? அவன் முக்தி அடைகிறன்.

பத்தாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## பதினேறம் அத்தியாயம்.

ஸூதர்:— முநிகளே! இவ்விதம் அம்மூலஸ்தானத்திலேயே வஸிக்கையில்; ஈசனது வருகைக்கு அழகிய நிமித்தங்கள் உண்டாயிற்று. பின்பு ஸர்வசாஸ்திரங்கள் தெரிந்த பதஞ்சலி முநி அவ்விடம் கடுமையான தபஸ் செய்யவந்தார்.

ரிஷிகள் :—அவ்விடம் இவ்வித யோகத்தில் ஒரே மனமுடைய அம் முநிக்குப் பக்கத்தில் எவ்விதம் பதஞ்சலி வந்துசேர்ந்தார்? என்றதும்;

ஸூதர் :— க்ஷீர ஸமுத்ரத்தில் மல்லிகைக் கொடிகள் விஸ்தீர்ணமடைந்து நல்முத்துப் போலும், பவழம் போலும், நான்குதிக்கிலும் கதவுபோல் உள்ள ப்ரகாசமடைந்த கல்பகவ்ருக்ஷ பூங்கொத்து போலும், தேவச்ரேஷ்டர், முநிகள், சிரவிஞல் ஸ்தோத்தரிக்கும். வேத ஸ்தோத்ரமும், மணி தீபம்போல் ப்ரகாசிக்கும் பாம்புபோல் மாலை வரிசையுமுள்ள சேஷனிடம் கமலாபதி படுத்து இருந்தார். ஒரு ஸமயம் அந்த திவ்ய யோகநித்ரையை விட்டு, மெள்ள எழுந்து உட்கார்ந்து, வெகுநேரம் வரை சிந்தனையில் இருந்தார். பிறகு கை கூப்பிய சிரஸுடன் மணி த்வீபப்ரகாசமுடைய அவர் சிவ சிவ என காணமுடியாத பரமானந்தமடைந்து கடைசியில் சொன்ஞர்.

அதை லக்ஷ்மிதேவி கேட்டும், பார்த்தும், ஹ்ருதயத்தில் பீதி அடைந்தாள், படுக்கையில் உள்ள அந்த சேஷனும், அக்கணமே பயமடைந்தான். ஆனந்தத்தால் பெருத்த சரீரத்யானமடைந்த விஷ்ணுவை தனது பாம்பு உருவப் படுக்கையில் தாங்க ஆதிசேஷஞல் அப்பொழுது முடியவில்லை.

பிறகு அவ்விஷ்ணு, இருவர்களது பெரிய பீதியைக் கண்டு கண் விழித்தவராஞர். அகில உலக இருட்டை க்ஷணிககாலத்தில் ஸம்ஹாரம் செய்ய உதயபர்வதத்தில் ஸூர்யன் உதயமானது போல் அங்கு காணப் பட்டார்.

தாமரைபோன்ற மலர்ந்த முகமுடைய விஷ்ணு, ஆனந்த முத்ரை யுடன் நித்ரையை விட்டு விடியற்காலை ஸந்த்யாதேவியை விதிப்ரகாரம் அப்பொழுது உபாஸித்து, அவ்விடம் திவ்ய மாணிக்க மண்டபத்தில் தேவர்களால் ஸ்தோத்தரிக்க, நல்முத்து அலங்கார ப்ரகாசம்போல் சுபமான ஸிம்ஹாஸனத்தில், அலங்காரமாயிருந்தார். திவ்யமான சிவனது ஆனந்த அம்ருதத்தை மிச்சமில்லாமல் பானம் செய்து, ஸுக கார்யமுடைய விஷ்ணு, ஸர்வகார்யங்களையும் விட்டு, அதிவேகமாய்ச் செல்லும் நதிக்கரைபோல், நீண்டு அடிக்கடி பூமியை யத்னத்துடன் மேல் அடைவதுபோல் பெரியதாய் அடைந்து, பரமேச்வர பாவத்தை ஆத்மஸ்வரூபத்துடன் மறுபடி குறைவின்றித் திரும்பினார்.

திரும்பிய பாவமடைந்ததும், முன்பாரமடைந்து சேஷன், விழித்து பாரம் லேசாக ஆனது நல்லது! எனப் பெருமூச்சுவிட்டு, ஆயிரம் தலை போன்ற கைகளால் புஷ்ப அர்ச்சனையும்செய்து, வெகுநேரம் பூமியில் நமஸ்கரித்துத் தெரிவித்துக்கொண்டான்.

சேஷன்:— இன்று என்ன பகவானே! உமக்கு என் யோகசயனத்தில் நித்ரை இன்றி இருந்தகாரணம் யாது! காரணமின்றி நினைக்க முடியாததை இப்பொழுது ஸந்தோஷமாய் எனக்குச சொல்ல வேணும், கேட்கபயமடைகிறேன். நித்யம் க்ருபை என்மேல் ஸத்யமாக இருக்குமானால்; இதன் காரணத்தை சொல்லும்! என்னை காப்பாற்றும்! என இவ்விதம் ஆதி சேஷனால் சொல்லியதும்; விஷ்ணு ஸந்தோஷத்துடன் மெதுவாக சொன்னார்.

விஷ்ணு:— சேஷா! நீ பயத்தைவிடு. தாமரைபோன்ற முகமுடைய ப்ரியை லக்ஷ்மியும், பயமடையவேண்டாம். உங்கள் இருவர்களுக்கும் இவ்விடம் என் இப்படி பயம் பெரியதாக ஏற்பட்டது?

ஈசன் இப்பொழுது என்னிடம் எதை செய்தாரோ? அதை அநுக்ரஹம் எனகொள். இங்கு சொல்ல கட்டாயம் முடியவே முடியாது. அப்படி இருந்தும், அவ்வற்புதத்தை இப்பொழுது விஸ்தாரமாக சொல்லுகிறேன். சேஷனே! ஸாவதான மனதுடன் நீ கேள். இன்று ஜகத்குருவுக்கு பூஜையை ஸர்வ தேவர்களால் செய்யும் சிவ பர்வதம் அடைந்தேன். அப்பொழுது கைலாஸத்திற்கு அலங்காரமாய், இளம் சந்த்ரனை சிரஸில் அடைந்த, ஈசன் வணங்கும் என்னை

மலர்ந்த முகக்கண்பார்வையால் பார்த்து, மெள்ள பக்கத்தில் கூப்பிட்டு உட்காரவைத்து, அவ்விடம் ப்ரியமனதுடன் இருந்தார்.

பூமியில் நமஸ்கரித்த என்னை கையைகொடுத்து அங்கு எழுந்திருக்கச்செய்து; தாரம், சங்கம் முதலியன பூமியை பிளப்பதுபோல் முரஜ வாத்ய சப்தத்துடன் நந்தியால் அடிக்கப்பட்டது. சித்தர், கந்தர்வர், யக்ஷர்; முதலிய கணங்கள் பார்த்துள்ள பார்வையுடன் வேதம், ஆகமம், முதலிய தத்வமூர்த்திகளால் அடிக்கடி ஸேவிக்கப்பட்டும் கணங்களின் பதலக்ஷணங்களோடு சேர்ந்த தாளமும், மஹாத்மா நாரதரால் கானம் செய்யப்படும் கானமும், கைலாஸபர்வத மூலத்தை ஸந்தோஷமாய் அடைவிக்க செய்தன. அவ்விடம் திவ்யபூமியில் உட்கார்ந்துள்ள சங்கரர் என்னைப்பார்த்து கொஞ்சம் சிரித்து சொன்னார்.

விஷ்ணுவே! தேவதாருவனத்தில் திவ்யமாக வெகு முநிகள் வஸிக்கிறார்கள். அங்கு அவர்கள் மனதை விசேஷமாக அறிய செல்வோம். அக்காரணத்தினால் சந்த்ரோதயம்போன்ற ஸமானகாந்தி உடைய நான் கொஞ்சம் கண்களுக்கு மோஹனமுள்ள அழகிய உருவமடைய அலங்கரிக்கிறேன். நீயும் அதற்கு உசிதமுடைய ஸ்த்ரீ உருவமடை என சொல்லி, தன் அழகிய சரீரத்தை ஈசன் அலங்காரம் செய்து கொண்டார்.

பிறகு ஈசன் ஸர்வ அலங்காரமணிந்து, தேவாஸுர சிரோரத்னங்களது காந்தியால் ஹார்த்தி எடுக்கப்பட்டது போல் கால்களில் தொடப்பட்ட திவ்ய மாணிக்கமய மிதிஅடிகளை அணிந்து, அழகுடன் சேர்ந்த வெண்மை கௌபீன சரீரமடைந்து, மார்பு ப்ரதேசத்தில் ப்ரகாசிக்கிற பூணூலும், பெரிய கைமேல் தொடப்பட்ட விபூதி தாரைகளும், இடது வலதுகை ப்ரதேசங்களில் கபாலம், டமருகம், முதலிய ப்ரகாசமும், ஸௌந்தர்ய கலைபோன்ற மடிப்புகளுடன்சேர்ந்து கழுத்து ப்ரதேசமும், உதடுகள், பற்கள், ப்ரகாசத்தினால் முகத்தில் சேர்ந்த முனைபோன்ற புன்முறுவலும், அழகிய ஸமுத்ர அலையில் வீசும் காதுவரை உள்ள மனோஹரமும், ஜகன்மோஹனமடைந்து தொங்கும் கண்களது சுற்றுதலும், நீருண்ட மேகம்போல் திவிலை உடைய அழகும், சந்திர மண்டலம போன்ற நெற்றி ப்ரதேசமும், நன்கு சுற்றி விழித்து ப்ரகாசிக்கும் நெற்றிபொட்டும், அதிக ப்ரகாசமுள்ள தேன்கூடு அடையும் வண்டுபோன்ற அழகிய தலைமயிரும், பரமமூர்த்திபோல் ப்ரகாச

மும், நற்பவழம்போல் சிகரமடைந்த வேஷமும். அடைந்தார் பிறகு நாங்கள் இருவரும் அடிக்கடி புறப்பட எத்தனித்தோம்.

பதினேரும் அத்தியாயம் முற்றிற்று.

---

## பன்னிரண்டாம் அத்தியாயம்.

விஷ்ணு:— பிறகு நானும் ஈசனது ஆஜ்ஞையை பரிபாலனம் செய்ய உலகில் மோஹன சக்தியில் அபஹரிக்கும் விதமாக ஸம்ஸார உருவமெடுத்தேன்.

வண்டுகூட்டமுடைய ப்ரகாசம்போல் தலைமயிர் பாரத்தில் கட்டிய மலர்ந்த புஷ்பங்களை இருட்டில் நக்ஷத்ரம் போல் வைத்து, நெற்றி பாகத்தில் எட்டாம் பிறை சந்த்ரனுக்கு ஸமான அழகுள்ள நெற்றிப் பொட்டுடன் வைத்து, ஜகன் மோஹனத்தால் ப்ரகாசிக்கும் ஸ்தன பாரத்தில் மத்யசேர்க்கையடைந்து, சுபமாய் சலிக்கும் வஸ்த்ரம் அணிந்து தாமரை போன்ற கைகளில் மலர்ந்த கல்ஹார புஷ்பப்ரகாச முள்ள பாதசிலம்பு ஒட்யாணம் இன்னும் அநேக ஆபரணங்களை அலங் கரித்து, அவர் ஸமீபம் நான் அடைந்தேன். ஈசனும்; அச்சமயம் ஆதர வுடன அங்குவந்த என்னை முநி மோஹனத்திற்கு இதுவே தகுதி என சுபமான புருவ நெரிச்சலுடன் பார்த்து, காமனை ஜெயித்த தீரர்களான தபஸ்விகளும் அவ்விடம் க்ஷணிககாலம் முக்யமாக இது என்ன! என்ன! என இப்பொழுதும் நினைத்து ஜெயிக்கப்பட போகிறவர்கள் அல்லவா? என நல்லது! நல்லது! என புருவநெரிச்சலுடன் பார்த்து, அதுஸமயம் மெள்ள பகவான் உலக மோஹனசக்தி உண்டாக்க, சிரிப்பையும்; அப்பொழுது என்னை பார்ப்பவர்களுக்கும், உண்டுபண்ணினர்.

பிறகு அவ்விடம் பார்வதியை நிறுத்திவிட்டு, என்னுடன் கூடவே புருஷவேஷத்துடன் பூமியில் நடந்து, மந்த்ரபர்வதம் அடைந்தவரானர். புண்யமில்லா முநிகள், ஸேவிக்கப்படும் மனதினல் அடைய முடியாத உருவத்துடன், அடைந்தார். அப்பொழுது முநிகளின மங்களமுள்ள ஆச்ரமங்களை அடைய, அவ்விடம்தான் ஒருவராகவே வெளிஅங்கணங் களில் இருந்தார். விலைமதிக்க முடியாத பாதசிலம்பு சப்தத்தினல் ப்ரகாசமடைந்து, மூன்று உலகங்களையும் ஸந்தோஷிக்க, புன்முறுவ லுடன் அடிக்கடி அவ்விடம் டமருக வாத்யத்தை சப்திக்க செய்தார்.

ஆச்ரமத்தில் உள்ளவர்கள் அவ்விடம் பிக்ஷைகொடுக்க வெளிவந்து ஈசனது கோடிக்கணக்கான அபிநயங்களேயும் பார்த்து அவ்விடம் அவரை பின் தொடர்ந்தனர்.

பிறகு மன்மத பாணம் அவர்கள் சித்தமடைந்து எவப்பட்டும் அச்சமயம் இங்குமங்கும் பிக்ஷைவாங்கும் வ்யாஜமாக ஈசன் அவர்களே அங்கு த்டுத்து; மறைத்தார். அசையும் தலேமயிர் பாரத்தில் வைத்த கைபாகமுடைய ஒருவன் தொடர்ந்தும், இக்குமுடிச்சு அவிழ்ந்தவளும், மேல் புடவை நழுவினவளும், புன்சிரிப்பு காந்தியால் சிலாகிக்கும் நடை உடையவளும், அவரது ஆலிங்கன ஸுகத்தைப்பார்த்து யாசிப்பவளும், அன்னமில்லாததினுல் அரிசியை கொண்டுகொடுப்பவளும், இவ்விதம் எல்லோரும் வெளிகிளம்பினர். அவர்கள் கைகளே அடைந்த மன்மத அக்னி அரிசியை உடனே பக்வமாக்கியது. சிலர் விடுபட்டு தடுக்க முடியாத காமபாண சித்தத்துடன் ஜன்மாவினுல் பீடிக்கப்பட்டனர். சிலர் அவரைப்பார்த்தே பாத்ரம் என்ற புத்தியால் பிக்ஷையை பூமிப்ர தேசத்தில் கொடுத்தனர். சிலர் பாத்ரத்தில் புஷ்பத்தை எடுத்து, நமஸ்காரம் செய்யமுயற்சித்தனர். சிலர் அவரது காலில் தாமரை போன்ற முகத்தை பார்ப்பவர்களாய் வைத்து இறைத்தனர். அவர் கைஅடைந்து வாடும் அப்புஷ்பங்களே சிலர் நான்குபுறமும் இரைத்தனர். முன்மாதிரியே பூமியில் மறுபடியும் பிக்ஷையை கொடுத்தனர்.

சிலர் புருஷனேப்போல் பார்த்து ஸ்நேஹத்தன்மையில் புருஷனுகவே எண்ணினர். சிலர் மன்மதனே ரதி அற்றவர் போல் மூர்த்தி கரித்தவர் என எண்ணினர். அச்சமயம் அடிக்கடி ஐந்து பாணங்களேயும் விட்டும், மன்மதமூர்த்தி வந்ததோ? என இவ்விதம் பலர் பேசினர். பிக்ஷை கொடுக்கவந்த எனக்கு இம் மோஹத்தை காண்பித்து இருட்டில் சந்த்ரனேப் போல் தாங்கள் ஸூர்யனே? எங்கு செல்கிறீர்? என்றுரைத்தனர். சொல்லிய அம்ருததானம் செய்து போதும்! இப்பாவனே இனறி உண்ணக்கூடாது. இது உமது இச்சையோ? சொல்லும்! என சிலர் அவரை அணுகிக் கேட்டனர். இப்பொழுது உமது பார்வையாலேயே எந்த வளேயல்கள் நழுவினதோ? அவைகளே இவ்விடமே திருப்பிக் கொடுத்து வேகமாக இங்கிருந்துசெல்லும்! கொடுக்காமல் ஒரு அடிகூட நீர் செல்லக்கூடாது என, அவரை ஸந்தோஷத்துடன் ஸ்த்ரீ ஜனங்கள் ஒரு ஸமயம் தடுத்தது. சிலர் கபடமாக பிக்ஷை எடுக்கும் அவருக்கு தொங்குகிற ஸ்தனங்களே காண்பிப்பவர்களாகி இங்கு வாருங்கள் என

தனது ஆச்ரமங்களை காண்பித்தனர். என்ன? இவ்வீட்டில் கார்யம் உமக்கு? அதுவே வீடுதான் எனவும் சிலர் சொல்லினர். நாதனே! உமக்கு இவ்வனுந்தர பூமியில் புத்திக்கு எங்கு ஸந்தோஷப்படுகிறதோ? அப்பூமியை நீர் அடையும்! எங்களுக்கு ஒரு வார்த்தை சொல்லும்! என சிலர் சொல்லினர். எந்த வீட்டில் பிக்ஷை உமக்கு கொடுப்பதாக உள்ளதோ? அவ்விடமெல்லாம் செல்லவேண்டாம்! என ஒருவள் சொன்னாள்.

எங்களுக்கு அடைந்த ப்ராணன்போல் ஸந்தோஷமுண்டாக்கும் திசையை அடைவித்து, மறுபடியும் அவைகளை திருப்பி கொடும் என்று சிலர் சொல்லினர் என் வருகையினால் மன்மதவீடு எங்களுக்கு எது வரை அடையவில்லையோ? அதுவரை காப்பாற்றும்! என்று பயத்தினால் சிலர் யாசித்தனர். அவ்விடம் சீக்ரமாக வந்து சிவனை ஸந்தோஷத்துடன் சிலர் பார்த்து அந்த தரிசன ஆனந்தத்தினால் வெகுநேரம்வரை ஸ்த்ரிகள் நர்த்தனம் செய்தனர்.

அவ்விடம் நர்த்தனவேலை இருந்தும் கண்களுக்கு ஆனந்த அபிநயங்களுடன் அநேகர், மன்மதனால் ஏவி பலர் செய்ததை காண்பித்தனர். மனமதபாண அடிதாங்காமல் ஏவப்பட்டதுபோல்; அம்மஹேசனுக்கு பின்னாலும், சில ஸ்த்ரிகள் வேகத்தினாலும், ஓடினர் சிலர் பிக்ஷைக்காக இது என்ன உமக்கு! என்! என மீன்களை பாத்ரத்தில் போட்டனர். இவ்விதம் துஷ்டதன்மை உடைய மன்மதன் என் ஏவினான்! என சிலர் ஈசனிடம் கேட்டனர். நாதனே! நாங்கள் உம்கதியை அடைந்தவர்களானோம். எங்களுக்கு நற்கதியை காண்பியும்! என யாசிப்பதுபோல் அவரது பக்கத்தில் சிலர் அடைந்தனர். அவிழ்ந்த தலைமயிர் பாரமுடைய நல்முத்து ஆபரணம்போல் அடைந்த ஸ்த்ரீகள், பிக்ஷைக்கு வந்த அவரை பக்கத்தில் அடைந்தனர் தாமரை போன்ற விழியுடைய மற்றஸ்த்ரீகள், இடுப்பு வஸ்த்ரம் அவிழ்ந்தவண்ணம்; மன்மத பாணங்களால் ஏவி, அவர்மேல் க்ஷணிககாலம் விழுந்தனர். இவ்விதம் வனாந்தரத்தினால் ஸமஸ்த ஸ்த்ரீகள், சிறுவர்கள், வயதுடையவர்கள், எல்லோரும் உன்மத்தர்களானார்கள்.

அவ்விடம் அழகிய புருவநெரிச்சலுடன் க்ஷணகாலம் மிக்க மோஹிக்கப்பட்டு; ஈசனை அடிக்கடி கம்பீரமாக பார்த்து இவ்விதம் சொல்லி ஸ்த்ரீகள் இருந்தனர்.

பன்னிரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

பதின்மூன்றாம் அத்தியாயம்.

விஷ்ணு:— மஹாத்மாக்களான எல்லா தபஸ்விகளும், பெண்களும், கூடிய ஈசன் ஸந்நிதியில், என்னால் செய்யப்பட்டதை இனி சொல்லப் போகிறேன்.

அங்கு முநிகள் எல்லோரும் இவன் ஸாதுவான ஸ்த்ரீ இல்லை, தபஸ்வியும் இல்லை என்று என்னை எண்ணினர். அவ்விதமே நான் க்ஷணிககாலத்தில் ஸ்த்ரீ உருவமடைந்து, ஈசனது ஸந்நிதியில் பக்கத்தில் மெள்ள சிரிப்புடன் அழகிய உருவமடைந்து, போதித்து, உல்லாஸமாய் ப்ரகாசிக்கும் பார்வையில் வில்போன்ற புருவங்களில் மழுங்காமல் கெட்டியாக, நன்கு பூட்டிய பாணங்களை ஆச்ரமஸமீபத்தில் போட்டது; முநிகளின் கண்களுக்கு குறைவில்லா கண்பார்வைகளை செலுத்த நான் உத்யோகம் செய்கையில்; அவ்விடம் தபஸ்விகளது பெரிய தபோ வீர்யத்தினால் யஜ்ஞஸூத்ரமின்றி தனது லக்ஷ்யலக்ஷணம் முழுமையும், ஜடாபாரகட்டையும், கையில் உள்ள ருத்ராக்ஷங்களையும், ம்ருதுவான மானதோலையும், பரம தைர்யமாக எங்கள் பேரில் விட்டனர்.

பின்பு அவர்கள் என் பரவசமாகி என் பிதா ஈசன் அல்லவா? என ஸந்நிதியிலேயே ஆசையை என்பேரில் அப்பொழுது கொடுத்தனர். ப்ரம்ஹ வித்துகளால் அவ்விடம் நானும் குறைவில்லா தேஜஸ் அடைந்து, பிக்ஷாடனபரமாக, இவ்விதம் மெதுவாக ஆச்ரமவீதியில் ப்ரம்ஹத்தினிடம் பரமஆசை அடைந்து, அடிக்கடி என் முகம்பார்த்து, ஜன்மாவின் அபசார ஹேதுவை கேட்டனர்.

பிறகு அவர்களில் சில வயதான முநிகள் கோபமடைந்து, அடிக்கடி பயமின்றி ஆச்ரமங்களை அடைந்து, பிக்ஷை வ்ருத்திசெய்பவன் பார்! என்றனர். ஸாத்விகஸ்த்ரீகள் பாதிவ்ரத்யமே ஜகத்தில் இருப்பிடமடைந்துள்ளது! என க்ஷணிககாலத்தில் அதி உக்ரமாக த்வம்ஸம்செய்ய, அவனிடம் அதி கொடுமைஉள்ள பாணங்களை விட்டனர். ஸர்வ முநிகளால் விடப்பட்ட அவை, உடனே நிவர்த்திக்கிறதாகி, சாந்தமடைந்தது கண்டு, கோபமாகி மறுபடியும் கண்டனர். உடனே நியமத்தை நிறுத்தி, குண்டங்களை உண்டாக்கினர். அதை தடுத்து செல்லுபவர்கள்போல்; இதுதான் தாண்டவம்! இப்பொழுது காண்ப! என சொல்லினர். மஹா ஜ்வாலையுடைய அக்னியை எடுத்து, அவைகளை. ஜெபித்து, அவ்விதமே மந்த்ரரூபம் ஆருக! என செய்ய ஆரம்பித்தனர்.

த்ரவ்யக்கூட்டங்கள் ஸர்வமும் விதிக்கு உசிதமானது என தேவ தாருவனத்தில் நாராயணன், ஈசன், இருவர்களும் முநிகளால் ஸேவிக்கும் இடத்தில், சுத்தமானசிவனை உத்தேசித்து, ஸர்வ தோஷங்களையும் நிவர்த்திக்க, முநிகள் விசாரமின்றி, ஆபிசார ப்ரயோகம் செய்தனர். அவ்வித மனமுடைய அவர்களது மந்த்ரங்களில் கோபாக்னி ஜ்வலிக்க, அக்கர்மாவாகிற காட்டில் பெரியபயப்படும் தன்மையை அவர்களிடம் செலுத்துகையில்; அதி வேகமாக குடைபோல் ஜ்வாலை உயரமாகி கண்களுக்கு பயப்படும்போல்; ஸ்ருஷ்டித்தது அல்ல. அக்னியினின்று உடனே ஓர் புலி உண்டாயிற்று. அது எல்லா திக்கிலும் பயங்கர சப்தத்துடன் பாதிக்கிறதாகி, வேகமாய் ஸர்வ ஹரரான ஈசனிடம் ஏவப்பட்டது.

பிறகு அவ்வீசனும், ஸந்தோஷத்தினால் புன்சிரிப்புடன், அப்பயங்கர புலியை கையினால் கொலைசெய்து, அதன் தோலை பட்டு வஸ்திரம்போல் உசிதமாக தாங்கினார். பின்பு அக்னியினின்று பயங்கர பூதங்களால் ஸேவிக்கும் தலையில் அக்னிபோல் பயங்கரமாக ப்ரகாசமடைந்த ஸர்ப்பங்கள், ரிஷிகளால் விடப்பட்டது. அது வேகமாக ஈசன் எதிரில் வந்தது. பயங்கர வேகத்துடன் வரும் ஸர்ப்பங்களை, ஈசன் மங்களமாக தன் கைகளில் வளையல்களாக ப்ரகாசமடையும்படி அணிந்தார். அவர்களது முகம் சத்ருவைப்போல் பக்தி உள்ள முநிகளுக்கும், தன் உருவத்தை கருணையால் நேரில் கொடுத்தார். அவரது மஞ்சள்ஜடை தாண்டவ கார்யம்போல் இருந்தது. ஸ்த்ரீகளும் கண்டு தாண்டவம் செய்ய ஆரம்பித்தனர். மற்ற அழகுடைய கை அடைந்த முநிகளாலும் நன்கு பார்க்கப்பட்டது.

நெற்றியில் காலாக்னியும், கழுத்தில் காலனும், கொண்ட ஈசன் ஜ்வலிக்கும் அக்னிகளுடன், அவர்கள் முன்பு சாப்பிடாமல் அது பெருமையுடன் பிண்டபூதமடைந்து, பூத உருவமே என காணப்பட்டது. நெருப்புபோன்று கண்ணினின்று ஜ்வாலைகள் கக்க, சிரவின் இடப்பாகத்தில் பெரிய நீண்ட பற்களடைந்ததுபோல்; அவ்விதமே கை பாகமும் ப்ரகாசித்தது.

பாம்பு கூட்டங்கள் ஸேவிக்க, பலமில்லா மஹாவேகத்துடன் ஈசனது ஸமீபமடைந்தது. அதை ஸந்தோஷத்துடன் ஈசன் நடனத்திற்கு எதிர் முகமாகவே நினைத்து, தாமரைபோன்ற காலில் போட்டு, அவ்விடம் பீடமாக அடக்கிவைத்தார். தன்னால் ப்ரயோகிக்கப்பட்டது

எல்லாம் ஜெயிக்கமுடியாமல் கஷ்டமடைந்து, வேகத்துடன் கோபத்தினல் அவர்மேல் அக்னியை முநிகள் வாரி இறைத்தனர் அவ்வீசனும், ஜ்வாலை சக்ரத்துடன் சேர்ந்து வேகமாய்வரும் அதை, மங்களமாக கைப்ரதேசத்தில் விளையாட்டால் எடுத்து, அணிந்தார். மறுபடியும் அம்முநிகள் அதிக கோபமடைந்து, இது என்ன! என்ன! என நினைத்து அவரிடம் மந்த்ரங்களை ப்ரயோகித்தனர். முநிகளால் விட்ட மந்த்ரங்களை ஈசன் கையில்தாங்கி, கோடிப்ரகாசமுடைய காந்திக்கு ஸமானமாக அவைகளை கால்களில் அணிந்தார். பிறகு அவ்விடம் ஈசன் சலிக்கும் ஜடாபாரத்துடன், நேர்முக சித்தமடைந்து, மெதுவாக தாண்டவம் செய்ய ஆரம்பித்தார்.

பிறகு அம்முநிகள் மோஹமடைந்து, பாணம் இல்லாத வில்போல்; க்ஷணிககாலம் சிந்தையுடன் இருந்தனர். பிறகு அம்முநிகள் அவரது ஆனந்ததாண்டவ வேகத்தால் பூமியில் க்ஷணிககாலம் பெரிய மோஹமடைந்து, விழுந்தனர். அவ்விடம் தானும் அவர் பக்கத்தில் இருந்து தாண்டவம் கண்டதில் இதுவரை பாராத பெரியதோர் பயமடைந்து ஸந்தேஹ மடைந்தேன்.

பாம்பு கங்கணம் ப்ரகாசிக்கும் கையுடன் என் பீதியை வேகமாக நிவர்த்திசெய்து, அவ்விடம் பார்வதியை ஈசன் நினைத்தார். உடனே அவளும் அங்கேவந்து சேர்ந்தாள். பின்பு அவர் ஸமீபமடைந்த பார்வதிக்கு, அப்பொழுது ப்ரீதியுடன் தேவர்கள் புஷ்பவர்ஷத்தை இறைத்தனர். நான் அவ்வற்புதத்தை மங்களகரமாய் பார்த்து, மோஹினி உருவம் விட்டு, அவர் ஆஜ்ஞைக்கு ஸ்வபாவமாய் அழகிய விஷ்ணு சரீரமடைந்தேன். பிறகு பார்வதி; ஈசன் பக்கத்தில் எப்பொழுதும்போல்; அவருக்கு அலங்காரமானள். தாமரைபோன்ற முகமுடைய அத்தேவி நல்லது! நல்லது! என என்னைப்பார்த்து ஸந்தோஷத்தினல் வெகுகாலம் ஆனந்தித்தாள். பிறகு இந்த ஈசன் திக்குகளில் ப்ரகாசிக்க, பொன்னிற ஜடாபாரமடைந்து அவர் அசைய தாமரைபோன்ற கையில் ப்ரகாசிக்கும் அக்னி உருவம், கருணைவடிவம் போல் கண்களுக்கு ப்ரகாசமடைந்தது. அது எல்லாதிக்குகளிலும் நக்ஷத்ரம்போல் அங்கு ப்ரகாசித்தது. டமருகப்ரகாசத்துடன், காலாந்தகர்மாதிரி தடுத்தவரிசைகள் எட்டுதிக்கும் அடைந்து, ஸர்வ உலகங்களில் அது ஆதரவுடன் நமஸ்கரிக்கிறதாகி தாமரைபோன்ற கால்களில் செம்மஞ்சிகுழம்பு சேர்ந்த பாதசிலம்புகள் காண, பக்கத்திலுள்ள

பார்வதிக்கு பெரியதோர் பயம் உண்டுபண்ணுகிறதுபோல்; கண்டது, பாம்பு ஆபரணங்கள் ப்ரகாசிக்க, சுற்றும் உயர்தர வேகமாக ப்ரகாசிக்கும் புலித்தோல் உடுத்திய ஈசன், அப்பொழுது தாண்டவம் செய்ய உத்தேசித்தார். வளைந்த பாதத்துடன் சலிக்கும் அழகிய பாதசிலம்பில் கங்கணங்களை கட்டிக்கொண்ட அவரை என்னால் நன்கு பார்க்கப்பட்டது.

பக்கத்தில் பயத்தினால் நடுங்கும் உமாதேவியை க்ருபையுடன் அடிக்கடி பார்த்து, ஆனந்த தாண்டவமும் செய்து, உனக்கு இதோ ஆனந்த தாண்டவரஸம்! என பார்வதிக்கு சொல்லி, விருஷபத்திற்கும் ஸந்தோஷம் உண்டாக்குக! என கட்டளையும் செய்தார். பிறகு மோஹமடைந்த ரிஷிகள் எல்லோரும் சிவ! சங்கர! என விநயத்துடன் சொல்பவர்களாகி, நமஸ்காரம் செய்தனர். அவ்வீசனும்; அம் முனிவர்களுக்கு தாண்டவ தர்சனத்தைகாண ஜ்ஞானத்ருஷ்டியையும், கொடுத்தார். அப்பொழுது ஈசன் கருணையுடன் நர்த்தனம் செய்பவராய், அவர்கள் கண்களில் ப்ரகாசித்தார். புன்சிரிப்பு விலாஸங்களுடன் சுத்த முகமடைந்து நர்த்தனமும் செய்தார்.

அவர்களது அபராதங்களை துலைப்பவர்போல், அப்பூதத்தை கீழே தள்ளி, அதன்மீது ஏறி நின்றார். அவர்களது ஜன்மாந்த்ர பாபங்களை நாசம் செய்யவே, ஒரு காலை வளைத்து ஆனந்ததாண்டவமும் செய்தார். அத்தபஸ்விகளது கண்களில் அவ்வீசன் க்ருபை உதயமாகி, பரமானந்த தாண்டவம் அங்கு ரிஷிகளால் பார்க்கப்பட்டது. ஆச்சர்யத்தினால் ஸந்தோஷமடைந்து ஈசன் நர்த்தனத்தை பார்த்து, கையிலிருந்த தண்டம், கமண்டலு இவைகளை சீக்ரமாக மேலேதூக்கி கை கூப்பிய வண்ணம் பொன்னிறம் போன்று கலங்கும் ஜடாபாரபாகமுடைய சிவனது ஆனந்தரஸத்தில்சேர்ந்து, ஸந்தோஷசித்தத்துடன் கூடவே. அவர்களும் நர்த்தனம் செய்தனர். கோடிக்காணக்கான கிரீடங்கள் அணிந்த தேவர்கள், அவ்வீசனை புஷ்பாஞ்சலியுடன் காந்தி சுற்றி அடைந்து, ஸ்தோத்தரித்தனர். நாரதர் முதலிய மேதாவிகள் வீணையுடைய கைகளால் கானம் செய்யாமல், ஒன்றும் அறியாது மௌனமாய் இருந்தனர்.

அவ்விடம் அவர் முன்னிலையில், இருந்து குறைவில்லா நர்த்தனத்தை ஸர்வ பூதங்களும் செய்தனர். அப்பொழுது கொஞ்சமும்

அவர்கள் வேகப்படவில்லை. ஸர்வ கணங்களும், வேகமாக இந்த்ரியங்களோடு மதாந்தமாய் விழுந்தும், எழுந்தும், நர்த்தனம் செய்தன.

பிறகு ஈசன் முநிகளை ப்ரீதியடைந்த சித்தத்துடன் சொன்னார். ப்ரம்ஹா, விஷ்ணு, இந்த்ரன், தேவர்களுடன் கூடிய முநிகளே! குறைவற்ற இதற்கு முன்கேட்ட வார்த்தையை என்னிடம் கேளுங்கள்!

பரமானந்த கடலில் பூர்ண சந்த்ரோதயம்போல் எனக்கு இது உண்டானது. இவ்வானந்த தாண்டவத்தை இது சிவலிங்கம், என்ற புத்தியால் நீங்கள் எண்ணி, இவ்வனத்திலேயே நர்த்தனம் செய்யும் இடத்தில் சிவலிங்க ப்ரதிஷ்டை செய்து, நீங்கள் இந்த்ரியமடக்கி, பூஜை செய்யுங்கள்! போக மோக்ஷங்களுக்கு ஒரே ஹேதுவுள்ள, சுத்த லிங்கபூஜையால் மற்றவர் அடையமுடியாத பரமபத உருவமடையுங்கள்! என இவ்விதம் சொல்லி, ஈசன் அம்ருததாரை ஒழுகும் மார்க்கம் தெரிவித்து, அவ்விடமிருந்து பார்வதியுடன் வேகமாக மறைந்தார்.

பிறகு தேவர்கள் அப்பாவனை அடைந்தவர்களாகி, அவர்சென்ற திக்கையே ஸந்தோஷமாக நமஸ்கரித்து, ஈசனை மறுபடி பார்க்க ஸந்தோஷமடைந்து, வந்த வழியே திரும்பினர்.

சேஷனே! மிச்சமுள்ளவர்களும், அதே பாவனை சித்தத்தில் அடைந்ததுபோல்; ஆனார்கள். யோகநித்ரைக்கு திரும்பாத எனக்கும் அதையே நினைக்க இப்பொழுதும் காண்கிறது.

பதின்மூன்றும் அத்தியாயம் முற்றிற்று.

---

## பதினான்காம் அத்தியாயம்.

அன்புடன்கேட்ட சேஷனுக்கு விஷ்ணு ஈசனது தாண்டவ வைபவம் சொன்னார். ஈசனது நர்த்தன விசேஷத்தை கேட்டவுடனேயே சேஷன், கண்களில் ஆனந்தகண்ணீர் பெருக, அஞ்சலி செய்த சிரமுடையவனாகி, அத்தாண்டவம் பார்த்தவன்போல் ப்ரகாசிக்க, சிரஸால் ப்ரீதியடைந்து, அப்பொழுது பெரிய ஸந்தோஷமடைந்தான். அப்பாவனை அடைந்த சேஷனை விஷ்ணு பார்த்து; தாமரைபோன்ற ஹ்ருதயத்தில் ஸந்தோஷமாய் நினைத்தார். அந்த சேஷன் என்னால்

சொல்லிய ஈசனது தாண்டவ வர்ணனையை கேட்டு ஆனந்தஸாகரத்தில் மூழ்கினன்.

அவ்வீசனது கார்யத்தையும், ஸதா தாமரைபோன்ற பாதஸேவையையும், செய்ய சிவானந்த மயமாகிய சேஷனும், ஆனன் என்பதினல்; சிவனுக்கு நான் செய்துவைக்கவேண்டியதே. எனக்கும் வேறு கார்யம் என்ன? இப்பொழுது? இம்மஹாத்மாவால்தான் இது ஏற்பட்டது. என மனதுடன் நிச்சயித்து சேஷன் மறுபடியும்சொன்ஞர்.

சேஷனே! இன்றுமுதல் பூபாரம் தாங்கும் நீ படுக்கை உருவம் விட்டு, க்ருதார்த்தமடைய போகிருய்! யோகநித்ரையை எப்பொழுதும்போல் செய்யவேண்டாம். பதிலாக உனது புத்ரனை நீ ஏற்பாடுசெய்! உண்மையாக ஈசன் நர்த்தனம் பார்க்கவே நீ யோக்யம். ஆகவே வேகமாக இங்கிருந்து சென்று, அதை அடைய பெரிய தபஸ்செய்.

என இவ்விதம் சொல்லும் விஷ்ணுவின் வார்த்தையை ஆதரவுடன் சேஷன் கேட்டு, வணக்கமாக பதில் சொன்ஞன்.

சேஷன்:— தேவரீர்! நான் எவ்விதமும் ஈசனது ஆனந்த தாண்டவம் பார்க்க இச்சையுடையவன். ஆனல் உம்மைவிட அதிகம் விரும்பவில்லை. அவ்விஷயத்தில் நான் நிரம்பவும் துக்கமடைகிறேன்.

என சேஷனல் இவ்விதம் சொல்லியதும்; விஷ்ணு ஆதரவுடன் இவ்விரதத்தால் சீக்ரம் அடைய நீ கைலாஸபர்வத பக்கம் செல் என உரைத்தார். உன்னல் ஸர்வ இஷ்டங்களை கொடுக்கும் சிவன் பூஜிக்கப்படுபரேயாகில்; உன் இச்சைக்கு போதுமான பாவனை கொடுக்கப் போகிருர். அதில் ஸந்தேகமில்லை என்றதும்;

விஷ்ணுவினிடமிருந்து சேஷன் வரமடைந்து, என்கார்யம் விக்னமில்லாமல் ஆகுக! என அடிக்கடி சொல்லி, அவரை நமஸ்கரித்தான். பிறகு ப்ரீதியடைந்த மனதுடன் சேஷன் விஷ்ணுவிடம் விடைபெற்று, கைலாஸபர்வத தாழ்வரைக்கு கைவல்ய காரணத்திற்கு அடைந்தான்.

அவ்விடம் நித்யம் நான்கு புறமும் அக்னி சூழ ப்ரகாசிக்கும் படங்களின் ரத்ன ப்ரபாவத்தால் கண் உருவம் அக்னிபோல் ப்ரகாசிக்க,

கண்டு நடுங்கும் ஸூர்யமண்டலம்போல் அடைந்து சிவனது தாண்டவத்தைக்காண தபஸ் செய்ய ஆரம்பித்தான். ஜீவனைவைத்து காற்று ஆஹாரம், பின்பு அதுகூட இல்லாமலும், ஆத்மவாயுவையும் விட்டு ஒரு பிடிப்பும் இன்றி, தபஸ்செய்ய ஆரம்பித்தான். ப்ரம்ஹமடைந்த சித்தத்தால் அநேகநாள் சேஷனுக்கு அறியாமல் சென்றது. அதை அவன் அறியவில்லை. நர்த்தன தரிசனம் காண இச்சையுடன் உள்ள எல்லோரும், பார்க்கும்படி உடனே திவ்யதன்மையை அடைவிப்பது போல் இருந்தது அதி உக்ரதாபம் உண்டாக்கும் ஸூர்யனிடம் வைத்த கண்ணுடையவனுகி சரீரத்தில் சந்த்ர கிரணங்களால் கொஞ்சம் மெலிந்த தன்மையும் அடைந்தது. இவ்விதம் தபஸ் செய்கையில்; சேஷனுக்கு ஸதா உள்சித்தத்தில் ஈசனிடம் பக்தி விருத்திஅடைந்தது. தேவதாருவனத்தில் தபஸ் செய்யும் முனிகளது மனதை நன்கு அறியவே, முன்போல் அடைந்ததாயிற்று. இவ்விதமிருக்கையில்; சேஷன் மனதை அறிய ஆசை உடைய ப்ரம்ஹன்; வேகமாக ஹம்ஸ வாகனமேறி அவன் எதிரில் தோன்றினுர். அப்பொழுது சேஷனும் நித்யரான ப்ரம்ஹனை நேரில்கண்டு, அவ்விடம் அவருக்கு அர்க்யம் முதலிய பூஜைகளைச்செய்தான். ஆதரவுடன் சேஷனுல் கொடுத்த பூஜையை ப்ரம்ஹன் அடைந்து, பூமியில் இருந்து அவனைப்பார்த்துச் சொன்னுர். சேஷனே! கடுமையான தபவினுல் போதும்! எந்த வஸ்துவினிடத்தில் உனக்கு இச்சையோ? அதற்கு தபஸ் எதற்கு? நான் இப்பொழுது உனக்குக் கிடைக்கமுடியாத ஸமஸ்த வரங்களையும், கொடுக்கிறேன். போகத்திலோ, வித்யையிலோ, முக்தியிலோ என்ன சித்தி உள்ளது?

என்று ப்ரம்ஹாவினுல் இவ்விதம் சொல்லி இவைகளை சேஷன் கேட்டு, ஈசனது மன முடையவனுகி இனிமையான பதில் சொன்னுன்.

ப்ரம்ஹனே! நீங்கள் சொல்லுகிற இவ்வார்த்தைகளில் எனக்கு ஆசையில்லை. சுத்தமான ஈசனைப் பார்ப்பதற்கே பெரியதோர் தபஸ் செய்கிறேன். ஈசனே எனக்கு கதி வேறு ஒருவருமில்லை. எனக்கு அவரே கிடைக்கமுடியாத இஷ்டவஸ்துக்களை கொடுக்கப்போகிருர்.

என்ற அவ்வார்த்தையை ப்ரம்ஹன் கேட்டு ஆச்சர்யமடைந்து, மனதோடு அவனுக்கு கெட்டியாக அறிய அப்பாவத்தை மறுபடியும் சொன்னுர். அவருடைய வருகையால் எதை அடைய பெரிய தபஸ் செய்யப்படுகிறதோ? அதை எவ்விதமாகிலும் உனக்குக் கொடுக்கிறேன்.

ஆகையால் நீ எனக்கு உண்மையைச் சொல். எதை அடைய ஆதரவுடன் இச்சிக்கிருயோ? அதையே நான் கொடுக்கிறேன்.

சேஷன்:— இவ்விடம் அதிகமாகச் சொல்லி என்? என் வார்த்தையைக் கேளும்! உம்மாலும், மற்றவர்களாலும், எனக்குக்காரியமில்லை. ஈசன் தவிர வேறொருவரும் எனக்குத் தேவையில்லை.

ஸூதர்:— மற்றவர் ஆதரவின்றி மாயையின் விடுதலைக்காக மறுபடியும் ப்ரம்ஹன், பதில் சொன்னர்.

சேஷனே! என் வார்த்தைகளில் ஆசை உண்மை இல்லாமல் இருக்குமானல், எதை உத்தேசித்து உன்னல் நித்யம் பெரிய தபஸ் செய்யப்படுகிறது?

சேஷன்:— ஈசனது சித்தமுடையவனுகி, மனதில் மற்றவை தள்ளி யோகம், வித்தை, சித்தி, முக்தி இவற்ருல் என்ன ப்ரயோஜனம்? தேவதாருவனத்தில் உள்ள முனிகளுக்கு எது காண்பிக்கப்பட்டதோ? அத்தாண்டவத்தைப் பார்ப்பதற்கே எனக்கு ஆசை உண்டாகி உள்ளது.

ப்ரம்ஹன்:— கடின தபஸ்செய்து சோபிக்கும் சரீரத்தினுல் உன் ஆசை விடுபடவில்லை. அநேகமாக அடைய முடியாததை இச்சை வைப்பதுபோல் உள்ளது. குறைவில்லா ஈசனிடம் திவ்ய யோகிகளால் யாசிக்கப்பட்டது எதுவோ? அதையே அவர்களுக்கு முன்பு நர்த்தன உருவமாக காண்பிக்கப்பட்டது.

சேஷன்:— எனக்கு ஈசன் தானுகவே அந்த ஆனந்தத் தாண்டவத்தைக் காண்பிக்கப்போகிருர்! யாராலும் யாசிக்கப்படாததை நான் எவ்விதமும் அடையப்போகிறேன்.

ப்ரம்ஹன்:— சேஷனே! வெகுகாலத்திற்குமுன்பு எது கஷ்டமாக உனக்கு பெரிய நர்த்தனம் என காண இச்சையோ? அது தடுக்கப்படுவதில்லை.

சேஷன்:— எனக்கு பரம ஸந்தாப காலத்திலும், பெரிய தபஸ் செய்கையிலும், சரீரமே இல்லாமல் போனுலும், வேறு தேவை இல்லை.

ப்ரம்ஹன்:— சேஷனே! நீ இவ்விதம் பரமேச்வரனது நர்த்தனத்தைத் தனிமையில் பார்க்கிறதா யிருக்குமேயானுல்; ஆத்மாவின் ஸந்தேஹ காரண தசையில் என்னசெய்யவேண்டும்?

சேஷன் :— இந்த ஜன்மாவில் ஈசனது தாண்டவம் பாராமல் போனாலும், அடுத்த ஜன்மாவிலாவது அதைக் கட்டாயம் பார்த்தே தீருவேன். அதில் ஸந்தேகமில்லை.

என்ற சேஷனது அந்த ஸ்திர பாவனையைப் பார்த்து ஹம்ஸ வாஹனம் விட்டு, உடனே வ்ருஷபாரூடராகி இடது பக்கம் பார்வதி யடைந்த அர்த்தநாரீச்வர உருவமுமாகி காணப்பட்டார்.

பதினான்காம் அத்தியாயம் முற்றிற்று.

---

## பதினைந்தாம் அத்தியாயம்.

பிறகு சேஷன் நடுங்கிய சரீரமுடையவனாகி, சங்கரரைப் பார்த்து அஞ்சலி செய்து ஸ்தோத்திரம் செய்தான். யானைபோன்ற கையை உடையவரே! மூன்று கண் உடையவரே! இளம் சந்திரனை சிரவில் உடையவரே! ஸ்ரீமானான தேவரே! உமக்கு நமஸ்காரம். அஜ்ஞானத்தினால் நான் செய்த அபராதமெல்லாம் பொருத்துக்கொள்ளும்! கால கண்டரே! சிவாநாதனே! நடனத்திற்குத் தலைவரே! உமக்கு நமஸ்காரம், என ஆனந்தத்தில் மூழ்கிய சேஷன், அப்பொழுது சங்கரனிடம் கஷ்ட மடைந்து தண்டாகாரமாக நமஸ்கரித்தான்.

பிறகு ஈசனும், அவனது சமீபத்தில் வ்ருஷபாரூடராகச் சென்று, கையினால் எழுந்திருக்கச் செய்து, சீக்ரமாக அடிக்கடி ஆலிங்கனம் செய்தார். அவ்விடம் ஸர்வ இஷ்டங்களையும், பரம க்ருபையையும், கொடுத்து, அவன் சிரவில் கையால் தொட்டு, அனுக்ரஹித்தார் சேஷனே! உனக்கு இக்கடுமையான தபவில்லாமல் எனது அற்புத தாண்டவம் காண முடியாது. உனது தபவில் வசமாகிய நான், இனி எப்பொழுதும் காண்பிக்கப்போகிறேன். அது சம்பந்தமான கஷ்டத்தை விட்டுவிட்டு நீ இரு! போதும்! எனது ஸ்வரூப உண்மை உலகங்களிலும், அதி ரகஸ்யமாக, தானே ப்ரகாசித்து, அறியத்தக்கதாகும். என் ஸம்பந்தத்தை உனக்குச் சொல்லுகிறேன். கேள்! இம் மாயை ப்ரபஞ்சத்தில் உண்டாகி, கர்மாவில் இருப்பவனாகி, மரணம், ஸுகம், துக்கம், பயம், த்வேஷம் இவை ஒன்றினாலும் என்னை அறிய முடியாது!

எவ்விதம் மண் குடம்; மண்ணினுல் செய்யப்பட்டே உண்டாகிறதோ? அவ்விதமே ஸ்ருஷ்டி ஸம்பந்த கார்யங்களும், மாயையினுலேயே செய்யப்பட்டுள்ளது என உனக்குக் காணும்! எனது உருவங்கள்; இரண்டு ரூபமாய் சொல்லப்படுகிறது. அது ஸகலம், நிஷ்களம், என்று பெயர் பெறும்! ஸகலம் என்பது இந்திரியங்களை அடக்குபவர்களால் கண்ணுல் அடையவும், த்யானம் செய்யவும், உள்ளது. நிஷ்களம் என்பது; உருவம் அற்றும், பார்வை அற்றும், குறைவில்லா த்யானமின்றி அதை பார்க்கவே முடியாது மனுஷ்யர்களால் அதை அடைய மிகக்கடினமாகும். அப்படி இருந்தும்; எந்த புத்தியால் என் நினைவு அடைந்து. இரண்டற்று, அகங்காரமற்று, பாபமற்று உள்ளவர்களே என்னைப்பார்க்க ஹேது. மனுஷ்யர்களுக்கு எனது க்ருபா நோக்க விசேஷத்தால் மலங்கள் சுத்தம் செய்யப்பட்டு, குரு உபதேசத்தில் அடைந்த பொருமை உடையவர்களே கட்டாயம பாசக் கட்டு அறுத்து, மூர்த்தியுள்ளதாக நான் இருக்கிறேன் என அறிகின்றனர்.

ஒன்று, மற்றொன்று, உருவம் இவை சின்மயமாய் நித்யமடைந்து; களங்கமற்று, காண்பது. இவ்விரண்டும், அதன் ஜ்ஞான உருவமுள்ள எனது சரீரம், ப்ராணமய ஆனந்தம் என அதை நான் சொல்லுகிறேன். இவ்விதம் எனக்குப் பெயர். ப்ரஜ்ஞானம், பராத்பரம், அதிகுஹ்யம், என பலவகை சொல்லப்படுகிறது. சேஷனே! உனக்கு மற்றொன்றும், சொல்லுகிறேன். என் விதானமுள்ள அந்த பஞ்சக்ருத்ய கார்யங்கள் நித்யமாய், இதுதான் என திவ்ய தாண்டவத்தையே சொல்லுகிறது. எல்லா வேதங்களும், உண்மையான ஆனந்த நர்த்தனத்தையே, காரணமடைந்து என்னைப்பற்றிச் சொல்லுகின்றன. அதன் ஹேதுவுக்கு திக்கு, காலம், ஸ்தானம், அறியவே முடியாது.

யோகிகள் ஸேவிக்கும் அத்தேவதாருவனத்தில் முன்பு ஸர்வ தேவர், விஷ்ணு, முதலானவர் எதிரில் ஆனந்த ஸமுத்ர அலையில் பூர்ண சந்த்ரோதயம் ஆகும் பொழுது, தானே அறியக்கூடிய ரஸமுள்ள நர்த்தனம் நான் செய்கையில்; அப்பொழுது அத்தபோவனமும், அப் பாரம் தாங்கமுடியாது வெகுகாலம் பூமி முழுவதும் சலிக்கிறதாய் நடுங்கியது.

க்ஷணிககாலம் எங்குபார்த்தாலும் பூமி கஷ்டமடைந்ததைப்பார்த்து நான் மறுபடியும் ஒழுங்காக நர்த்தனத்தைக் குறைத்தேன். ஆகையால் உனக்கும் இப்பொழுது அதை முக்யமாக காண்பித்து, நான் செய்ய

இந்த ஸ்தலம் மிக்க பொருத்தமில்லை. என வேகமாக அதைப்பொறுக்க, பெரியதோர் திவ்ய ஸபை பூமியில் இருக்கிறது. என எண்ணி அங்கு ஸர்வ ஹிதத்திற்கே நான் இருக்கிறேன் என்றார்.

ஸூதர்:— சிவனது வார்த்தையை சேஷன் ஆதரவுடன் கேட்டு, மறுபடியும் வணங்கி, நமஸ்கரித்து, கொஞ்சம் சொன்னான். பூமியில் அப்பேர்ப்பட்ட ஸபை பாக்யத்திற்காக இருக்குமானால் ப்ரபஞ்சத்தில் ஆகமம், வேதம் இவை எல்லைக்கு எல்லாம் முடிவு என எது நினைக்க முடியாதோ? அச்சபையில் எனக்கு ஸாக்ஷாத்தாக உண்டாக்க வேணும்! எனக்கு நர்த்தனத்தைத் தவிர வேறுகார்யம் என்ன இருக்கிறது? என இவ்விதம் சேஷனால் சொல்லியதும்; பிறகு அவனிடம் தயை அடைந்து, ஈசன் பதில் சொன்னார்.

ஈசன்:— அங்கு பூமியும், சரீரமும் ஸமமாய் உள்ளது. அதற்கு மஹா நாடியான இடா நாடி, எப்பொழுதும் இலங்கையை அடைகிறது. மற்றொன்று பிங்களைநாடி, ஹிமோத் பர்வதம்வரை அடைந்துள்ளது. அதன் மத்தியில் உள்ள ஸூஷும்னை என்று எதை சொல்லுகிறதோ? அது தில்லைவன மத்யத்தை எப்பொழும் அடைகிறது. அந்த பூமிப்பிரதேசம் புருஷாக்ருதிக்கு அதி விஸ்தார ப்ரகாசமுடையது. ஸ்ரீபர்வதம் சிரோபாகமாகவும், கேதாரக்ஷேத்ரம் புருவப்ரதேசமாகவும், கைலாஸ பர்வதம் சிரோபாக ஸ்தானமாகவும், அதற்கு சொல்லப்படுகிறது.

புருவமத்தி காசிக்ஷேத்ரம், மார்புப்ரதேசம் குருக்ஷேத்ரம், நாபி ப்ரதேசம் ப்ரயாகை. ஹ்ருதய மத்யம் சிதம்பரம். ஆதார சக்ரம் கமலாலயம். இந்த ஸ்தானங்களைவிட்டு; இதர ஸ்தானங்களை எவன் அடைகிறானோ? அவன் கைக்குஎட்டிய நல்ல மஹா ரத்னத்தை விட்டு, கெட்ட மார்க்கத்தில் பணத்திற்கு அலைபவன்போல்; ஆகிறான். அதன் மத்தியில், பெரிய திவ்யமாயும், சுத்தமாயும் ப்ரம்ஹ ஸமானமுமுள்ள ஸ்ரீ மூலஸ்தானம் என்ற பெயரிய பெரிய லிங்கம் ஒன்று இருக்கிறது. அதன் தெற்கு பாகத்தில், பக்கத்தில் ப்ரபாவமுடைய ஸர்வ மங்கள ஆச்சர்யமுள்ள, ஒரு அம்பரம் என்ற ஸபை உள்ளது. நான் அவ்விடத்தில் எப்பொழுதும் குறைவில்லா ஆனந்தத் தாண்டவம் செய்கிறேன்.

ஆகையால்; அது எல்லோராலும், நமஸ்கரிக்கப்பட்டு, சிதம்பரம் என அதினால் க்யாதிஅடைந்தது. அச்சபையை புண்யசாலிகளான தபஸ்விகள் ஆச்ரயிக்கிறார்கள், ஜ்ஞானக்கண் அடைந்த மஹாத்மாக்கள்

வேதங்களினுல் ஸ்தோத்தரிக்கும் அப் ப்ரம்ஹத்தை நித்யம் பார்க்கிருர்கள். ஸம்ஸாரபந்தங்களில் முன்செய்த எப்பாவம், மனிதர்களுக்கு உள்ளதோ? அது சிதம்பரம் என்று நினைத்தமாத்திரத்திலேயே துலேகிறது.

புண்யமற்ற எவர்கள் சிதம்பரத்தைப் பார்க்கிறதில்லேயோ? அவர்கள் முக்தி அடையாமல் எப்பொழுதும் பாசத்தால் கட்டுண்டு அடிக்கடி ஜன்மா அடைகின்றனர். அவ்விதம் பார்ப்பவர்களது மஹாத்மியங்களே எந்நாளும் வர்ணிக்கமுடியாது. அதை அடைய உபாயத்தை ஒரு மனதோடு இவ்விடத்தில்கேள்! சிரஸில் விஷம் ஜ்வலிக்க, அக்னி போன்ற கண் அடைந்த, ஆயிரம் சிரமுடைய, உன்னே உலகம் பார்க்குமாஞல்; பயத்திற்குக் காரணமாகும்.

முன்பு அத்ரி என்ற முனியின், பத்னி அனஸூயையும், உன்னே அடையவேண்டி விஷ்ணுவை வெகுகாலம் பூஜித்தாள். அவர்களது தபஸினுல் விஷ்ணுவும், உன்னே அவருக்குக்கொடுத்தார். அப்பொழுது ஜன்மா அடைந்து, குழந்தையாக ஐந்து தலேயுடன் ப்ரகாசித்தாய்! அத்ரிபத்னி அனஸூயை, ஸ்நானம் செய்கையில்; நீர்த்த உருவமுடைய கையில் உன்னேப்பார்த்தாள். அந்த அனஸூயையும் புத்ரனுக அடைய ஆசை இருந்தும், கையில் இருந்த குழந்தையான உன்னே பார்த்ததும், பயந்து வேகமாக பூமியில் விட்டாள்.

பூமியில் நழுவி விழுந்தமையால், பதஞ்சலி என்றபெயர் உனக்கு உண்டாயிற்று. இப்பொழுதும் அவ்வித ஜ்ஞானமடைய நீ இச்சிக்கிருய்! பெயரிஞல் பதஞ்சலி என்ற க்யாதி அடைந்து, என்னே எப்பொழுதும் ஹ்ருதயத்தில் த்யானம் செய்கிறவனுகி, நல்மார்க்க முடைய உலகவழியில் சென்ருல், அதன் நடுவில் பெரிய பர்வதம் ஒன்று உள்ளது. அதன் வளேவில், தெற்குப்பாகத்தில் உயர்ந்த பொந்து ஒன்று இருக்கிறது. அதன் நுனியில் பெரியதாக விளங்கும் "தில்லே வனம்" என்று காணப்படும். அப்பொந்தின் வழியே வடபாகத்தில் ஆலமர அடிவேர் அடைந்துள்ள ஸ்ரீ மூலஸ்தானம் என்று அழகிய ஓர் லிங்கம் இருக்கிறது. அவ்விடத்தில் பக்தியிஞல் பூஜைசெய்து, என் தாண்டவத்தை த்யானம் செய்யும், வ்யாக்ரபாதர் என்ற க்யாதி உடையவர், தபஸ் செய்கிருர்.

அவ்விடம் முனிவருடன் நீ இரு! அவ்விடம் சுபமான புஷ்ய நக்ஷத்ர குருவாரத்தில் ஸூர்யன் வருகையில்; புஷ்யரதத்தில் ஸூர்

யன் நடுப்பகல் வருகையில், உனக்கும், அவனுக்கும், உத்தமோத்தம தாண்டவம் காண்பிக்கப்போகிறேன், என்றதும்;

அவ்வீசன் சொல்லிய வார்த்தையை சேஷனும் கேட்டு, பரமானந்த மோஹமடைந்து, அங்கு வெகுகாலம் நமஸ்கரித்தபடியே இருந்தான். உடனே கணங்களால் ஸ்தோத்தரிக்கும் ஈசன், பார்வதியுடன் அவ்விடமிருந்து மறைந்தார்.

பிறகு சேஷன்; அதை அடைய மனமுடையவனுகி, ஈசன் மறைந்த திக்கை நமஸ்கரித்து, எங்கும் செல்லும் குணமுடையவனுகி, முன் உள்ள பெரிய உருவமவிட்டு, ஐந்து சிரமுடையவனுகி, அவ்விடம் த்யான பரனுனன்.

அத்தியான விசேஷத்தால் பெரிய ஸர்ப்ப உருவம் விட்ட ஈசனுல் எது அனுக்ரஹித்ததோ? அந்த ஐந்துதலே உருவமே அடைந்து, சேஷன் சரீரத்தோடு ப்ரகாசிக்கிறவனுகி, தன் உலக மடைந்தான். தபவினுல் ஈசனது ஸாந்நித்யமே காரணமடைந்த, இவனது தபஸ் பரிபாகம், எனகேட்ட எல்லா ஸர்ப்பங்களும் ஸந்தோஷமடைந்து, எதிர்கொண்டு அவனே அழைத்தன. அவ்வீசனுல் கொடுத்த உருவம் சேஷன் தரித்து, ஸமஸ்த பாம்புக்கூட்டங்களுடன் ஸந்தோஷமடைந்தான். ஈசனுல் சொல்லியனுப்பிய சேஷன், உடனே அப்பர்வதத்தை வணக்கமாக பூமியில் நமஸ்கரித்தான்.

கார்க்கோடகம், முதலிய ஸர்ப்பங்களும் ஸந்தோஷத்துடன் அசைந்து வணக்கம் செய்து, அவனே அடைந்து ஸ்தோத்தரித்து, நல்ல மனதுடன், சொல்லின. பூமியைத் தாங்கும் தலேவனே! இப்பர்வதம் ஆயிரம் தலேயுடன் முன்பு உன்னுல் எவ்விதம் நமஸ்காரம் செய்யப் பட்டது !

என கேட்டதும்; ஸந்தோஷ மனமுடைய சேஷனும், ஸர்ப்பங்களேப்பார்த்துப் பதில் சொன்னுன்.

இப்பர்வத அடிப்பாகம் பாதாள உலகம். மேல்பாகம் தில்லேவனம். அவ்விடம் உண்மையாகவே மஹேசனே தொழப்போகிறேன். அப்பிரபு அனுக்ரஹம் செய்வார்! என்றதும்; அப்பாம்புகள் ஸந்தோஷத்துடன் ஐந்து தலே உடைய சேஷனே அடிக்கடி நமஸ்கரித்து, சொல்லின.

சேஷனே! சொல்லுகிறோம். மேலும் எங்களுக்கு இவ்விடம் வஸிப்பதில் ஸந்தேஹம் உண்டாகிறது. இப்பர்வதப் பொந்தின் அடி நுனியை நாங்கள் அறிய வில்லை. என்ற அவர்களது வார்த்தையை இதர ஸர்ப்பங்களும் ஆமோதித்து பரமேச்வர உருவமுடைய அப்பர்வதத்தை எல்லாம் உடனே நமஸ்கரித்தன. நமஸ்கரிக்கும் ஸர்ப்பங்களுடன் சேஷனும், தடுத்து அப்பொந்தை ஸந்தோஷத்துடன் நமஸ்கரித்து, ஈசப்ரஸாதத்தையும் நினைத்து, உலக கஷ்டம் நிவர்த்திக்க, அப்பர்வத மேறினன்.

ஐந்து அக்ஷரங்களையும் கண்ணாக அடைந்த சேஷன்; வெகுசீக்ரம் அம்மார்க்கத்தில் ஏறிச்சென்றான். ரத்னபுஷ்பம் போன்ற சிரஸில், எப்பொழுதும் பூஜிக்கும் அலையுடைய கைகளடைந்து, நீலகண்டர் எங்கு நர்த்தனம் செய்கிறாரோ? அங்கு ஜன்மாவில் ஏற்பட்ட பாப விமோசனத்திற்கு காம, க்ரோத, ஆச்ரயமற்று உலகங்களுக்கு ஒரே முக்கிய கண்ணாய், ஸபலமாய், ஜகத்திற்கு ஸதா பலமுள்ள ஸர்வ ஸித்தியை கொடுக்கவல்ல புண்யமுடைய திவ்யவனமடைந்தான்.

பதினைந்தாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## பதினாறாம் அத்தியாயம்.

சிவனது ஆனந்தத்தில் மூழ்கிய சரீரத்தில் ஆனந்தக்கண்ணீர் பெருக, சிரஸில் அஞ்சலிசெய்த கைஅடைந்து, மோஹத்தைத் துலைப்பதில் ஸூர்ய உதயம்போல், அந்த த்வாரத்தினின்று அப்படியே வெளி வந்தான். எழுந்திருந்து, அம்மஹத்தான வனமடைய, அவ்வழியில் ஆதரவுடன், நமஸ்கரித்தான். திவ்ய ஆத்மாவுக்குள்ளும் ஆச்சர்ய முண்டுபண்ணும்தில்லைவனத்தையும் ப்ரவேசித்தான்.

அவ்விடம் தபஸ் செய்யும் வ்யாக்ரபாத முனிவரையும், கண்டான். அம்முனியும், திவ்ய உருவமுடைய அவனைப் பார்ப்பதில் ஸந்தோஷமடைந்து, அவனைக் கூப்பிடுவதுபோல் கையைத்தூக்கி, சொன்னார். நீ எங்கிருந்து வருகிறாய்? உனக்கு எவ்விடம் இருப்பு? நீ யார்? என்ன பெயருடையவன்? எந்த தேசம்? உன் இருப்பிடம் எல்லாம் ஸந்தேஹமின்றி எனக்கு விஸ்தாரமாகச் சொல். உன்முகமாய் கேட்க எனக்கு பெரியதோர் ஸந்தோஷம் அடைகிறது என்று நிச்சயித்தே கேட்கிறேன்.

என்றதும்; மிக்க ஸந்தோஷமடைந்த பதஞ்சலி, அவருக்குத் தன் விஷயத்தை சொல்ல ஆரம்பித்தான்.

வ்யாக்ரபாதரே! உமக்கு ஸர்வமும் விஸ்தாரமாகச் சொல்லுகிறேன். அதை நீர் ஸமாஹித மனமுடையவராகி கேளும்! எந்த ஸகல பூமி, வனம், வனந்தரம், இவைகளை தரிப்பவன் ஸாக்ஷாத் விஷ்ணு அம்சமுடைய ஆதிசேஷன், என என்னை நீர் அறியும்! எனது பெரிய தல்பசயனத்தில் நாராயணர் படுத்திருக்கையில்; ஒரு சமயம் ப்ரபுவின் ஆச்சர்யத்தைக் கண்டு கேட்கையில்; விஷ்ணு சொல்லியது. நான் முன்னொருஸமயம் தேவதாருவனத்தில் பரமேச்வரனது ஆனந்த தாண்டவத்தை பார்த்தேன். என்றதும்; நானும் அதைப்பார்க்க வேணும்! என்ற இச்சையை அடைந்தேன். அதை தபஸ் செய்துதான் காணவேணும் என்று எனக்கு அனுக்ரஹித்தார்.

நாதனல் சொல்லியனுப்பிய நானும், கைலாஸ பர்வதத்தில் வெகு காலம் பெரியதோர் தபஸ் செய்தேன். முதலில் ஈசன் ப்ரம்ஹன் ரூபமாக வந்து என் தபஸை கலைக்கப்பார்த்து, அசையாதுள்ள என்னை கண்டு ஸந்தோஷப்பட்டு பிறகு எனக்கு பவழம்போன்ற ப்ரகாசமுடைய ஸ்வரூப இடதுகாலை காண்பித்ததும், பாபத்தை தொலைக்க அஞ்சலியுடன் ஈசனை காண அவ்விடம் உட்கார்ந்து புண்யம் செய்யாதவர்களாலும் அடையமுடியாத, பகவானை ச்ருதிகளால் போற்றும் தனது ஸ்வரூப உருவத்தை, எனக்குக்கொடுத்தார்.

இவ்விடத்தில் எனது பெயர் பதஞ்சலி. ஸமுத்திரத்திற்கு பக்கத்தில் தில்லைவனம் என்ற ஸ்தானம் இருக்கிறது. பாரதவர்ஷத்தில் பூமிக்கு ப்ரம்மஹ்ருதயம் போன்றது. அவ்விடம் மாத்யந்தினி வியாக்ரபாதர் என்பவர் ஸாக்ஷாத்தாக எனது தாண்டவத்தைக்காண இச்சை உடையவராக கடுமையான தபஸ் செய்கிறார். உனக்கும், அவருக்கும் நான் எனது தாண்டவத்தை அவ்விடம் காண்பிக்கப்போகிறேன். சீக்ரமாக அந்த ஆத்ம லோகத்தைப் பொந்து மூலம் நீ அடை! அந்த மஹாத்மாவுடன் பூர்ண ஞானமடை! நீ சென்று அவ்விடம் இரு! என ஆஞ்ஞாபித்து என்னை ஈசன் விடுவித்தார்.

ஸூதர்:— பதஞ்சலியின் வார்த்தையை வ்யாக்ரபாதர் கேட்டு மயிர்க்கூச்சலை அடைந்தவராகி, மூர்ச்சை அடைந்தார். பிறகு பரம ஆச்வாஸத்துடன், க்ஷணிககாலம் மூர்ச்சை தெளிந்து பதஞ்சலியிடம் வணக்கத்துடன் மறுபடியும் சொன்னார்.

வ்யாக்ரபாதர் :— பதஞ்சலி! எங்களுக்கு கஷ்டம் துலைய, உடனே எது ஆசையோ? அதுதான் அவர்களுக்கும் பரமேச்வர கடாக்ஷ ஹேது! அதற்கு உடனே அவர் பாத்ரமாகிறூர். தேவரது கருணை ஸமுத்ர அலைகளில் எண்ண நான் என்ன புண்ணியம் செய்தேனே? அதுதான் இது! என ஆனந்த மஹா ஸமுத்ரத்தில் மூழ்கி, ஈசன்போல் பதஞ்சலியைப் பார்ப்பவராய், நீரே எனது மங்களங்களுக்கு இருப்பிடம்! என ஸ்தோத்ரம் செய்தார். ஸந்தோஷத்தினுல் மூழ்கி அடிக்கடி பதஞ்சலியை ஆலிங்கனமும் செய்து கொண்டார். பின்பு முனி ஜ்ஞான த்ருஷ்டியில் அநேக நிருத்தம் பார்த்த வ்யாக்ரபாதர்; பார்வையால் ஸந்தோஷமடைந்த மனமுடையவராகி, அவ்வுயர்ந்த தீர்த்தத்தில் புண்யவிதியுடன் அவரை ஸ்னனம் செய்வித்து, அவருடனேயே ஸ்ரீமூலஸ்தானவாஸியையும் பூஜை செய்தார்.

பின்பு அவ்வீசனை ப்ரதக்ஷிணம் செய்து, வெளிக்கிளம்பி தனது ஆச்ரம ஸமீபத்தில் பதஞ்சலியை ஸ்நானம் செய்யச்சொல்லி, தன்னைப் போலவே ஈசனுக்கு அபிஷேகாதிகளும் செய்விக்க செல்லியதில் பதஞ்சலியும், செய்தார். அப்பர்ணசாலையில் மறுபடியும் பிரவேசித்து, அழகிய ஆஸனத்தில் முனீச்வரருடன் ஆதரவு பெற்ருர். மறுநாள் வானப்ரஸ்தர்களுக்கு உரிய பழங்களான கந்தமூலங்களை, முனி ச்ரத்தையுடன் கொடுத்தார். அப்பதஞ்சலியும், பின் பாகத்தில் மனேஹரமான இடத்தில், முனிவருக்கு ஸமீபமாய் கீழ்பாகத்தில் அதற்குமுன் ஓர் குளம் தோண்டி, ஈசனை விதியுடன் ப்ரதிஷ்டைசெய்வித்து, குளத்தின் வடகரையில் பதஞ்சலி பர்ணசாலையை அமைத்து, ப்ரஸன்னமாய் தாண்டவம் காணுதலில் உல்லாஸமடைந்து அங்கேயே வஸித்துவந்தார். அவ்விருவர்களும், உலக கஷ்டத்தை நிவர்த்திசெய்ய தபஸ் செய்கிறவர்களாகி, தன் ஆச்ரம கார்யங்களைப்பார்த்து, பின்பு ஸ்ரீமூலஸ்தானமடைந்து, இருவர்களும் ஸந்தோஷமடைந்து, ஈசனை பூஜை செய்பவர்களானுர்கள். ஈசனது நர்த்தனம் காணுதலில் ஆசையினுல் மனதில் தபஸ் விருத்தியடைந்தது.

இச்சமயம் இவ்வனத்தில் ஸஞ்சரிக்கிற ஸர்வ மிருகங்களும் இருந்தன. முனிவரும் அவ்விடத்திலேயே வஸித்திருந்தார். அம்மிருகங்கள் இப்பொழுது பாம்பு உருவமுள்ள ஒருவர் வந்துள்ளார் என சில பயந்தகுணமுடையதுகளாகி, உயரத் தூக்கிய கழுத்துடன் நீண்ட பார்வை அடைந்து, இங்குமங்கும் மயிர்க்கூச்சலுடன் செல்லுகிறதாய், அம்முனி உள்ள இடத்தில், இருந்து காலம் செல்லச்செல்ல ஸ்நேஹத்

தன்மையும், அடைந்தன. அவ்விடம் கொடுமையான தபஸ் நடை பெறுகையில்; அவர்களைப்பார்த்து அநேக முனிகள் அவர்கள் வசமானார்கள். பிறகு எல்லோரும் ஸ்ரீமூலஸ்தான ஈசனை நமஸ்கரித்து, மர நிழலில் அவர்களுடன் ஸதா கூடவே இருந்தனர். ஈசனது தாமரை போன்ற பாதங்களையே நினைக்கிறவர்களாகி, ஈசனால் சொல்லிய கதையையும் சொல்லி, நல்வரவும் அவர்களுக்குக் கூறினர்.

அவர்களது வார்த்தையை எல்லாரும் கேட்டு, உலகத்திற்கே கேள்விப்படத்தகுந்த சிதம்பரத்தை ஹ்ருதயத்தில் த்யானம் செய்து, ப்ரஸன்னமாக அந்த ஸ்தானத்திலேயே, இருந்தனர். பக்திபாவனை உள்ள இப்புண்ய அத்தியாயத்தை மூன்று ஸந்த்யைகளிலும் எவன் படிக்கிறனோ? அவன் மஹாத்மாவான பதஞ்சலிக்கு கிடைத்த கீர்த்தியை அடைகிறன்.

பதினறும் அத்தியாயம் முற்றிற்று.

---

## பதினேழாம் அத்தியாயம்.

ஸூதர்:— அவ்விடம் தபஸ் செய்கையில்; பரமேச்வர தாண்டவம் காணவேணுமென்ற ஆசையடைந்த பதஞ்சலி வ்யாக்ரபாதர்களுக்கு, அநேக காலங்கள் சென்றன. அவர்கள் சுத்தயோகத்துடன், பரமேச்வரனல் சொல்லிய புண்ணிய தினத்தை நினைத்து, பூர்ண உல்லாஸமாய் இருந்தனர். அம்ருதம், பால், கருப்பஞ்சாறு, இவைகளுக்கு ஸமானமுள்ள பஞ்சாக்ஷரத்தை அடிக்கடி பானம் பண்ணி, முனிவர்கள் த்ருப்தி அடைந்தவர்களாகி, தபஸ்செய்து வந்தனர். அவர்களது ஸமீபத்தில் தாண்டவத்தை இச்சிப்பவர்களான 3000 முனிவர்கள் முன்னமேயே வந்தவர்களாக இருந்தனர். ஆத்ம தர்சனத்தில் த்ருப்தி அடைந்த பதஞ்சலி வ்யாக்ரபாதர்கள், பரமேச்வர தாண்டவத்தைக்காண உத்ஸாஹ முடையவர்களாக சொல்லினர். அந்த தினம் வந்தபொழுது, வேறு மஹர்ஷிகளும், அங்கு வந்தனர். வந்தவர்களும், தபஸ்செய்கிறவர்களாகி, அவரவர் ஆச்ரமங்களை அடைந்தனர். தடுக்கமுடியாத இருட்டுக்கு, ஸூர்ய உதயம் ஆனல் எப்படியோ? அவ்விதம் தபஸ் பரிபக்வத்தில் ஈசனது நர்த்தன மஹோத்ஸவத்தை நாங்கள் இவ்விடம் கண்ணல் பார்க்கப்போகிறோம்! என சொல்லி அத்தினத்தையே திவ்யமென்று எண்ணி, இருந்தனர்.

பசியினால் வாடிய பசுவின்கன்று எவ்வாறு இருக்குமோ? வனாந்தரங்களில் மேகங்களின் வருகையை சாதகபக்ஷிகள் எல்லாம் எவ்விதம் காத்து இருக்குமோ? அவ்விதமே அந்தரிக்ஷிதம்பதிகள், வாடி பொறுமையுடன் பார்க்கிறவர்களாக, ஈச தாண்டவத்தையே நினைத்து இருந்தனர். அப்பலத்தின் உருவமாக பலநாள் சென்றது. அவ்வீசனால் சொல்லிய தினத்திற்கு முதல்நாள் உதய ஸூர்யன் காணப்பட்டது. ஈசன் கைலாஸத்தினின்று ஆனந்தத்தாண்டவம் செய்ய, தில்லை வனம் அடைதலே முக்யம் என புறப்படுகிறார் என்று ஆத்மாவுடன் சேர்ந்து அறிபவர்கள்போல் நினைத்தனர். ஸூர்ய உதயமானதும், முனிகள் நித்ய கர்மாக்களைச்செய்து, நாளையதினம் நம் இருவர்க்கும் ஆசை பூர்த்தியாகப்போகிறது. என கஷ்டங்கள் நீங்க கணபதியை துதித்தனர். வேத, ஆகம, வாக்யங்களாலும், ஸ்தோத்ரங்களாலும் ரிஷிகள் அநேகவித பூஜைகளை செய்தனர். மறுநாள் விடியற்காலையில் அம் மஹர்ஷிகளுக்கும், ஆச்ரமவாஸிகளான இருவருக்கும், அழகிய நற் சகுனங்கள். உண்டாயிற்று தேவர்களால் காணமுடியாத ஆனந்த தாண்டவத்தை நான் காண்கிறேன் என எண்ணிய ஸூர்யன் ஸமுத்ரத்தினின்று உதயமானான். ஸ்வர்ணப்ரகாசமடைந்து எல்லா திக்குகளிலும் ப்ரகாசிக்க அவன் நடுப்பகலை வேகமாக அடைந்தான். உலகத்திற்கே மணிபோல் அவன் பகல் மத்யானமடைந்திருக்கையில்; ஆச்ரமத்தினின்று கவனித்து இருந்தனர்.

இச்சமயத்தில் ப்ரணவ உருவான "ஸ்ரீமந் நடராஜர்" அவ்விடம் வருகிறார் என உயர்ந்த சப்தத்துடன் காஹலம், முதலிய வாத்யங்கள் அங்கு முழங்கின. பின்பு தாளத்துடன் தோல் வாத்யங்கள், ம்ருதங்கம், சங்கம், பணிவம், ச்ருங்கம், புல்லாங்குழல் முதலியன வாசிக்கக் கேட்டன. பின்பு அவர்கள் ஸர்வ வாத்யதாளத்வனிகளையும் கேட்டு, பரமானந்த மோஹிதர்களாய், வேகமாக பூமியை அடைந்தனர். ஆயிரம் தலைஉடைய பானுகம்பன், பெரிய ஹிமவான்போல் முகங்களில் சங்கங்களை வைத்து, சப்திக்க ஆரம்பித்தான். ஈசப்ரசாதத்தினால் கந்தர்வ வேதங்களை சொல்லும் பாணன்; தாமரைபோன்ற கைகளில் வளையல்கள் ஜ்வலிக்க, கைகளால் ம்ருதங்கம் வாசித்தது பெரியத்வனியுடன் அழகாக இருந்தது. ஸமுத்ரத்தையும் கலங்கச் செய்கிறதுபோல் அங்கு காணப்பட்டது.

அவ்விருவர்களும் ஈசனது தாமரைபோன்ற பாதத்தில் திவ்யபாத சிலம்பு சப்தம்போல் தாரத்தையும், தேவ ஜாதிகள் கானத்தையும்,

கேட்கிற காதுகளுக்கு, ஆயுஷ்யம் கொடுக்கிறபோது இருந்தது. ஆகா சத்தினின்று பெரியதோர் நழுவும் புஷ்பவ்ருஷ்டியும் பார்ப்பவர்களாகி, எங்கும் கூடவே ஓடும் வண்டுக்கூட்டங்கள் ஜங்காரம் செய்துகொண்டு, தாகமடைந்து தாமரையையும் அடைந்து, எவ்விதம் அனுபவிக்குமோ? அவ்விதமே அனுபத்து அவர்கள் புஷ்பவ்ருஷ்டியையும் பார்த்து ப்ரீதி அடைந்தனர். அந்த திக்கில் புஷ்பவர்ஷம்போல் விழுந்தும், நமஸ் கரித்தனர். அஞ்சலிசெய்த சிரமுடைய அவர்கள், ப்ரீதியுடன் பகவானே! தேவர் அனுக்ரஹம் செய்யவேணும்! என்றும் நமஸ்கரித்தனர். உமது பாதாம்புஜத்தை காட்டும்! என ஆனந்தரஸத்தில் மூழ்கி, மயிர்க் கூச்சல் அடைந்த சரீரமடைந்து, நினைக்கமுடியாதவைபவமுடைய சுத்தனை சந்த்ரசூடனை ஸ்தோத்தரித்தனர்.

பிறகு ஈசன் தன் பாதாம்புஜத்தை ஸேவிக்கும் வ்யாக்ரபாத பதஞ்சலிகளுக்கு மோஹத்தை உண்டுபண்ணும் ஜகத் ஸந்தாபத்தை அபஹரித்து, ஜ்ஞானத்ருஷ்டியையும கொடுத்தார். பிறகு முனிகளது மாயை திரை ஈசனால் அபஹரிக்கப்பட்டது.

அநேக தேஜஸ் அடைந்த ஸூர்யன்போல், தபித்து ப்ரகாசிக்கும், சந்த்ரன்போன்ற முகமடைந்தும், நிரூபிக்கமுடியாத ப்ரகாசமடைந்தும், மேரு, மந்தர, பர்வதம்போல் ஸமானமாய், யோகிஹ்ருதய கோசர மாயும், கண் இமைக்கு க்ருஹிக்காத அந்த தேஜஸ்கண்டது. அந்த தேஜஸ்மத்தியில், நிச்சய வைபவமடைந்த சிதம்பரத்தில் சாந்த சிவ தேஜஸும் ஆவிர்ப்பாவமடைந்தது. அவ்விரு முனிகளுக்கும் ஜன்மா வில் ஏற்பட்ட பாபங்களும் உடனே தொலைந்தன.

வாக்கிற்கும், மனதிற்கும், எட்டாத உருவமுடைய அந்த ஸதவில் அத்புதமாக பாதம் முதல் சிரஸ்வரை, அவரது உருவத்தையே பார்க்க ஆரம்பித்தனர். சிவஸாயுஜ்யமளிக்கும் சித்ஸபாமத்தியை ஸ்தாபித் தவர். ஒரே தாமரைபோன்ற வாக்குகளுக்கு எல்லாம் எட்டாத நிச்சய முள்ளவர். காலை வளைத்து மேல்பாகம் வைத்து, விளங்கும் இடது காலில் மாணிக்கங்களால் இழைத்த பாதசிலம்புகளும், ஒரே அலங்கார மடைந்து ப்ரபை உதயம்போல் இரு தொடைகளில் சலிக்கும் புலித் தோலும், ச்ரேஷ்டமான பாம்பு ஆபரணங்களும், மாணிக்கம் இழைத்த மனோஹர அரைஞாணும், புதிய நவரத்னங்கள்சேர்ந்த நாபி பாகத்தில் மங்களமான அலங்காரமும், பூணல் நூல் ப்ரபையின் ப்ரகாசமும், பர்வதம்போன்ற கனமான தோளும், கொஞ்சம் வளைத்து ப்ரகாசிக்கும்

தாமரைபோன்ற இடது காலும், கொடுக்கும் அபயகரத்தில் கட்டிய பாம்புகளின் அலங்காரமும், ஓடுகையில் சலிக்கும் டமருக ப்ரகாசமும்; அக்னி ப்ரகாசமடைந்த இரண்டாவது கையும், காளகூட விஷப்ரபையில் சேர்த்த நீலமயமுள்ள கழுத்தும், சங்கம் போன்ற தாடங்க ப்ரகாசம் உடைய காதுபாகமும், அதிப்ரகாசமுடைய வெளுத்த புன்முறுவலும், மந்த ப்ரகாசமுடைய தாமரைப்போன்ற முககாந்தியும், பார்வதியின் கண்ணினால் பானம் செய்த தேன்போன்ற ருசியும், புருவ நெரிச்சலினால் உண்டான நெற்றிப் பிரதேசமும், சந்த்ர ப்ரகாசத்தினால் காணும் கங்கை, பாம்பு, இவர்களுடன் சேர்ந்த சிவந்த ஜடாபாகமும், ப்ரம்ஹ கபாலங்களால் செய்த மாலையும், ஸூர்யபுஷ்பங்கள், துரோண புஷ்பங்கள், இவை தரித்தும், கால் முதல் சிரஸ்வரை ப்ரகாசிக்கும் வெளுத்த விபூதி பூச்சும், அசையும் மஞ்சள் ஜடைஅணிந்த திக்பாகமும், மத்தியில் ஆயிரம் ஸூர்யப்ரகாச உதயமுடைய அத்யத்புததிவ்யரூப ஆனந்தத் தாண்டவமும், பக்கத்தில் உள்ள பரமஸுந்தரி பார்வதியையும் பார்த்து அவளது மின்னல் கன நிழலில் உள்ள அதிப்ரகாசமுடைய மயிர்பாகமும், செம்மஞ்சி குழம்புபோன்ற குங்குமப்பொட்டு ப்ரகாசிக்கும் நெற்றிப் பட்டையும், ஸௌந்தர்ய ஸமுத்திரத்திற்கு புஷ்பம் போன்ற கடைக்கண் பார்வையும் புருவநெரிச்சலும், இநட்டுக்குச் சத்ருவான சரத்காலம் போன்ற அந்தந்த அலங்காரங்களால் ப்ரகாசிக்கும் காது, மூக்கு, ஆபரணங்களின் மனோஹரமும், மரநிழல்போன்ற ஜபமாலை ப்ரகாசமும், நல்முத்துபோன்ற நிழலுடைய பல் வரிசையும், நன்கு சோபை அடைந்து சங்கக்கூட்டம்போன்ற கழுத்தும், திவ்யமான மங்கள அலங்காரமும், இளம் மூங்கில்போன்ற வளையல்களும், பாகங்களில் பொருந்திய ப்ரகாசமும், தாமரை போன்ற கைகளில் உண்டான மலர்ந்த கல்ஹார புஷ்பதூளியும், பருத்து நிமிர்ந்துள்ள இரு ஸ்தனங்களில் ப்ரகாசிக்கும் கொடிபோன்ற ஹாரமும், சுற்றுகல் ப்ரகாசமடைந்து உருவமற்று வணங்கிய தொப்புள் ப்ரகாசமும், அநேக ரத்னக்கூட்டங்களினால் நன்கு அலங்கரித்த அழகிய வெண்பட்டும், பாத சிலம்படைந்த அழகிய கால்களும், வனப்பூங்கொத்துப் ப்ரகாசமுடைய அழகிய ஸ்தம்பம்போன்ற துடைகளும், கருடமணி க்யாதிபோன்ற முழந்தாள் அலங்காரமும், மன்மதாகார நிலையுள்ள முழம்தாள்பாகமும், மலர்ந்த தாமரைபோல் ப்ரகாசிக்கும் பாதங்களில் உள்ள பாதச் சிலம்பும், தண்ணீர் தாமரைபோல் சரீர நிழலும், இனிக்கும் ஆனந்தமுள்ள புன்னுருவலும், அழகிய ஸூர்யன்தான் ப்ரகாசிக்கிறானோ? என்ற ப்ரகாசம் அர்த்தம், வார்த்தை, இவைகளுக்கு இரவு, பகல், போல்

குறைவில்லா இச்சை, க்ரியை, ஜ்ஞானம், என்ற மூன்று ஆத்ம ரூபமும், சிவனுன நடராஜநுக்கு தனிமையான சக்திபோல் இருப்பவளும், மன்மதனுக்கு ஆனந்தத்தைக் கொடுக்கும் முளைபோல், கொழுப்புடன் லலிதமாய் அழுக்கடைந்த பார்வையும், அனுதிபுயலான ஈசனைப் பக்கத்தில் உடையவளும், எப்பொழுதும் ஆனந்த பரவசத்துடன் நடிக்கும் அவள், மதுரமுள்ள புன்சிரிப்பும், பூஜை முதலிய விலாஸங்களுடன், தன் ஸம்பந்தமான பார்வை, செய்கை, இவைகளுடன் சிவனுக்கு ஸந்தோஷமடைவிக்க, மூன்று உலகிற்கும் பிறப்பிடமுள்ள மஹாதேவி, ஜகன்மங்கள ஹேதுக்கு ஸபேசனுடன் காணஅவளையும், அவ்விடத்தில் தபஸ்செய்யும் ஸகலரிஷிகளையும், பார்த்து சாப்படுகிறவன் சாப்பிடுவது போலும், தாகம் எடுத்தவன் குடிப்பதுபோலவும், எண்ணமுடியாத புதயல் போலும், ரணத்தை நிவர்த்திசெய்யும் ப்ரியமான வைத்யன் போலும், அந்தக் கரணத்துடன் அத்புத உருவமடைய ஆனந்தத் தாண்டவ ரூபமுள்ள ஈசனே, அவ்விடம் இருவர்களும் பார்த்து, கொஞ்சம் ஆனந்தப் பெருக்கினுல் ஆஜ்ஞையே இஷ்டதேவதை, என அடிக்கடி பார்த்து பிறகு ஈசனது தயையால் வேகமாய் விழித்த அந்த ரிஷிகள் ஸாஷ்டாங்கமாக ஈசன் பாதங்களில் நமஸ்கரித்தனர்.

மறுபடி எழுந்தவர்களாகி, அவ்விடத்தில் சிரஸில் வைத்த அஞ்சலி அடைந்து, தனது ஸந்தோஷ கண்களுடன், மயிர்க்கூச்சலுடன், ஸந்தோஷித்தனர். திவ்யமான வாக் மனதிற்கு எட்டாத தன்னுல் தெரிவிக்கத்தகுந்த ஆனந்த ஸமுத்திரத்தில் மூழ்கிய அவர்கள், ஸ்தோத்ரங்களால் ஈசனேயே ஸ்தோத்தரித்தனர். முடிவில்லாத இந்த ஜகத்திற்கு ஆனந்தத்தைக்கொடுக்க ஹேதுவும், நடர்களுக்கு எல்லாம் அரசனும், நாட்ய வேதத்தை செய்வித்தவருமாயுள்ள, உமக்கு நமஸ்காரம். பரம், அபரம், எல்லாமறிந்த பரத்திற்கு எல்லாம் பரதரமான பரமாத்ம ஸ்வரூபமாய், ஸம்ஸாரத்தை அபஹரிக்கும், உமக்கு நமஸ்காரம். குணமில்லாமல் குணமுடையவர், கைவல்யத்தை கொடுக்கஹேது உடையவர், தேவர்களால் நமஸ்கரிக்கத்தகுந்தவர். த்ரிபுரஸம்ஹாரம் செய்தவர் உமக்கு நமஸ்காரம். விபூதியினுல் அழகிய அலங்கார முடையவர். பாதிசந்த்ரனே சிரஸில் உடையவர். அரை சரீரம் கருப்பாக உடையவர். பாம்புகளை ஆபரணமாக உடையவர் உமக்கு நமஸ்காரம். வேதாந்த வேத்யர், நாதாந்த மூர்த்தி, நாராயணனுல் அர்ச்சிப்பவர். நரகத்தை அபஹரிக்க ஹேது உள்ளவர், உமக்கு நமஸ்காரம். நாரத கானமுடையவர். நந்தியால் வணங்கப்

படுபவர். தங்கஸபையில் இருப்பவர். அஸுரர்களை அபஹரிப்பவர், உமக்கு நமஸ்காரம். மூன்று உலக நாதர். ஸ்ரீகண்டர். உமக்கு நமஸ்காரம். மங்களகரமாய் சாந்த கல்யாணமளிக்கும் உமக்கு நமஸ்காரம் இவ்விதம் மலர்ந்த கண்ணுடைய நடேசரை அஞ்சலிசெய்த சிரஸுடன் ப்ரீதியடைந்த முனிகள், ஸந்தோஷமாய் ப்ரார்த்தித்தனர். உமது தாண்டவதரிசனம் இப்பொழுது காணப்பட்டது! சுபமான இருப்பிடமுடைய சிதம்பரத்தை இங்கு காண்பியும்! ஆனந்த ஆதாரஜகத்திற்கு ஆனந்தத்தாண்டவ உருவம் காண்பியும்! என நான்கு புறமும், தேவர்களும் சூழ ஸ்ரீமந் நடராஜரை கேட்டனர்.

ஈசன் புன்னுருவலுடைய தாமரைபோன்ற முகத்துடன், பார்வதியைப்பார்த்து; தாண்டவதரிசன, மோக்ஷமார்க்கத்தை குறைவில்லா இஷ்டத்துடன், அடைக! பல ப்ரதமடைய ஸமஸ்த தேவர்களுக்கும் கிடைக்க முடியாத ஸர்வ ஸுகமுமடைக! ஸர்வஜனங்களும் கஷ்டங்களினின்று விடுபடுக! எல்லோரும் மோக்ஷம் அடைக! க்ருதார்த்தர்களாகுக! என சொல்லி ஈச்வர ஸங்கல்பமாகவே மனதில் மறுபடி ஈசனை நினைக்கையில், அப்பொழுது அவ்விடம் எலலோருக்கும் தாண்டவம் காண்பித்தார். எது கிடைக்க முடியாதோ? அது வெகுகாலம் செய்த தபஸ் பயனாகவே கிடைத்தது.

பதினேழாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## பதினெட்டாம் அத்தியாயம்.

ஸூதர் :— விஷ்ணு, ப்ரம்ஹா, குபேரன், இந்திரன், தேவர்கள், 3000 முனிகள், நாரதர், தும்புரு, வித்தாள், வித்யாதரர், யக்ஷர், கந்தர்வர், கின்னரர், திக்பாலர், மற்றும் மஹிமை உடைய பராக்ரமசாலிகள், கணச்ரேஷ்டர்கள், இன்னும் தாண்டவத்தை காண ஆசை உடைய மற்றவர்கள், எல்லோரும் வேகமாக அடைந்து, உமாபதியின் அனுக்ரஹத்தால் ஜ்ஞானக்கண்பெற்று அச்சிதம்பரத்தில் சுத்தமடைந்து அநேக ஜன்மங்களில் காணாத திவ்ய தாண்டவம் என பரமப்ரீதியுடன், கண்டுகளிக்கப்பட்டது. ஆனந்தப் பெருக்கடைந்து அஞ்சலிசெய்த ஸ்வரூபர்களாய், வேதம், மிருதங்கம், சங்கம், முதலிய சப்தங்களுடன், ரிஷிகள், ஸர்வகணங்கள், எல்லோரும் ஈசனது தாண்டவ ஸமுத்திரத்தை ஸந்தோஷத்துடன் கண்டு, மூழ்கினர். பின்பு

எல்லோரும் ஈசனை ஸ்தோத்தரித்தனர். அவரது பாதாரவிந்தத்தில் பாபநாசத்திற்காக புஷ்பங்களையும் இறைத்து, ஹர! என உயர்ந்து சொல்லுபவர்களாகி, அடிக்கடி நமஸ்கரித்தனர்.

இரஹஸ்யமான வேதவாக்யங்களுக்கு ப்ரகாசம்செய்யும் சிவன் இவ்விதம் அங்கு காணப்பட்டார்! என வசமாகாமல் தேவர்கள் ப்ரீதியுடன் கானம் செய்தனர். நர்த்தனம் செய்தனர். இமைகொட்டாமல் அஞ்சலிசெய்த சிரமுடையவர்களாயிருந்தனர். ப்ரீதியினுல் எல்லோரும் உயர்ந்து பாபரோகம் தேஹத்தில் உண்டானவர்களுக்கு எப்பொழுதும் நீர் திவ்யமருந்தாகி, கடைக்கண் பார்வையால் வரம் கொடுக்கவேணும்! என்றனர்.

தினமும் ஆயிரக்கணக்கான அபராதம்செய்யும் எங்களுக்கும், கொஞ்சம் தயைசெய்ய வேணும்! என தேவர்களில் சிலர் யாசித்தனர். பூதங்களும் அநேக உத்ஸாஹங்களை செய்தன. மூன்று உலகிற்கும் ஈசன்; கேட்கிறவர்களுக்கு எல்லாம் இஷ்டமான வரங்களைக்கொடுக்கிறேன் என்று சொன்னுர். தாமரைபோன்ற ப்ரஸன்னமுகமுடைய ஈசனிடம், சரணமடைந்தவர்கள் பீடையை அபஹரிக்க கம்பீரமாய் இனிய உச்சரிப்புடன் வார்த்தைகளை ஸ்நேகமாகச்சொல்ல, என்ன செய்வது! என; புத்தி அற்று, அவ்விருவருக்கும் சித்தத்தில் ப்ரீதி உண்டாயிற்று. ஒவ்வொருவரும் தாமரைபோன்ற முகத்தைப்பார்க்கிறவர்களானுர்கள். அவ்விருவர்களும் மஹாதேஜஸ்வியாய் அவர் பக்வமடைந்து, வெகுகால தபஸின் பலன் என, அஞ்சலிசெய்த முகமுடையவர்களாகி, மயிர்க்கூச்சலுடன், ஈசனிடமிருந்து வேண்டிய வரமும் கேட்டனர்.

என்னுல் செய்யப்பட்ட பூஜை எல்லாம் உமது பரத்திற்கு உபயோகம்! ஏற்றுக்கொள்ளும்! எனக்கு மாறுதலில்லாத ச்ரேயஸ் உள்ள இவ்வரமே முக்யம்! எங்களுக்கு அனுக்ரஹம் செய்யவேணும்! என நடராஜரை நமஸ்கரித்துக்கேட்டனர். தலையில் ரத்னம் ப்ரகாசிக்க ப்ரஸாதமும், அவர்களுக்கு தென்பட்டது. மறுபடியும் நமஸ்கரித்து, மற்றொரு வரத்தையும், உயர்வாக அடைந்தார். நிச்சலமான சித்தத்தில் நினைக்கும் ஜனங்களுக்கு ஆசை முதலிய கஷ்டங்களால் க்ஷணம் தோறும் மறுதல் அடைகிறது. தாண்டவ பூஷணரே! உமக்கு ஸர்வ உலகமும் சரணமடைந்தது. எனக்கும் நமஸ்காரம் செய்ய யோக்யமே. உமது தாண்டவ தர்சனம் இவ்வுலகில் ஸர்வஜனங்களுக்கும் அற்புத

மாருக! இதுவே போதும்! என்ற பாவனை இல்லாமல் இவ்விடம் எல்லோரும் குறைவில்லா ஆனந்தம் அனுபவித்து, த்ருப்தி அடைக! உமது தர்சனத்தைப்பார்த்த மாத்திரத்திலேயே தாயாரின் ஸ்தன்ய பானம் இனி அடையவேண்டாம். கோர பாபங்கள் தொலைக! ஸூர்யன் உதயமானதும் இருட்டுதொலைவதுபோல், ஆருக! இவ்விடம் எந்த பார்வதியுடன் நர்த்தனம் செய்தீரோ? ஸர்வ ஜனங்களால் எது அபேக்ஷிக்கப்பட்டதோ? அது மஹத்தான அரை சரீரம் அடைக! ஸாக்ஷாத்தாக செய்த அதை ஸனாதனமாக்கி, ஸர்வ ஜனங்களுக்கும் ஆனந்தத்தாண்டவம் காண; இவ்விடம் ச்ரேஷ்டமுள்ள இவ்வரம் மட்டும்தான் எனக்குவேணும்! அதைத்தான் கொடும்!

ஈசனே! அனுக்ரஹம் செய்க எனச் சொல்லி, உலகங்கள் கடைத்தேற இருவரும் வணங்கினர். பிறகு ஈசன் அப்படியே ஆருக! என தயையுடன் பதில் வரமும், கொடுத்தார். முநிகளுக்கு ப்ரீதியுடன் நர்த்தன விளையாட்டு முடிந்ததும், எழுந்து தேவரது மாஹாத்மியம் மஹத்தானது. தயைக்கு பாத்ரம் எங்களிடமுள்ளது. இதரர்களால் அடையாத விஷயம், என ஆனந்தத்துடன் தடுக்கமுடியாது உலகங்கள் எல்லாம், நர்த்தனம் செய்தன. மேல் தாழ்வரையில் நின்று பார்க்கிற இந்த்ரன் முதலியோர் புஷ்ப வர்ஷங்களையும் இறைத்தனர்.

பின்பு பானுகம்பன் முதலானவர்கள், குணமான வாத்யங்களை வாசித்தனர். அவ்விடம் தேவ துந்துபிகள் கொண்டுவரப்பட்டு ஆதரவுடன் முழங்கின. இச்சமயம் தேவர், முனிகள் மறுபடியும் பூமியில் தண்டாகாரயாக ஈசனை நமஸ்கரித்து, அண்டம் முழுமைக்கும் தலைவரே! எங்களுக்கு அனுக்ரஹம் செய்யவேணும்! தர்சனத்திற்கு திவ்ய சிதம்பரம் என முன்பு உம்மால் சொல்லப்பட்டது. பின்பு அதையே நீர் காண்பித்தீர். அவ்விடம் சிதம்பர ஆகாசத்தை தெரிவித்தபடி எங்களுக்கு மனதோடு காட்டுக! என தெரிவித்ததை நடராஜர் கேட்டு அந்த சிதம்பர உருவத்தையும் அவர்களுக்கு காண்பித்தார்.

ப்ரம்ஹா, விஷ்ணு, பதஞ்ஜலி, வ்யாக்ரபாதர் எல்லோரும் உபநிஷத்துகளில் கானம் செய்யும் ஸ்தானமான அச்சிதம்பரத்தைக் கேளுங்கள்! ஜ்ஞானமே அந்த ஸ்தானமாக எனக்கு உள்ளது. அதையும், என்னையும் ஒருபொழுதும் விடக்கூடாது. இதுதான் லோகோபகார செய்கைக்கு உள்ளது என அறியுங்கள்! ஆத்மாவினின்று சரீரமடைந்து, நான் அவ்வுருவத்துடன் அதனுள் உள்ளேன்.

அப்படியே இப் ப்ரபஞ்ச தேஹத்தின் நடுவில் உள்ள சிதம்பரம் என்ற இடத்தில் நான், விளையாடுகிறேன். அந்த ஜ்ஞானத்திற்கு மாறுதலாக சித் என்ற சப்தம் தேவர்களாலும் நினைக்கப்படுகிறது. சித்தத்தின் மற்ற உருவமுடையது. நடுவில் எந்த இடம் சிதம்பரமோ? அதினின்று பூமி புண்டரீக மத்தியில் ஹ்ருதய ஸ்தானம் என அடைந்துள்ளது. அது தஹரமென்பது. பாபமற்றது. ஆகாச உருவம் சிதம்பரம் என அவ்விடம் சொல்லப்படுகிறது. அது உள் இதுதான் என எதைச் சொல்லப்பட்டதோ? அதையே நீங்கள் அறியுங்கள்!

விஷ்ணுவால் பார்க்கப்பட்ட ஆனந்தத் தாண்டவம் உங்களுக்காக செய்யப்போகிறேன் என்றுரைத்ததும் இவ்வுபதேசத்தை தேவர்கள் பரமேச்வரனிடமிருந்து உத்தமோத்தமமாய் அடைந்து மறுபடியும் நிர்ணயிக்க தேவர்களால் நடேசர் மறுபடி நமஸ்கரித்து கேட்கப்பட்டார்.

அதை வியக்தமாகச் சொல்லி ஸந்தேஹத்தை நிவர்த்தி செய்ய சுபமாக சொன்னார். வேதாகமங்களில் ப்ரஸித்திபெற்ற ஒரு ஸ்வர்ண ஸபை அங்கு இருக்கிறது. தேவர், அஸுரர், மனுஷ்யர் இவர்களுக்கு வெகுகாலமாக இச்சபை கண்களுக்கு தென்படாமல் உள்ளது. முனிச்ரேஷ்டர்களால் அது சிதம்பரம் தான் என சொல்லப்படுகிறது.

மஹாஸபை, தப்ரஸபை, ஹேமஸபை என சிதம்பரத்திற்குப் பெயர் மாறுதலுள்ளது என நீங்கள் அறியவும்!

ஸூதர்:- இதுதான் பட்டணம் என சிதம்பரத்தை தேவர்களுக்கு நர்த்தனஸபை என்றும் காண்பித்தார். பிறகு அத் தபஸ்விகள், தேவர் முனிவர், கண ச்ரேஷ்டர்கள் எல்லோரும் இவ்விதம் அவர் வார்த்தையைக்கேட்டு மிக ரஹஸ்யமாக சங்கரனால் சொல்லியதையும் எண்பித்து தாண்டவ பூமியான அம் மஹா பாக்ய இடத்தையும் ப்ரதக்ஷிணம் செய்து, நான்கு புறமும் சுத்தமான ஸ்வர்ணப் பட்டையுடைய அவ்விடத்தை நமஸ்கரித்தனர். உலகில் ச்ரேயஸ் அடைய தேவர்கள் அதை புதுப்பித்துக் கட்டினர். மேருபர்வத தாழ்வரைக்கு ஸமானமாய் ஆத்ம பாவனை உடைய பர்வதம்போல், அதைச் செய்தனர். உட்புறம் போடப்பட்ட வஸ்துக்கள் ப்ரகாசமாய், தோண்டி எடுத்ததுபோல் தேவர்களால் நிர்மாணம் செய்யப்பட்டு, பக்கத்து தேசங்களை கௌரவத்துடன் ஆத்மாவுக்குள் இது சிதம்பரம்தான் உள்ளது எனவும் காண்பித்தனர்.

ஸூதர்:— அத் தில்லைவனத்தில் ஐந்து கூப்பிடு தூரம்வரை எல்லை அளவு செய்யப்பட்டது. அவ்விடம் யார், எவ்வளவு தானம் கொடுக்கிறார்களோ? யஜ்ஞம் செய்கிறார்களோ? எல்லாம் க்ஷேம குணமாக ஆகும். அதுமுதல் தில்லை வனமான சிதம்பரத்தில் பரமேச்வரன் நர்த்தனம் செய்கிறார். எப்பொழுதும் மனுஷ்யர்களுக்கு தயை உடைய கடைக்கண்களினால், வ்யாக்ரபாதர், பதஞ்ஜலி, தேவர், ரிஷி இவர்களால் ஸ்தோத்தரிக்கப்படும் இடத்தில், தேவியுடன் ஆனந்தத் தாண்டவம் செய்கிறார். தேவேசரிடம் பரமானந்த தாண்டவம் இவ்விதம் காணப்படுகிறது. அந்த உத்தமோத்தம தாமரைபோன்ற காலில் உள்ள, பாதச்சிலம்பு சப்தத்தைக் கேட்டு ம்ருகம், பக்ஷி எல்லாம் அந்த க்ஷணமே வேகமாக வந்து; ஆஹாரம் நினைக்காமல், ஒன்றுக்கொன்று சண்டையின்றி க்ரமமாக, ஜ்ஞானமடைந்து ஸ்தான வைபவத்தால் அம்பிகா ரமணனது தாமரை போன்ற பாதத்தை நினைத்து, பார்ப்பதில் அநேக நினைவு உடைய பதஞ்ஜலிக்கும், கடுமையான தபஸால் அங்கு எது வெகுகாலம் உண்டாயிற்றோ? அது வேகமாய் எண்ணிய பலமடைந்தது என, பசு, பக்ஷி, கண ச்ரேஷ்டர் எல்லோரும் இக்கார்யத்தைப் பார்த்தனர். பின்பு கோபமடைந்து நந்திகேசரே! சைலாதரே! சங்கரப்ரியரே! அனுக்ரஹம் செய்யவேணும்! ப்ரபோ! தெரிவிக்கவேண்டியது முக்யமாக இருக்கிறது. என கணங்கள் கேட்டதும்; அதைக்கேட்டு நாதனது நர்த்தனம் ஸ்வர்க்க வாஸிக்குக்கூட கிடைக்கமுடியாதது, எங்களுக்கு நாராயணனால்தான் பார்க்கப்பட்டது. கடுமையான தபஸ் செய்து இவ்வீசனின் தாண்டவம் ஸர்வ ஜனங்களுக்கும் இப்பொழுது கிடைத்தது. குறைவின்றி தினமும் பசு முதலியன காணத் தகுந்ததாக ஆயிற்று. இவ்விதம் பரமேச்வர காரணமாக முனிக்கும் தபஸால் அடையப்பட்டது. அத்துராத்மாக்கள் கணத்ரோஹிகள், எங்கள் கட்டுப்பாடு இன்றி இந்த்ரிய மடக்காதவர்களும், அறிகிறார்கள். தண்டிக்கத் தகுந்தவர்கள் எனக் கோபமடைந்தும் தெரிவித்தனர்.

புன்சிரிப்பு முகமுடைய கணேச்வரர்களைப் பார்த்து, நந்தி பதில் சொன்னார். உங்களுக்கு இதுவரை செய்யப்படாத அத்புதம் மங்கள உருவமாகச் சொல்லப்போகிறேன். கேளுங்கள்! வ்யாக்ரபாத, பதஞ்சலிகளுக்கு எந்த தபஸினால் நான் செய்வித்தேனோ? அக்காரணத்தால் ஸ்வாமி தனது ஆத்மா ஸம்பந்தமாக யதேஷ்டம் சேர்க்கவே மனதில் எண்ணி அத்தபஸ்விகளுக்கும் ஈச்வரன் இவ்விதம் அனுக்ரஹித்தார். உலக அனுக்ரஹத்தை முன்னிட்டும் அவர் இஷ்டமாக அதைப்

பூர்த்தி செய்தார். ஆகையால் ப்ரம்ஹாதி தேவர்கள், பிசாசு, மனுஷ்யர், ப்ராம்ஹணர், சண்டாளர், பக்ஷி, பசு, மிருகம், எல்லோரும் சந்த்ர சூடனது தாண்டவத்தை எப்பொழுதும் பார்க்கட்டும்! எல்லோர்க்கும் தர்சன மார்க்கத்தினுல் பாப கூட்டங்கள் விடப்படும்! ஈச்வர ப்ரஸாதத்திற்கு ஸர்வ கணங்களும் இடைஞ்சல் செய்யவேண்டாம், என கணக்கூட்டங்களை அனுக்ரஹிப்பதுபோல் சொன்னுர், ப்ரம்ஹா, விஷ்ணு, முதலிய தேவர்களாலும்கூட தாண்டமுடியாத சாஸனத்தில் எப்பொழுது கணங்கள் முகங்களில் ஈச்வரபக்தியால் ஸந்தோஷ மடையவில்லையோ? அப்பொழுது நந்தி மறுபடியும் நீங்கள் மாறுதலாக எதுவும் செய்யக்கூடாது! என பதில் சொன்னுர். அப்படியிருந்தும்; தில்லைவனத்தில் ஈச்வரன் தடையுடன் நர்த்தனம் செய்வது யாதெனில்; அதனுல் நீங்கள் ராஜோபசாரத்தை முன்னிட்டே காப்பாற்றுதல் நடத்தவேணும்! எதினுல் அமரத்வம் அடையப்பட்டதோ? அதினுல் அம்ருதமும் மறைதலாக உள்ளது என இவ்விதம் நந்தீ; கணுதிபர்களை பார்த்துச் சொல்லி; சங்கரனது ஸர்வகணங்களையும், நன்கு கீர்த்தி அடைய ஆஜ்ஞாபித்தார். பிறகு நந்தியின் வார்த்தையைக்கேட்ட ஸர்வ கணச்ரேஷ்டர்களும், புவனேச்வரனின் ப்ரதான தத்வத்தை மறுபடியும் சொல்லினர் பரமேச்வரன் இவ்விடம் ஸர்வஜந்துக்களுக்கும் தாண்டவத்தைக் காண்பிப்பாராகில்; ஸ்வதந்த்ரரான பரமசிவனை அடையும் கார்யத்தில் யார் தடை செய்யமுடியும்? அதுவரை ஹேமஸபை மத்தியில் நீர் இருக்கச் செய்கிறீர். யார் காப்பது? எவ்வளவு எல்லை? எவ்வளவு காலம்? என்றனர். அவர்களது வார்த்தையைக்கேட்டு; தானுகவே காலங்களை நிர்ணயிப்பதில் ச்ரேஷ்டரான நந்தி அவர்களுக்கு காப்பாற்றுதலே ஸபைக்கு முக்யம் என நான்கு புறமும் அந்தரங்கமாக ஆஜ்ஞாபித்தார்.

அதன் நடு கக்ஷியைக் காக்க பூதங்களையும், அடுத்த கக்ஷிக்கு பிசாசங்களையும், அதன் பக்கத்துக் கக்ஷிகளுக்கு காளி முதலிய அதன கணங்களையும், பைரவர் முதலியவர்களையும், காக்கக்காலனையும் கல்பித்தார். அவ்விடத்தில் காலை, மத்யானம், ஸ்வர்க்க வாஸிகளுக்கும், ஸித்தர், கந்தர்வர், யக்ஷர், இவர்களையும் மாலை, இரவு என விபாகம் செய்து, நான்கு விதமாகப் பிரித்து ஈச்வரனுக்கு சேவை செய்யச் சொல்லி மனுஷ்யர்களுக்கும், அதுபோலவே ஸர்வகாலமும் ஸேவிக்க வழிகளையும், செய்து பின்பு இரவில் மேற்குப் பாகத்தையும், கொடுத்தார். தனிமையான விளையாட்டிற்கு ஸமயம் ஈச்வர முகத்தினின்று எது அம்ருததாரையாய் அடைந்ததோ? அது ப்ரம்ஹா,

விஷ்ணு, இந்திரன், தேவர், வ்யாக்ரபாதர், முதலிய எல்லோர்க்கும் ஸந்தோஷமடைந்த மனத்துடன் கொடுக்கப்பட்டது. மஹா பாக்யசாலி யான பதஞ்சலியே! உமது சேர்க்கை வசத்தால் நாங்கள் பரமானந்த தாண்டவத்தைப் பார்க்கிறோம் என இவ்விதம் அவர்கள் ப்ரீதியடைந்த மனதுடன் அடிக்கடி போற்றிப் பேசலாயினர். அவர்கள் எப்பொழுதும் அப்பரிசுத்த இடத்தில் பரவஸ்துவை நன்கு நமஸ்கரித்தனர்.

பிறகு தில்லைவனத்தில் இவ்விதம் எல்லோரும் தாண்டவத்தைக் காண ஆசை அடைந்து, ஆச்ரமங்களைச் செய்துகொண்டு, அவ்விடம் லிங்கப்ரதிஷ்டையும் செய்து, விதிப்ரகாரம் பூஜை செய்துவந்தனர்.

அவர்கள் நல்ல வாஸனையுடைய புஷ்பங்களால் மூன்று காலமும் அர்ச்சனை செய்கிறவர்களாய், இந்த்ரிய நிக்ரஹம் செய்து, ஆனந்தத் தாண்டவ அம்ருதத்தை அடிக்கடி பானம் செய்கிறவர்களாகி வஸிக்கலாயினர்.

இந்த பரமேச்வரனது ஆனந்த நர்த்தனமுடைய முதல் அவதார அத்யாயத்தை எவன் படிக்கிறானோ? மூன்று ஸந்த்யைகளிலும் படிக்கச் செய்கிறானோ? அவனுக்குப் பாசங்கள் நிச்சயமாக அறுபடுகிறது. எவன் நித்யம் கேட்கிறானோ? அவனும் இப்பலனையே அடைகிறான். அதில் ஸந்தேஹமில்லை.

பதினெட்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## பத்தொன்பதாம் அத்தியாயம்.

இச்சமயத்தில் ப்ரம்ஹா; யஜ்ஞம் செய்ய அந்தர்வேதி என்ற கங்கைக் கரையை அடைந்து, அத்தேசத்தில் பெரிய கட்டடத்தை விதிப்ரகாரம் தன் கணங்களுடன் கட்டினார். அவ்விடத்தில் சிதம்பர மாக புண்ணிய தினத்தில் தீக்ஷை பெற்று, இந்த்ரன் முதலிய தேவர் களுக்கு ஹவிர்ப்பாகம் கொடுக்க உத்தேசித்து, ஹோமம் செய்கையில்; ப்ரம்ஹாவினால் தேவர்கள் கூப்பிடப்பட்டும், அந்த யஜ்ஞத்திற்கு ஹவிர்பாகம் அடைய ஆதரவுடன் அங்கு வரவில்லை. உடனே என்ன காரணம்? என சீக்கிரமாய் ப்ரம்ஹா விசாரித்து, ஸர்வ தேவர்களும் தில்வாரண்யத்தில் இருக்கின்றனர் என ஜ்ஞான த்ருஷ்டியால் பார்த்து

தேவதைகளை ஹவிர்பாகம் வாங்க, அழைத்துவரவேணும் என்றதும், பிறகு ப்ரம்ஹஜ்ஞானமடைந்த நாரதரை, அவர்களை அழைத்துவர அவ் வனத்திற்கு ஆஜ்ஞாபித்தார். அவரும் வேகமாக நடேச்வரரை வந்து நமஸ்கரித்து, அந்த தேவர் ஸமீபத்தில் பரமானந்தமுடைய தேவர்களை யும் பார்த்து தன் விஷயத்தையும் அவர்களிடம் சொன்னார்.

உங்கள் வருகைக்காகவே என்னை ப்ரம்ஹா அனுப்பினார். அவ் விடம் வாருங்கள்! என அடிக்கடி சொன்னார். நாரதரது வார்த்தை யைக் கேட்ட ஸர்வ தேவர்களும் ஆச்சர்யமடைந்து, புன்சிரிப்புடைய பக்தி பாவனையுடன் நிருத்தேசரைப் பார்த்து சொல்லினர். ஆனந்த தாண்டவ அம்ருதத்தை கழுத்துவரை சாப்பிட்ட எங்களுக்கு ஸ்வர்க் கமோ? ஹவிர்பாகமோ? மோக்ஷமோ? எதற்கு? என நாரதரைக் கேட்ட னர். இவ்விதம் நாரதரும் தேவர்களது வார்த்தையைக் கேட்டு பதில் சொல்ல முடியாமல் அங்கிருந்து இதை ப்ரம்ஹதேவரிடம்போய் சொன்னார். நீங்கள் மேற்கொண்டு கவனியுங்கள் எனவும் தெரிவித்தார்.

நாரதரது வார்த்தையை ப்ரம்ஹன் கேட்டு நானே அவர்களை அழைத்துவருகிறேன் என வேகமாய் தில்லைவனம் அடைந்தார். தீக்ஷா விதியுடன் ப்ரம்ஹா வேகமாக வருவதை தூரத்திலேயே பார்த்த தேவர்கள்; கௌரவமான ப்ரீதியுடன் எதிர்கொண்டு அழைத்தனர். பிறகு சிவகங்கை எனப் பெயரிய தீர்த்தத்தில் ப்ரம்ஹாவை ஸ்னானம் செய்யச்செய்து ஸபாபதியான தேவரையும் நமஸ்கரிக்கச் செய்தனர். பிறகு மூலஸ்தான வாஸியான ஸபேசரை நமஸ்கரித்து வ்யாக்ரபாத முனியுடன் அவரது ஆச்ரமமடைந்தார். அவ்விடம் அவர் பக்கத்தில் இந்த்ராதி தேவர்களைப் பார்த்து ப்ரம்ஹா அஞ்சலி செய்த முகத்துடன் மதுரமான வார்த்தையையும் சொன்னார். இப்பொழுது நான் இந்த் ராதி தேவர்களோடு யஜ்ஞம் செய்து; வஷட்கார உருவமுடைய ஹவிஸ்ஸை அக்னியில் சேர்த்து, பின்பு நீங்கள் அதை சாப்பிடவேணும் என்றார். ப்ரம்ஹனது இவ்வார்த்தையை தேவர்கள் கேட்டு கேவலம் வணங்குதலையே பதிலாகத் தெரிவித்து; அங்கேயே இருந்தனர். இந்த ஸ்திதியை தேவர்கள் அடைந்ததாக ப்ரம்ஹதேவர் கேட்டு பாவமறிந்து ஐராவத வாகனத்தை அறியாதவர்போல் சொன்னார்.

தேவர்களின் இந்த ஸ்திதியை நாரதரிடமிருந்து நான் கேட்டேன் அவ்விதமே என்னாலும் பார்க்கப்பட்டது. நீ இவ்விஷயத்தில் என்ன

செய்யப்போகிறாய்? என்றதும்; ஐராவதம் பயந்து மலையைப் பிளக்கும்படி ப்ரம்ஹனிடம் சொல்லியது. ப்ரம்ஹனே! ப்ரஸன்னமாகவேணும் எங்களில் எவரும் ஒரு அபராதமும் செய்யவில்லை. தத்வார்த்தம் சொல்லுகிறேன். கேளும்! ஆழமான ஆனந்தத்தாண்டவ ஸமுத்ரத்தில் மூழ்கிய எங்களுக்கு அதிகாரத்தில், ஆஹாரத்தில், விளையாட்டில் ஒன்றிலும் மனம் செல்லவில்லை. இது விஷயத்தில் கூப்பிட வந்த எங்களை பொருக்கவேணும்.. தேவர்கள் வரவில்லையே; என்பதிற்காக உங்களுக்கு வேறு எது ஆஜ்ஞை செய்ய இஷ்டமோ? அதை இப்பொழுது செய்கிறோம் என்ற வினயமுள்ள இவ்வார்த்தையை பதஞ்ஜலி, வ்யாக்ர பாதர்கள் கேட்டு ஐராவதம் சொல்லியது எதுவோ? அதுவே உண்மை என்றும் பதில் சொல்லினர்.

அப்படி இருந்தும் தாண்டவேசன் ஸேவை செய்து, அவர் கார்யத்தில் ஸேவிக்க தன் தனது அம்சத்துடன் யஜ்ஞத்தில் தன் தன் ஹவிர் பாகங்களை, சாப்பிட மூவாயிரவர்களும் கேள்விப்படத்தக்க தேஜஸுடையவர்கள். உன் ஸதஸை அடைந்து அலங்கரிக்கட்டும்! என்று வ்யாக்ரபாதர் சொல்ல அவ்வார்த்தையை இந்த்ராதி தேவர்களும் கேட்டு, ஸந்தோஷத்துடன் அதை எற்று, யஜ்ஞத்தில் இருக்க ப்ரம்ஹாவினுலும் அநுமானம் செய்யப்பட்டது. பிறகு வ்யாக்ரபாதரை நேத்ரங்களால் அனுக்ரஹித்து, தேவர்கள், முனிகள், இவர்களுடன் யஜ்ஞசாலையை ப்ரம்ஹா அடைந்தார்.

பத்தொன்பதாம் அத்யாயம் முற்றிற்று.

---

## இருபதாம் அத்யாயம்.

ஸூதர்:— இச்சமயத்தில் மஹாயசஸ் உடைய ஸிம்ஹவர்ம அரசன், பெரிய தபஸ் செய்ய அத்தில்லைவனத்தை அடைந்தான்.

ரிஷிகள்:— ஸிம்ஹவர்மன் என்ற கேள்விப்பட தகுந்த மஹா பாக்யசாலி அரசன். அவன் யார்? எதற்காக தபஸ் செய்தான்? இவ்விடம் எதற்காக வந்தான்? அதை எங்களுக்கு விஸ்தாரமாய் சொல்லும்! என்றதும்;

இவ்வார்த்தையைக் கேட்டு, பௌராணிக உத்தமரான ஸூதர், ஸிம்ஹவர்மனது கதையை உள்ளதுபோல்; சொல்ல ஆரம்பித்தார்,

ஸூதர்:— முன்பு தேவர், அஸுரர் இவர்களால் ஸேவிக்கும் பகவான் நான்கு மாயை செய்து, ஸம்ஹாரமும் செய்தார். அப்பொழுது இந்த ஜகத் பயங்கரமாய் அறிய முடியா லக்ஷணத்துடன் நிர்ணயிக்க முடியாமல் இருந்தது. முழுமையும் தூங்கியதுபோல் இருந்தது. அவ்விடம் பெரியதோர் ஸம்ஹார ஸமயத்தில் ருத்ரரூப மடைந்து, ஸாக்ஷாத் உக்ரதாண்டவம் ஈசன் செய்தார். மறுபடியும் பகவான் இச்சா சக்தி ப்ரபாவத்தால் ஸம்ஹாரம் முடிவுபெறும் ஸமயம் தனது சக்திகளிடம் ஸ்ருஷ்டியை ஸ்தாபித்து, அவளிடம் ஸதவில் மஹாமாயையை ஆச்சர்யமாக ப்ரகாசிக்கச் செய்து, நாதம் முதலிய ஐந்து தத்வங்களையும் ஸ்ருஷ்டி செய்தார்.

பிறகு இந்த சுத்தமார்க்கமுள்ள நான்கு வார்த்தையையும் ஸ்ருஷ்டித்து, நான்கு மாதாக்களின் வர்ணங்களையும் உண்டுபண்ணி, மூன்று மாத்ரையையும் ஸ்ருஷ்டித்தார்.

ஸ்ருஷ்டியினின்று தனது ப்ரணவத்தையும், லோகமாதாவான வ்யாஹ்ருதியான காயத்ரியையும், ஸர்வ வேதங்களையும், இந்த்ரியம் அடக்க ஸர்வ வித்யையும், 7 கோடி மனுக்களையும், உப மந்த்ரங்களையும், சேர்த்து ஸ்ருஷ்டித்தார். பின்பு மாயையின் தத்வங்களையும், காலம் முதல் அண்ட பிண்ட சராசரமுள்ள பூமி முழுமையும், ஸ்ருஷ்டித்தார். அவ்விடமுள்ள ஆத்மா ஸம்பந்த தன் புண்ய பாகங்களை பூமியில் காலக்ரமமாக மாற்றி, அடிக்கடி அனுபவிக்க ப்ரம்ஹா, விஷ்ணு முதலியவர்களையும் உண்டுபண்ணி, தன் சரீரத்தில் குறைவில்லா தேஜஸுடன் ஸ்ருஷ்டி பரிபாலனங்களையும், பர்வதம், ஸமுத்ரம் போல் செய்தவராக ஸ்தாபித்து, ஸ்வர்க்கத்தையும், மஹத்தான பெரிய மந்த்ரங்களையும், யாகத்திற்காகவே செய்தேன என்றார்.

அவைகளின் அத்யயனத்திற்காக ப்ராம்ஹணர்களையும், ஸ்ருஷ்டித்து யாகங்கள் வித்திக்கப் பசுக்களையும் ஸ்ருஷ்டிக்கப்பட்டன என்றார். அதில் உண்டான ஹவிஸ் ப்ராணன்கள், மந்த்ரங்களுடன் என்ப்ரீதிக்காகவே மூர்த்தியை மனுஷ்யர்கள் அக்னியில் ஆஹுதியாக செய்கிறார்கள். அவர்கள் அடையமுடியாத ஸ்வர்க்கத்தையும் அடைகின்றனர், அதில் ஸந்தேகமே இல்லை. இவ்விஷயத்தில் எனது சிவாகமங்களில் எவர்கள் ஆசையுடையவர்களோ? அவர்களுக்கு சர்யை, க்ரியை, யோகம், ஜ்ஞானம், இவை சொல்லப்பட்டது. அவர்களுக்கு ஸாரூப்யமுக்தி அதிகமாக ஸித்திக்கிறது, அதில் சந்தேஹ

மில்லை. எந்த ப்ராம்ஹணர்கள் வைதிக பாகங்களை நிஷ்காமனையாய் செய்கிறார்களோ? அவர்கள் மூன்றுவித முக்திகளையும் அடைகின்றனர். அவ்விடத்தில் ஸந்தேஹமில்லை. எவர்கள் வேதாந்தங்களில் நித்யர்களாகி வர்ணிக்கிறார்களோ? அவர்கள் கல்மஷமில்லா ஜ்ஞானிகள். எவர்கள் எனது வேதாந்தங்களால் என்னைப் பார்க்கிறார்களோ? அவர்கள் ஜ்ஞான பாகத்தில் வ்யவஸ்தை உடையவர்கள். அடைய முடியாத ஸாயுஜ்யம் என இநவநம் அறிகிறார்கள். வேதாகமங்களில் ப்ரவித்தி அடைந்தவர்கள், கர்மப்ரம்ஹர்களாகி இருமார்க்கங்களில் எவர்கள் இநக்கிறார்களோ? அவர்கள் பாபிகளாக ஆகிறார்கள் அவர்கள் சாஸ்திரங்களினால் ஏவப்பட்டவர்களாகி நான்குவித தண்டனை அடைவர். சாஸ்த்ரார்தம் க்ரஹிக்கமுடியாமல் அதிகாரியும் ஆகிறார்,, ளில்லை. பிறகு இந்த தர்மங்களை ஸ்தாபக்கவும், ப்ரவ்ருத்திக்கவும்க நிவ்ருத்திக்கவும், இதினின்று அஸத்துகள் அதிகாரி இல்லை. உசித மில்லாத மார்க்கங்களில் ப்ரவ்ருத்திக்க, அவ்விதம் சாஸனம் செய்ய ப்ரஜாபரிபாலனத்தில் கண்ணுற்ற அரசன் தான் இதைச்செய்யும் யோக்யமுடையவன். துராத்மாக்களுக்கு அரசன் அதிகாரம் செய்கிறான். இதற்கு காலமே காரணம் என பகவான் மனதில் நிச்சயித்து அவனைப் பரிபாலனம் செய்ய ஸர்வ லோகாதி ராஜ்யத்திற்கு கொஞ்சம் சக்தியையும் நிரூபித்தார். பிறகு தர்மஜ்ஞானர்களான ஸூர்யகுமாரர்கள் இருவர்களை நிக்ரஹ அநுக்ரஹம் செய்ய தர்ம ஸ்தாபன தத்பரர்களாகப் பார்த்து, அவர்களுள் ஒருவருக்கு தண்டத்தை ஜகத் ப்ரபு கொடுத்தார். மூன்று உலகிற்கும் ஸமமாக தெற்கு திக்கிற்கும் அதிபதியாகச் செய்தார். ராஜர்களுக்கு உடைய காளை மாடையும், தங்க க்ரீடமும், கொடுத்து ஆபரணங்களால் அலங்கரித்து, தேவர் கையில் கொடுத்ததும்; அம் மஹா பாக்யசாலியை தேவர்கள் ஸூர்யனது தபஸ் பலன் தான்; என்றதும் அவன் அடைந்து அடிக்கடி முதன்மையாக மேரு பர்வதம் தாங்குகிறதுபோல் தாங்கினான். அம்மஹேந்த்ர ஸபா மத்தியில் ஸிம்ஹாஸனத்தில் இருந்து, அவர் ஏழு ஸமுத்ரங்களையும் சூழ்ந்த ஸகல பூமியையும், பரிபாலனம் இன்றும் செய்கிறார். அது முதற்கொண்டு அவருக்கு ஸமான பராக்ரமமுடைய நல்லவர்கள் ஸத், அஸத் என்ற மாறுதலில் வ்யக்தியால் ஸமர்த்தமடைந்து, இப்பூமியை பரிபாலனம் செய்கிறார்கள். அவர்களில் ஐந்தாவதாக ஸ்ரீமான் லேகேந்து என்ற பெயருடைய அரசன் கங்கா ப்ரவாஹ வரிசைபோல் யசஸ் உடையவனாகி இருந்துவந்தான், அவன் சித்தத்திற்கு உகந்தாற்போல் நல் ஒழுக்கமுடைய, இருபட்ட மஹிஷிகள் இருந்தனர். அவர்களுள்

மூத்தவளுக்கு ஸிம்ஹ உருவத்தை தாங்கும் ஒரு குழந்தை உண்டா யிற்று. அடுத்தவளுக்குப் புண்ய லக்ஷணம் உடைய ஸுமதி, தேவ வர்மா என்ற இரு புத்ரர்கள் பிறந்தனர். அவர்கள் பிதா, தபஸ் செய்ய எண்ணி மூத்த பிள்ளைக்கு பட்டம் கட்ட இச்சித்தார்.

அவர்களுள் பெரியபிள்ளை; கேள்விப்படத் தகுந்த ஸிம்ஹவர்மன், தகப்பனாரை நமஸ்கரித்து அஞ்சலி செய்த சிரஸுடன், வணக்கமாகச் சொன்னான். உமக்கு உயர்ந்த சுச்ரூஷை செய்யும் அழகுள்ள புத்ரனுக்கு உம் ராஜ்யலக்ஷ்மியைக் கொடும்! நானும் தபோவனம் அடைந்து, தபஸ் செய்ய உத்ஸாகமுடையவனாயிருக்கிறேன். இந்த குருபிக்கு வனத்தில் அதிகாரமே ஒழிய, பூமியில் அதிகாரம் இல்லை. இக்குழந்தைகள் ராஜ்ய ரக்ஷைக்குத் தன்மை உள்ளவர்கள். என்னை தபஸிற்கு ஆஜ்ஞைசெய்யும்! என மறுபடியும் நமஸ்கரித்துச்சொன்னான்.

புத்திசாலியான தனது பிள்ளையின் மதுர வார்த்தையைக்கேட்டு துக்கமடைந்து, நான் கிழட்டுத் தனத்தால் கஷ்டப்படுகிறேன். உனது தம்பிகளோ சிறிய பையன்கள். இன்று தபஸிற்குத் தபோவனம் நீ அடைவாயானால்; என் ராஜ்யத்தை மாம்ஸத்திற்கு ஆசைப்படுவது போல்; மற்றவர் பிடுங்கிக்கொள்வர். ஆகையால் பரம்பரையாக வந்த இந்த நான்குவித சேனையையும் அடைந்து, இந்த ராஜ்யத்தை நீ பரி பாலனம் செய்! இதுவே உனக்கு முக்ய தபஸ்.

அப்படி உள்ள பிதாவின் வாக்யத்தைக் கேட்டு, மறுபடி தபஸ் செய்ய நிச்சயித்துச் சொன்னான். அப்பா! உலக சக்ரம் தாங்கும் ஸாமர்த்யமுடைய உனக்கு எது இஷ்டமோ? அது எனக்கும் தபஸ்தான் முக்யம். ஆனந்தம், ஸுகம், ஆயுள்; இவைகளை இநவிதத்திலும் ஸதா கொடுக்க வஸதி உள்ளது. நான் க்ஷணமும் ராஜ்யமடைய இச்சிக்க வில்லை. ஆகையால் ப்ரீதியுடன் எனக்கு இவ்விடம் அவ்வாஜ்ஞையைக் கொடும்!

இவ்விதம் சொல்லும் ராஜ்ய ஆசையற்ற சித்தமடைந்து, புத்ர னுடன் கேவலம் சிந்தனையில் வ்யாகூலமடைந்து, ஒத்துக்கொண்டான். அவன் முக்யமாக பரமேச்வரஸ்மரணை அடைந்து, அதிலேயே இருப்பவ னாகி, தான் ஒருவனாய், வெளிக்கிளம்பி புறப்பட்டான்.

கங்கை, ஸமுத்ரம், இவைகளில் ஸ்நானம் செய்து, இந்த தீரன் பக்கத்திலுள்ள வங்கதேசம், மறுநாள் யாவக ராஜ்யம். அதைத் தாண்டி மறுபடி அழகிய விஸ்தாரமுடைய ஓட்ரதேசம், ப்ரவேசித்து அதன் நடுவிலுள்ள பீமநாதரை நமஸ்கரித்து, இதர ஸ்தானங்களையும் அடைந்து, அவ்விடமிருந்து நிரம்பிய பூர்ண ஸம்பத் உடைய ஆந்த்ர தேச மடைந்தான்: அவ்விடத்தில் பூமிக்கே நாயகமாக விளங்கும் ஸ்ரீ பர்வதத்தைக் கண்டு நமஸ்கரித்து, அவ்விடத்தில் உள்ள தீர்த்தங்களில் நன்கு இந்த்ரிய நிக்ரஹத்துடன் ஸ்னானம் செய்து, பிறகு ஸர்வ உலகிற்கும் ஈசஞன அழகிய பார்வதியுடன் கூடிய காளஹஸ்தி பர்வதத்தையும் அடைந்து நமஸ்கரித்து; அங்கு விஸ்தாரவனம் செல்லும் வனத்தில். வேடன் ஒருவனைக் கண்டு கூப்பிட்டு உட்காரு! என அவனை அரசன் சொன்னன்.

ராஜா—வேடனே! இக்காட்டில் என்ன! ஆச்சர்ய பர்வதம் இருக்கிறது? அதை முழுமையும் சொல்! என்றான்.

இவ்விதம் அரசனல் கேட்கப்பட்டு வணக்கத்துடன், வேடன் அழகிய குளிர்ந்த மறைந்த நிழலுடைய மர அடியில் உட்கார்ந்து த்ருட புத்தியுடன், பாணங்களைப் பக்கத்தில் வைத்து, சரீரத்தில் கை வைத்து, வழி நடையினல் கஷ்டப்படும் இளைத்த சரீரமடைந்த அரசனைப் பார்த்துப் பதில் சொன்னன்.

இருபதாம் அத்யாயம் முற்றிற்று.

---

## இருபத்தோராம் அத்யாயம்.

வேடன்—மஹா பாக்யசாலியே! நான் இந்த ஸத்வ கூட்டமுடைய காட்டில் நாய்களுடன் மான்களைத் தேடுகிறவனகி, இம் மார்க்கத்தில் ஸஞ்சரிக்கிறேன். இவ்விடம் என்னல் உம்மைப் பார்க்கப் பட்டது. உனது இச்சைக்குச் சொல்லுகிறேன். இச்சையினல் கேள்! ஒரு யுவா, நாயுடன் அழகிய சரீரமடைந்து இவ்விடம் ஸஞ்சரிக்கிறன். இவ்விஸ்தீர்ண வனந்தரத்தில் ஓர் குளம் இருக்கிறது. அந்த ஜலம் சாப்பிட்ட மாத்ரத்திலேயே கிழட்டுத் தன்மை எவனுக்கும் விடுபடுகிறது. மற்றும் கஷ்டத்தை அறுக்கும் பல தீர்த்தங்கள் இங்கு உள்ளது.

அழகுடைய தாமரை கல்ஹாரம் முதலிய புஷ்பங்கள் நிறைந்த அநேக தீர்த்தங்களும் உள்ளன. இவ்வனுக்தாத்தில் மிகவும் விஸ்தீர்ண மார்க்கம் ஒன்றுள்ளது. திக்கு தெரியாத அது எல்லோருக்கும் ப்ராந்தி அடையச் செய்யும்! அதுவே மற்ருேர் மார்க்கத்தில் ஒரு விஸ்தீர்ண மரமாய் காணும்! அது அசையாமல் இருக்கிறது. அதன் நிழல் கஷ்டமான ச்ரமங்களைப் போக்கக் கூடியது. ஒரு மார்க்கம் ஜன ஸஞ்சாரமற்றுக் காண்கிறது. மடுவின் சப்தம்போல் கடுமையான சப்தம் அங்கு இரவு பகல் அடிக்கிறது.

ஒத்தைஅடிப்பாதையில் பெரியதோர் கிணறு இருக்கிறது. தனது நிழலை இவ்விடம் பார்த்தால் ஜனங்கள் க்ஷணிக காலத்தில் இறக்கின்றனர். இவ்விடத்தில் உள்ள நதிக்கரையில் மனோஹரமான ஜலம் நித்யம் ப்ரவாஹமாக ஓடுகிறது. நெருங்கிய நிழல் உள்ள ஸதா பலமுடைய பெரிய மாமரம் ஒன்று இருக்கிறது.

அதனடியில் லிங்கம் ஒன்று எப்பொழுதும் காணப்படுகிறது. கிணறு உருவமுள்ள அதனடியில் அசைதலுடன் தெரியவருகிறது அத்துவாரத்தினின்று வெளிக்கிளம்பும் ஓர் இடம் காண்கிறது. புதிய நீருண்ட மேகம்போல் ஒத்த, தாமரை போன்ற ஒரு ஸ்திரீ ஸந்தோஷமாக இரு காலங்களிலும் லிங்கத்தை அர்ச்சனை செய்கிருள்.

சிறுவன் ஒருவன் குதிரையில் ஏறி அங்கு ஆயுதம் தரித்த கையுடன் அக்குளமடைகிருன். நித்யம் வெளிக்கிளம்புகிருன். உள் செல்கிருன். ஆனல் காணப்படவில்லை.

இப்பெரிய வனத்தில் இது முதலியன என்னல் அடிக்கடி பார்க்கப் படுகிறது. மற்றும் நூற்றுக்கணக்கான ஆச்சர்யங்கள் காணமுடியாததும், எண்ண முடியாததும், உள்ளது என வேடன் சொல்லிய வார்த்தையைக் கேட்டு அரசன், அந்த லிங்கத்தைக்காண ஆசை உடையவனுகி, மறு படியும் வேடனைக் கேட்டான்.

இவ்வனத்தில் நீர் சொல்லிய லிங்கம் மாமர நிழலில் அடியில் உள்ளது எதுவோ? அதை நீ எனக்குக் காண்பி! எனக்குச் செய்த உபகாரமாகுமெனச் சொல்லியதும்; அவ்வரசனேடு மாம்ஸ ஆசையுடன் ஸரி எனப் பயமின்றி, கையில் வில் பாணம் அடைந்தவனுகி; பொர்தின்

பக்கத்தில் உள்ள வ்ருக்ஷ மார்க்கமாய் அடைந்து, அரசனிடம் மஹா ப்ரகாசமுடைய அந்த லிங்கத்தை காண்பித்தான்.

அவ்வரசனும் மாமர நிழலில் லிங்கத்தைக் கண்டு ப்ரஸன்ன மனதுடன் ஜகத்திற்கு ஆனந்த மூலம் உள்ள அதை அடைந்தான். பிறகு பரமபக்தியால் இங்கு ஜகத் குருவை நமஸ்கரித்து, அதன் சமீபத்தில் ப்ரவாஹமுடைய கம்பாஸரஸில் தினஸரி ஸ்னானம் செய்து எப்பொழுதும் பூஜை செய்துகொண்டு அவரது அனுக்ரஹ லாபத்திற்காகவே அரசன் வெகு காலம் அவ்விடம் வஸித்துவந்தான். அந்த ஸேவாரஸத்தை ராஜன் ஒரு நாளும் விடவே இல்லை. சிறிய ப்ராணனுள்ள வரையில் தீர்த்தமே சாப்பிட்டு, ப்ராணனுடன் ப்ரீதி யடைந்த மனதுடன், வஸித்து வந்தான்.

ஒரு நாள் வில்லைத் தரித்து தனது ஸமீபத்தில் இருக்கும் வேடனை புருவ நெரிச்சலுடன் கூப்பிட்டு அரசன் சொன்னான்.

வேடனே! இதினின்று தெற்கு ஸமுத்ரம் வரை சென்று ஸ்வேச்சையாக உண்டுபண்ணும் அந்தந்த பூமியில் இருப்பதைப்பாரும்! எனக்கு மேற்கு ஸமுத்ரக் கரைசெல்ல, அதிக ஆசை இருக்கிறது. ஆகையால் கஷ்டமின்றி அடையக் கூடிய அழகிய மார்க்கத்தைக் காண்பி! இதுதான் எனக்குச் செய்யவேண்டிய முக்ய காரியம். நான் கூடவே செல்ல பொருமை உடையவன் என்றதும்; "ஸரி" என வேடனும் ராஜன் வார்த்தையைக் கேட்டுப் பதில் சொன்னான். ராஜனே! ஒரு அடி கூட இனி இக்காட்டில் என்னால் செல்ல முடியாது. இதின் நடுபாகம் திக் ஒன்றும் காணப்படுகிறதில்லை. இவ்விடம் எவரையும் ஒரு ஸமயமும் நான் பார்த்ததில்லை. ஒரு அளவும் தெரிய வில்லை. இருந்தபோதிலும் முன்பு நானே சென்று காட்டுவழியைப் பார்த்து வருகிறேன்.

அதுவரை நீர் இங்கு இரும்! நானும் போய் வருகிறேன் எனச் சொல்லி அவனை வணங்கி, வில், பாணம், உடையவனுகி, வனமார்க்கம் விசாரிக்கப் பயமின்றி, வெளியேறினன். ஸமுத்ரக்கரை அடைந்து லிந்து பர்வத காடு இவைகளைத் தாண்டி, வெகுகாலம் சென்று வேடன் திரும்பினன். தனது வருகையை எதிர்நோக்கி ஒருவனாக இருக்கும் ராஜனைப்பார்த்து நமஸ்கரித்து, அவ்வனத்தில் பார்த்ததை அவன் அப்படியே சொன்னன். நான் காட்டில் அதிக கஷ்டத்துடன்

வெகுதூரம் சென்றேன். அவ்விடம் ஒன்றும் காணவில்லை. மார்க்கம் தேடியும் கிடைக்கவில்லை. முடிவு தூரத்திலிருந்து இது பார்க்கப் பட்டது. அதன் கரையில் பெரிய ஸ்ரீமத் "தில்லைவனம்" இருக்கிறது. அதன் மத்தியில் மலர்ந்த தங்கத் தாமரை உடைய பெரிய தீர்த்தம் ஒன்று அழகாய் இருக்கிறது. அதன் தெற்குக் கரையில் அழகிய புலி உருவமுடைய மஹா தேஜஸ்வி ஒருவர் நித்ரை போனவர்போல் எப்பொழுதும் இருக்கிறார். அவ்விடம் நான் கண்டதும் பெரிய பய மடைந்து திரும்பி வந்து விட்டேன். அவ்விடம் உமது ஆஜ்ஞைக்கு உள்ள மார்க்கம் தான்; என்ற வேடனது வார்த்தையை ஸிம்ஹவர்மன் கேட்டு, உடனே க்ஷணிக காலத்திற்குள் ப்ரீதியடைந்த மனதோடு எழுந்து, அவ்விடம் செல்ல முயற்சி அடைந்தவனாய், புலி உருவமுள்ள அவரை நீ எனக்கு சீக்ரமாகக் காண்பி! என வேடனைச் சொல்லி அதை அடைய மாமர நிழலில் உள்ள ஈச்வரனை நமஸ்கரித்து, அவனுடன் கூடவே சென்றான். வேடனும், அங்கே காடுகளைத் தாண்டி, வெகு தூரமுள்ள இடம்வரை, அழைத்துக்கொண்டு சென்றான்.

வரிசையாக அழகிய தில்லைவனத்தைக் கடைசியில் அடைந்தான். அவனும் அத்திவ்ய தில்லைவனத்தில் குள ஸமீபத்தில் தபஸ் செய்யும் கண்ணாடி போன்ற முகமுடையவரைப் பார்த்து, பயம் அடைந்து மன தால் அவர் ஸமீபம் அடையவும் இல்லை. அதே க்ஷணம் திரும்பவும் இல்லை. அவ்விடத்தில் கேவலம் நீர் யார்? என எப்படிக் கேட்பேன்! ஒருக்கால் சாபம் கொடுப்பாரோ என்று பலவிதம் நிச்சயித்து, கேவலம் அசையாமல் இருந்து ஒன்றும் முடியாமல் அவ்விடம் ஆச்சர்யமடைந்து, மனதில் வெகுகாலம் அவரது சாந்த சரீரத்தைப் பார்க்கிறவனாகி, மறுபடி சிந்தாபரனானான். அவருடைய நிலைமையில் இடமின்றி நனைந்த மரஉரி உடையவனாயிருந்தான். இந்த ஈரம் உள்ள புரசம் குச்சி காய்ந்தும், தர்ப்பங்கள் நுனி, ஸமித் எப்படி நலங்களை நனைந்தும் காட்டுமோ? அதுபோல் இருந்தான்.

அடிக்கடி மூடிப்பாராத புஷ்பங்கள்போல் ப்ரகாசமுடைய ஜடா பாரமும், ஜலத்துளிகளையே விடுகிறது. ஆகவே, ஆரம்பித்தபடியே இம்மஹாத்மா என்றைக்கு மௌனம் விடுகிறாரோ? இல்லையோ? என்ன செய்வேன்! என சிந்தையுடன் ஆடிய மனதுடையவனாகி, வெகு காலம் வினயபாவத்துடன் இருக்கையில்; அத்தபோநிதியை நமஸ்கரித்தான். மஹானந்தமய ஆனந்தத்தாண்டவம் உலக விஜ்ஞான தத்பரம், என அவ்

வீசனேயே மஹாயோகி லயம் செய்திருக்கிறார். தாமரை போன்ற காலே உடைய சந்த்ர மௌளியிடம் சிந்தையை செலுத்தி, அடிக்கடி ஆசையால் மூன்று காலமும் விசேஷ மாறுதலுடன், புத்தியால் அறிகிறது போல்; அங்கு காணப்படுகிறார். மூன்று காலமும், விருத்திஅடைந்து, வெகு காலம் வரை நிர்மல மடைந்திருந்தது. ஸூர்ய குலத்தில் உண்டான ஐந்தாவது மநு, ஸ்ரீமான் இப்பூமியைப் பரிபாலிக்கிறான். அந்த மஹாராஜனது புத்ரர்களுள் முதல்வன் ஸிம்ஹவர்மன் என்ற க்யாதி உடையவன் வந்துள்ளான், என அவனேத் தபோநிதி அறிந்து உடனே எதிரில் இருக்கிறவனுய் பயந்து அஞ்சலி செய்த உருவமுடையவனுகிய அவனேப் பார்த்ததும், இப்பொழுது உனக்கு நல்வரவாருக! என்ன தேவை? எனக்கேட்டார்.

இவ்விதம் முனியினுல் கேட்கப்பட்டதும், ஆதரவுடன் ஸிம்ஹவர்மனும், மறுபடி நமஸ்காரம் செய்து, பெரிய ஸந்தோஷத்தையும் அவருக்குத் தெரிவித்தான்.

பின்பு ப்ரகாசமுடைய முனி கையினுல் ராஜனேப் பிடித்து, இவ்விடத்தில் உட்காரு! என ஆஸனத்தில் உட்காரச் செய்து என்ன? ஒருவனுகவே நீ அடையமுடியாத இவ்வனுந்தரத்தில் வந்த காரணம் என்ன? இதை முதலில் சொல்! எனக் கேட்டார்.

இருபத்தோராம் அத்யாயம் முற்றிற்று.

---

## இருபத்திரண்டாம் அத்யாயம்.

ஸிம்ஹவர்மன்:— முனியே! கௌடதேச கௌடநாத அரசனது பிள்ளேகளுள் நான் முதல்வன். எனக்கு விசேஷ மஹிமையுடைய புண்ய லக்ஷணமடைந்த இரு தம்பிகள் உளர். உமது கடாக்ஷத்தினுல் அப்பயங்கர ஸம்ஸாரபந்தம் விட்டு, பரமானந்தம் கொடுக்கும் ஈச பாதாம்புஜமடைய, ஸர்வ மனதினுலும் ராஜ்ய பார துக்கங்களே விட்டு, ஒருவனுகவே தபஸ் செய்ய நான் வெளிக்கிளம்பினேன். என்ற ஸிம்ஹவர்மனது வார்த்தையை வ்யாக்ரபாத முனி கேட்டு ஆச்சர்யமடைந்து துக்கமுள்ள அரசனேப் பார்த்து; பதில் சொன்னுர்.

வ்யாக்ரபாதர்:— மஹாபுத்திசாலி! ராஜ்யத்தைத் தரிப்பவன் உனது பிதாவும் கிழத்தன்மையை அடைந்துள்ளார். அவன் இதரர்களைக் கொல்ல பொருமையற்றவன். இவ்வித மிருக்கையில், எல்லா ஆசையுமற்று உனக்கு இவ்வனந்தரத்தில் தபஸ் செய்தல் எனக்கு ப்ரியமில்லை.

ஸிம்ஹவர்மன்:— நான் ஸிம்ஹ உருவத்துடன் இருந்து ராஜ்யமடைய மாட்டேன். ஆகவே ராஜ்யத்தில் எனக்கு இச்சை இல்லை. இப்பொழுது ராஜ்ய பாரமும் வேண்டாம். மற்றும் எனது தகப்பனர், ஸ்வர்க்கம் சென்ற பிறகு, பூமியைக் காப்பாற்ற எனது ராஜ்யத்தில் இரு தம்பிகள் ஸமர்த்தர்களாயிருக்கிறார்கள். ஆகையால் இப்பொழுது கேவலம் எனக்கும் கருணையைச் செய்யும்! என்ற தயை உள்ள வார்த்தையை முனிகேட்டு, உடனே ஸிம்ஹ உருவம் விடுபடுமேயானல்; இந்த அரசன் என்! அடைதல் யோக்யம் தானே?

ஸிம்ஹவர்மன்:— கைவீர்யத்தால் ஸகல பூமியையும் பரிபாலனம் செய்யப் போகிருய்! என இன்று என்னிடம் நீங்கள் சொல்லிய ஸிம்ஹ உருவம் நீங்கினலும் கூட, பூமி ஸஞ்சார ஆசை எனக்கில்லை.

வ்யாக்ரபாதர்:— இன்று இல்லை எனச் சொல்லப்பட்டதும், உண்மை. துக்கத்துடன் இது வ்யக்தமாகவே தெரிகிறது. இந்த நடேசர் இதற்குக் காப்பாற்றுதல் செய்யப்போகிறார்! ஸர்வ கார்யங்களைச் செய்ய யோக்ய முள்ளவனென வெகு காலம் எண்ணிய சித்தத்தில் சிவஜ்ஞானம் முக்யமாக நினைக்கது. அதிலேயே பரமாகவே அடையப்பட்டது. இங்கு க்ஷணிக காலம் இரு! என ராஜனைச் சொல்லி, அது ஸம்பந்தமாக பகவான் பதஞ்சலி முனி இவ்விடம் இருக்கிறார். அவர் ஸமுத்ரத்திற்கும் உத்தமோத்தமர். என தாண்ட முடியாத எல்லையுடைய அவரிடம் ஸந்தோஷமாக முனிவந்து அவருக்கு அந்த ராஜனது விஸ்தாரமான பிடிவாதங்களை தெரிவித்தார். அவ்வார்த்தையை அவரும் கேட்டு பதஞ்சலியும், நடேசர் பூஜை ஸமயம் என நினைத்து இருவருமாக ஈசனை அடைந்தனர். பிறகு அவர் சென்றதும்; ஸிம்ஹவர்மன் பெரிய சிந்தை அடைந்து சூன்ய மனதுடன் இருந்தான். அறியாமல் எல்லாம் ப்ரவ்ருத்தித்தது. இது தனிமையாகவே கூப்பிட்டுச் செய்த வினையின் பயன் தானே ஸமர்த்தன் என அறிவார். இப்பொழுது முனியும் தென்பட்டார். வனந்தரத்தையும் அடைந்துவிட்டார். என்ன செய்வேன்? என்று கஷ்டமடைந்த

மனதுடன் துக்கமடைந்து உட்கார்ந்தவனுகி, ஆச்ரம வ்ருக்ஷ அடியில் ஸஹாயமில்லாமல் எண்ணி இருந்தான். பிறகு தாண்டவ அம்ருத பானம் செய்து ஸந்தோஷமடைந்த மனதுடன் அவர்கள் ஸிம்ஹ வர்மனது வருகையை ஈசனிடம் தெரிவித்ததும்; இவனுக்காக ஈசன் அனுக்ரஹமோ? கோபமோ? எது செய்கிருரோ? என அறிகிறேமில்லை. எது வரை தெரிவிக்கிறேமோ? அதுவரை நடேசரிடம் அவன் வருகையைச் சொல்லுவோம்.

என நிச்சயித்து நடேசனை இருவர்களும் சித்தத்தோடு நமஸ்கரித்தனர். கருணை நனைந்த சரீரமுடைய ஈசனை ஜ்ஞானவாக்குகளால் வெகு காலம் ஸ்தோத்தரித்து அவன் வ்ருத்தாந்தத்தை நடேசரிடம் இருவரும் தெரிவித்தனர்.

முனி:— எங்கள் ஆச்ரயமாய் தபஸ் செய்ய ஐந்தாவது மனுவின் பிள்ளை ஸிம்ஹவர்மன் வந்துள்ளான். அவனுக்கு அனுக்ரஹம் செய்ய வேணும். மஹேச்வர தாண்டவத்தை தயையுடன் காண்பித்துவிட்டு, அவனுக்கு ஸிம்ஹ உருவத்தையும் போக்கிக் காப்பாற்றுங்கள் என நமஸ்கரித்தனர். பகவான் இதைக்கேட்டு முநிகளைப் பெரிய கம்பீர வார்த்தையால் பதில் சொன்னுர்.

ஈசன்:— நான் அவனது மனதின் அபிப்ராயத்தை அப்படியே அறிகிறேன். அவனுக்கும், உங்களுக்கும், ஹிதமானது எதுவோ? அதை இப்பொழுதே செய்யப்போகிறேன். அவ்வழகிய சிவகங்கை என்ற பெயருடைய தீர்த்த ச்ரேஷ்டத்தில் அந்த ஸிம்ஹவர்மாவை ஸ்நானம் செய்வித்து, என் ஸமீபம் அழைத்து வாருங்கள்! அதன் பிறகு அழகிய எனது சக்தியையும், கதியையும், பார்க்கட்டும்! என இவ்விதம் அழகிய முறையில் வ்யாக்ரபாதரை ஈசன் கட்டளையிட்டார்.

பிறகு ப்ரீதியுடைய மனமுடையவராக வ்யாக்ரபாதர்; பதஞ்சலியுடன் ஸிம்ஹவர்மன் ஸமீபத்தை வேகமாக அடைந்தார். அச்சமயத்தில் பூமியில் சுப நிமித்தங்களும் உண்டாயிற்று. அவைகளைப் பார்த்ததும், பரமப்ரீதியுடன் முனிகளின் வருகையைப் பார்த்துக் கொண்டிருந்தான். பிறகு ப்ரஸன்ன மனமுடைய அம்முனிகள் வந்து மஹா பாக்யசாலியான ஸிம்ஹவர்மனே நீ க்ருதார்த்தனுகிருய்! எனச் சொல்லினர். குறைவில்லா தகுதியுடையதைக் கேள்! விஷ்ணு,

ப்ரம்ஹா, தேவர், எங்கள் இருவர்கள் எல்லோர்க்கும் இப்படிக் கிடைக்க முடியாத ஆனந்தத் தாண்டவம் உனக்கும் காண்பிக்கப் போகிறார்!

ஆகையால் நீ இந்தத் தீர்த்த ச்ரேஷ்டமான சிவகங்கையில் வேகமாக ஸ்நானம் செய்து, தாண்டவத்தினால் ப்ரகாசிக்கும் ஸபாபதி சரது தாமரை போன்ற பாதத்தைப்பார். தபஸ் செய்து அடைய முடியாத ஹேது எதுவோ? அதை நீ அடைவாய்! என்றதும்; அவ் வார்த்தையை அரசன் கேட்டு, ஆச்சர்யமடைந்த மனதுடன், சிவகங்கை தீர்த்தத்தில் அரசன் ஸ்நானம் செய்தான். ஸ்நானம் செய்தவுடன் காந்தியுள்ள ஸ்வர்ணமய தேஹமுமடைந்தான். அதினால் சிவகங்கை தீர்த்தம் ஸ்நானம் செய்ததில் உண்மை விளங்கிற்று. ஆகவே; பெரிய ஸமுத்ரத்தினின்று உண்டான இளம் ஸூர்யன்போல் ஸ்வர்ண சரீர முடைய அரசனை முனிகள், தேவர்கள், பார்த்து அன்றுமுதல் அவனுக்கு ஹிரண்யவர்மா என்று பெயரிட்டனர்.

இருபத்திரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## இருபத்திமூன்றும் அத்தியாயம்.

பிறகு மஹா தபஸ்வியான வ்யாக்ரபாதர் அந்த ராஜனுக்கு குறை வில்லா ஆனந்தத்தைக் கொடுக்கும் மஹா மந்த்ரத்தை உபதேசித்து, யோகி கூட்டங்களால் ஸேவிக்கும் வேதங்களுக்கு எல்லாம் கடைத் தேறத் தன்மையுடைய திவ்ய சிதம்பரத்தையும் அவ்விடத்தில் காண்பித்தார். அப்பொழுது நடேசர் அவனுக்கு ஸச்சிதானந்த லக்ஷணமுடைய தாண்டவத்தைக்காண்பித்தார். பார்க்கும் கண்களுக்கு அம்ருதஸார ஆபரணம்போல் மனோஹரமாய், வாக் மனதிற்கு எட்டா பார்வையுடைய ஈசனின் ஆனந்த தாண்டவத்தைக் கண்டு, ஸர்வ அவயவங்களும் மயிர்க்கூச்சலடைந்து ஆனந்தக் கண்ணீர் பெருகும் பெரிய ஸ்வரத்துடன் ஸபாபதியை பூமியில் தண்டாகாரமாக விழுந்து நமஸ்கரித்து, அஞ்சலி செய்து, மறுபடி எழுந்து, ஈசனை ஸ்தோத்ரங் களால் பரமானந்த வசமாய் இந்த்ரன, உபேந்த்ரன், இவர்களால் காண முடியாத சந்த்ரரேகை அடையாளமுடைய ஈசனிடம் அவ்வரசன் தெரிவித்துக்கொண்டான். உமது அனுக்ரஹத்தால் தத்வங்களுக்கு அடங்கா ஆனந்தமய ஆனந்த தாண்டவத்தை நான் கண்டேன்.

யோகத்தை த்யானம் செய்கிற இவர்களுக்காகவே இது அங்கீகரித்துச் செய்யப்பட்டது. பூமியில் ஸ்வர்ண ஸபையை ஆச்ரயித்து ஆனந்தத் தாண்டவம் செய்பவரான உங்களுக்கு எந்தெந்த சிவகார்யங்களுண்டோ? அதை உமது ஆஜ்ஞையால் செய்ய ஆசை. நந்திகேசருக்கு எப்படி அளித்தீரோ? அதுபோல் எனக்கும் சக்தியை கொடும்! என்று அவன் ப்ரீதியுடன் சொல்லியதும்; அரசனைக் குறித்து அம்ருத வர்ஷம் விடுகிறது போல் ஈசன் பதில் சொன்னார். அரசனே! உனது பக்தியால் ஸந்தோஷமடைந்தேன், எது உன்னால் செய்யத் தகுந்ததோ? அது எப்பொழுதும் செய்யப்படுக! என்றதும்; ஆஜ்ஞையை அப்படியே ராஜன் சிரவில் சீக்ரமாக ஏற்று, ப்ரஸன்னமுகமுடையவனாய், தேவரை நமஸ்கரித்து, உலகத்திற்கு ஹிதம் செய்ய இச்சை அடைந்து, வ்யாக்ரபாத முனியுடன் நமஸ்கரித்து சென்றான். பிறகு ஸ்ரீ மூலஸ்தான தேவர் ஸமீபம் வ்யாக்ரபாதர் அடையச் செய்தார். அவ்விடத்தில் அவனுடைய தாண்டவத்தைக் காண்பிக்கிறவராய், மதுரவார்த்தையுடன்; என்னால் சிவன் இங்குதான் முதலில் பூஜிக்கப்பட்டது என ப்ரஸித்தமாய்ச் சொன்னார்.

இந்த ப்ரஸாத லாபத்தால் தான், தாண்டவம் நீ பார்த்தவனாகிறாய் மூலஸ்தான லிங்கத்தை நமஸ்கரி, என்றதும் தானாகவே வணங்கினான். முன்பு எந்த லிங்கம் தனது பெயர் அடையாளமுள்ள ஸ்தானத்தில் ஸ்தாபித்ததோ? அதற்கும் ஆதரவுடன் அரசனால் பூஜை செய்யப்பட்டது உடனே அரசனை பதஞ்சலி பர்ணசாலைக்கு அடையச் செய்து, பதஞ்சலியையும் அவர் ஈசனையும் நமஸ்கரிக்கச் செய்து, அரசனைப் பிடித்து தனது பத்னிக்கும் காண்பித்து, பத்னியிடம் வ்யாக்ரபாதர் சொன்னார். ப்ரியே! முன்பு ச்ரமப்பட்டு உனக்கு உபமன்யு உண்டானான். ஒரு ச்ரமமுமில்லாமல் இவ்வரசன் உனது குழந்தை போல் இப்பொழுது வந்துள்ளான் என்று ப்ரீதியுடன் அவளிடம் புத்ரன் என்ற பாவனையாக முனி கொடுத்தார். முனியினால் கொடுத்த அரசனை வேகமாக தாய்போல் அவள் கால்களில் நமஸ்கரிக்கச் செய்தார். ஸாத்வியான அம்முனி பத்னி மலர்ந்த தாமரைபோல் முகமடைந்த வம்சத்திற்கு சூடாமணிதான் என தேவரால் கொடுக்கப்பட்டது என்று ப்ரீதியுடன் அவனை ஸ்வீகரித்தார். பிறகு ப்ரஸன்ன ஹ்ருதயமுடைய இருவர்களும் ப்ரீதியடைந்து, மனு வம்சத்தில் உண்டான அவனுக்கு ஆச்ரமத்தில் அவனிடம் கருணை நிரம்பிய பார்வையைக் கொடுத்து, அவ்விடம் முனி; ஸ்தான மஹிமையையும் உபதேசிக்க ஆரம்பித்தார்.

வ்யாக்ரபாதர்:— வாக்கு, மனம், இவற்றிற்கு எட்டாத ஈசன்; அதிக பரிபூர்ணமுடையவனுக்கு கூட ஒரு ஸமயமும் காணப்பட மாட்டார். அப்படியிருந்தும்; தயையுடன் ஈசன் ஏவப்பட்டார். ஸாதாரணக் கண்ணுல் ஜந்துக்களுக்குக் காணப்படுகிறதாகவே நர்த்தனம் செய்கிறார். மற்றும் ஜந்துக்களுக்கு முக்தியைக் கொடுப்பவரென்றும், முதலில் அநேக ஸ்தானங்களை பூமியில் திவ்யமாகச் செய்தார் என்றும், அவைகளில் 68 ஸ்தானங்கள் பூமியில் முக்தியைக் கொடுப்பது என்றும், எப்பொழுதும் ஸான்னித்தியத்தை கொடுக்கும் ஹேது உடையவரென்றும், மஹேசன் இங்கு ப்ரவித்தி அடைந்தார்.

அவற்றில் முக்யம் மூன்று. அதிக முக்யம் இது என மஹரிஷிகள் சொல்லுகின்றனர். புண்டரீகபுரம், காசி, திருவாரூர் (கமலாலயம்) என்பது. இந்த ஸ்தானங்களில் எவர்கள் நித்யம் இருந்து தபஸ் செய்கிறார்களோ? அவர்கள் காலக்ரமமாக க்ஷேத்ரவைபவத்தால் மோக்ஷமடைகின்றனர். இம்மூன்று ஸ்தானங்களுடைய வைபவத்தை யார் வர்ணிக்கிறானோ? அவனுக்கும், தர்சனம், மரணம் ஏற்பட்ட ஜனங்களுக்கும் ஜந்துவுக்கும் முக்தி கட்டாயம் கிடைக்கின்றது. அப்படியிருந்தும்; இந்த ஸ்தான ச்ரேஷ்டத்தின் வைபவத்தை அதிசயமாகக் கேட்கவேணும். ஸத்துகளுடைய தாபத்ரயத்தையும் அபஹரிக்கத் தகுந்தது. ஒரு ஸமயம் நாம் கமலாலய எல்லைக்குள் பிறக்காவிட்டாலும், காசியில் சரீரத்தைக் கட்டைபோல் விடா விட்டாலும், இவ்விடம் கேவலம் உட்கார்ந்தால் போதும்! நாம் முக்தியில் இருக்கிறோம் என்பது நிச்சயம். ஸபையில் நர்த்தனம் செய்யும் ஈசனுடைய தாமரைபோன்ற பாத தர்சனத்தால் உடனே முக்தியடையும் தன்மை கிட்டும். எவன் ஒரு தடவை தில்லைவனத்தில் திடீரென ஆனந்த தாண்டவத்தை வந்து பார்க்கிறானோ? மனுஷ்யன் நித்யம் சிதம்பர சித்ஸபாமத்தியில் வஸிக்கிறானோ? நித்யம் ஆனந்தத் தாண்டவம் பார்க்கிறானோ? அங்கு அநேக நாள் வேண்டாம். அது போல் காசியும், முக்தி அளிக்க முடியாது. இவ்விடத்தை விட்டு காசியை மனுஷ்யன் அடைவானானால்; அவனுக்குத் தேஹமுடிவிலும் ஈசன் முக்தி கொடுக்கமாட்டார். சிதம்பரத்தை அவமானம் செய்ததினால் சங்கரர், அனுக்ரஹம் செய்யமாட்டார். அவ்விடத்தில் மனுஷ்யன் வஸிப்பானேயானால்; மஹேசனுக்கு ஸமான தேஜஸ் உடையவனாகி, ஜகத் வ்யாபாரத்தினால் நிஷ்டை அடைந்து, ஜீவன் முக்தனாகிக் காணப்படுகிறான். இப்பேர்ப்பட்ட ஸ்தானத்தில்

பார்வதியுடன் சங்கரர் செய்யும் தாண்டவம் உன்னால் இங்கு பார்க்கப் பட்டது. ஸர்வலோகங்களிலும் இதைக்காட்டிலும் அதிகமில்லை. வேறு என்ன இதைவிட இருக்கிறது?

இருபத்திமூன்றும் அத்தியாயம் முற்றிற்று.

---

## இருபத்திநான்காம் அத்தியாயம்.

வ்யாக்ரபாதர்:— மற்றும் இதிஹாஸ புராணங்களில் சொல்லப் படும் இந்த ஸ்தான வைபவம் சொல்லுகிறேன். ப்ருகு வம்சத்தில் முதன்மையாக பிறந்த சௌனகர் என்ற முனி ஒருவர் இருந்தார். எதை உத்தேசித்து பாரதம் உண்டானதாகச் சொல்லுகிறார்களோ? அவர் தானாகவே ஒரு ஸமயம் நந்திகேசரை நமஸ்கரித்துக்கேட்டார்.

சௌனகர்:— பார்வதியுடன் ஈசன் தாண்டவம் செய்கிறார். அது ஜகத் உபகாரத்திற்காகவே மூன்று ஸந்த்யையிலும் உள்ளது! என கேள்விப்படுகிறது. ஸ்வர்க்கத்திலோ? பூமியிலோ? பர்வதத்திலோ? ஸூர்யமண்டலத்திலோ? சந்த்ர பிம்பத்திலோ? பூமியில் எங்கு தாண்டவம் காண்கிறதோ? அவ்விஷயம் விஸ்தாரமாக சொல்லவேணும்! என கேட்கப்படுகையில்; அவர் அதிக ஸந்தோஷமடைந்து சௌன கருக்கு சொன்னார்.

நந்தி:— முனியே! எப்பொழுதும் ஈசன் கைலாஸத்தில் தாண்டவம் செய்கிறார். கேவலம் அதை உமாதேவிதான் பார்க்கிறாள். மற்றும் யாவரும் அதைப்பார்க்க முடிகிறதில்லை. பகவான் ஈசன் எப்பொழுதும் புண்டரீகபுரத்தில் ஸ்ரீமத் தப்ரஸபா மத்தியில் ஆனந்தத் தாண்டவம் செய்கிறார். எந்த நர்த்தனம் காலனுக்குச் சத்ருவான ஈசனால் கைலாஸத்தில் நித்யம் செய்யப்படுகிறதோ? அதை ஒரு ஸமயம் பார்வதி ஒருவளாலேயே பார்க்கப்படுகிறது என அதை அறிந்தவர்கள் சொல்லுகின்றனர். எது ஹேமஸபாமத்தியில் சந்த்ரமௌளியால் செய்யப்படுகிறதோ? அது எப்பொழுதும் எல்லோராலும் பார்க்கப் படுகிறது எனச் சொல்லுகின்றனர். உமக்குப் பார்க்கவேண்டுமென்ற ஆசை இருக்குமானால்; அவ்விடம் நீர் அடைய யோக்யம்! சிதம்பரத்தைக் காட்டிலும், வேறு இடமும், சிவகங்கையைக் காட்டிலும் வேறு தீர்த்தமும், உலகில் கிடையாது. அம்மந்த்ரங்களைக் காட்டிலும்

வேறு மந்த்ரமும், இல்லை. நடேசரைக்காட்டிலும் வேறு தேவரும், கிடையாது. அதைப்பார்த்தால் சரீரத்திற்கும், கண்ணுக்கும், பலம் கிடைக்கும் என கண ச்ரேஷ்டரால் இது சொல்லப்பட்டதும்; சௌனக முனி பரிசுத்தமுள்ள அத்தில்லைவனத்தை வேகமாய் அடைந்து, அங்கு சிவகங்கை என்ற பெயரிய மஹா தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து, கடுமையான தபவினுல் தாண்டவத்தைக் காணச் சென்முர். கருணையே கடலாகக்கொண்ட ஈசன் வருஷ முடிவில் முனிக்கு ஸ்ரீமத் தாண்டவ தர்சனம் காண்பித்தார். அவர் பரமானந்த மய ஆனந்த தாண்டவத்தைப் பார்த்துத் தாஞகவே மயிர்க்கூச்சலடைந்த சரீரத்துடன் ஸந்தோஷத்திஞல் நர்த்தனம் தானும் செய்தார். ஆனந்தக்கண் பூர்ண பார்வையுடன் அஞ்ஜலி செய்து, புஷ்பங்களால் அர்ச்சித்து, தனது ரிக்குகளால் ஸ்தோத்ரமும் செய்தார்.

ஈசனது ஸ்தோத்ரமுடிவில்; அவனுக்கு இருவரங்களை பகவான் கொடுத்தார். வெகு ரிக்குகள் உள்ள ரிக் வேதத்திற்கு தலைமைத் தன்மையும், ஸூத்ரம் செய்யும் தன்மையும், செய்ய அனுக்ரஹித்தார். முனி ஈசனிடமிருந்து இருவரங்களையும் அடைந்து, அவ்விடம், வெகு காலம் இருந்து சாஸ்த்ர சர்ச்சைகளைச் செய்து வந்தார். ஸ்தான வைபவம் அங்கு இவ்விதம் உள்ளது. மறுபடியும் புண்டரீகபுரம் மஹாத்மியம் சொல்கிறேன் நீ கேள்.

ஒரு ஸமயம் கர்ம காண்டமான ஸாமவேதத்தின் ஆயிரம் சாகைகளுக்கும் கரையைக்கண்ட ஜைமினி ரிஷி என்பவர் அந்த ஸ்தான மஹிமையைக்கேட்டு, சிஷ்ய கணங்களுடன், தில்வாரண்யமடைந்து, பரிசுத்த வழியுடன் குளிர்மையான சிவகங்கையில் ஸ்நானம் செய்து, திவ்ய சிதம்பரத்தை கண்டு, பக்தியுடன் தேவரை பூஜித்து, வேத ரிக்குகளால் கடைசி பாதத்தை பூர்த்தி செய்யும் ஸ்தோத்ரத்தை உடனடியாக செய்து ஸர்வ இஷ்டங்களையுமடைந்து, காணுபத்யமுமடைந்தார்.

ஸாமகானப்ரியரான இவரால் ஈசனது ஆனந்த தாண்டவம் முன்னும், பின்னும், இன்றைக்கும் பார்க்கப்படுகிறது. வசிஷ்டர் முதலிய நாரதாதி முநிகளும், நேரில் கண்டு அறியும் பலமுடைய பூமியில் உள்ள, அநேக ஸ்தானங்களை விட்டு ஸதா கண்ணுக்கு காணக் கூடிய சங்கரரது ஆனந்த தாண்டவத்தில் வஸிக்கிறவர்களாய், பார்த்த மாத்ரத்தில் முக்தி அளிக்கவல்லது என அதை அறிகின்றனர்.

வ்யாக்ரபாதர்:— மற்றும் கேள்! இவ்விடத்தில் நான் வந்த காரணத்தையும், சொல்லுகிறேன். கிடைக்க முடியா வஸதியும், அப்படியே ஸித்தியும், எனக்கு அடைந்தது. ராஜனே! மத்தியந்தன ரான எனது பிதாவினல் நான் ஏவப்பட்டு வனத்தில் கஷ்டமின்றி பர்ணசாலேயில் வசித்து வந்து; அதுமுதல் தபஸ் செய்கிறவனுய் வெகு காலம் பக்தியுடன் வஸிக்கையில்; இவ்விதம் ஆச்சர்யங்கள் அநேகம் எனக்கு உண்டாயிற்று. நான் நடந்த சரித்ரத்தை சொல்லவே முடியாது. என்னல் நீ அறியவேண்டியது இன்று எவ்வளவோ இருக்கிறது. இதுவே தபஸின் அழகிய சரீரம், வ்யாக்ர உருவம், இதிலேயே கல்யாணம். இதிலேயே புத்ர உத்பத்தி; இதிலேயே மஹாதேவன் பையனுக்கு பாற்கடல் அளித்தது; இதிலேயே உபமந்யு க்ருஷ்ணனுக்கு தீக்ஷை செய்து ஸர்வஸித்திகள் அடைந்தது; சிவாகம அர்த்தங்களே அதன் முகமாக க்ருஷ்ணன் அறிந்து இங்கேயே மூலஸ்தான பூஜை செய்து ஸர்வஸித்திகள் அடைந்தது; இங்கேயே ஸர்வ முநிகளும் மஹோத்ஸவமாக வந்தது, ஈச்வரபக்தியுடைய பதஞ்சலியும் கண்டது, விஷ்ணு, ப்ரம்ஹா, முதலியவர்கள் காணமுடியாத ஆனந்த தாண்டவம் அம்ருதமாக கண்டது. உங்களுக்கு ஈச்வரன் வேறு ஆசையை நிவர்த்திக்க பூர்ணம் செய்தது, பரமேச்வரனது லக்ஷ்மீகடாக்ஷ கார்யத்தில் ஸாமர்த்ய தன்மை யுடைய ஸிம்ஹவர்மனை உனக்கு இங்கேயே தர்சனமும் கொடுத்தது, உனக்கும், எனக்கும் தாண்டவேசரது ப்ரஸாதம் அடையப்பட்டது. துர்க்கடனுக்கு அடைந்தச்ரேயஸ், பரம்பரைக்கும் அடையமுடியாதது, அது கிடைத்தது. சிவகங்கை ப்ரபாவத்தில உனக்கு ஸ்வர்ணசரீர மடைந்தது. சிவகங்கை என எந்த தீர்த்தத்தை வர்ணிக்கிறதோ? அதுவே இந்த தீர்த்தம். இது முதலிய ஸ்தான மஹிமையும் வைபவங் களும் இங்கு இன்னும் அநேகம் இருக்கின்றன. வைபவங்களே நான் நூற்றுக்கணக்கான வர்ஷங்கள் சொன்னலும் சொல்லமுடியாது.

பூமியில் இந்த ஸ்தானம் மிகச்ரேஷ்டமானது. ஸ்தானத்திலும் மஹத்தரமான ஸ்தானம். தீர்த்தத்திலும் தீர்த்தம். சிதம்பரம் உயர்விலும் உயர்வு. சிதம்பர மந்த்ரமும் அதுபோலவே ரொம்பவும் ச்ரேஷ்டம். மந்த்ரங்களில் ஈசனது மந்த்ரம் உயர்வு. நடராஜா உயர்வு. தேவர்களுள் தாண்டவ அலங்காரமுடையவர் மிக ச்ரேஷ்டர். ஸம்ஸார ஸமுத்ரத்தை தாண்ட பெரிய பறவை போன்றவர். சிவந்த தாமரை போன்ற பாதமுடையவர். இவருடைய தர்சனம் ஒரு தடவையிலேயே

பாபிக்கும் மோக்ஷமடைவிக்கும் தன்மை. மற்றும் நித்யம் பார்க்கிற க்ஷேத்ரவாஸியும் புண்யம் செய்தவன்தான். அதில் ஸந்தேஹமில்லே.

ஸூதர்:— இவ்விதம் வ்யாக்ரபாதர் ஹேம ஸபையிலுள்ள ஈசனது மஹாத்மியம் முழுமையும் அரசனுக்கு சொல்லுகையிலேயே ஆகாசத்தினின்று ஒளிக்கூட்டம் அங்கு இறங்கியது. எல்லோரும் கண்களே விழித்து ப்ரயத்னத்துடன் அடிக்கடி நிமிர்ந்து பார்த்தனர். இது என்ன? என்ன? தேஜஸ் என ஒருவருக்கு ஒருவர் பேசிக் கொண்டனர்.

அச்சமயத்தில் பூமிக்கு ஸமீபம் தேஜஸ் கூட்டம் வந்த சமயம் குல புரோஹிதர் வஸிஷ்டர் வந்தார் என தெரிந்தது. அவரைக் கண்டு ஸகல முனிகளும் நடுக்கத்துடன் எழுந்து அவருக்கு வணக்கம் செய்து, ஒழுங்காக உபசாரம் செய்தனர். அவரும் உசித உபசாரமடைந்து, எல்லோரையும் கண்டு ஸந்தோஷித்தார்.

அச்சமயம்; பாதங்களில் வணங்கிய அரசனே; ஆசீர்வாதங்களால் ஸந்தோஷித்து, சில வார்த்தைகளால் க்ஷேம ஸமாசாரம் கேட்டு, வ்யாக்ரபாத முனிவருடன் சிவகங்கை தீர்த்தத்தில் ஸ்னனம் செய்து, சிதம்பரத்தை அடைந்து ஈச்வர தாண்டவத்தைக் கண்டு, ஸ்தோத்ரம் செய்தார். நமஸ்காரமும், செய்தார்.

ஸந்தோஷ ஆனந்தமடைந்து, மெதுவாகச் சென்ருர். பிறகு வெளிப்ரதேசமடைந்து, வ்யாக்ரயாதர் பர்ணசாலைக்கு அழைத்து வரப்பட்டு, அவ்விடத்தில் இரவு பகல் விதிப்ரகாரம் பூஜிக்கப்பட்டார். காலையில் எழுந்து நித்ய கர்மானுஷ்டானம் செய்து இருக்கையில்; மறுபடியும் அஞ்ஜலிசெய்த சிரஸுடன் நின்று நமஸ்கரிக்கும் அரசனைச் சொன்னர். உனது பிதா கிழட்டுத்தனத்தால் மூப்பமடைந்து தலைவனில்லா அரசாங்கத்தைக்கண்டு, கஷ்டப்படுகிருர். தம்பிகள் பலசாலிகளாக இருந்தாலும், நீஅந்த ராஜ்யமடை! என்ற வார்த்தையை அரசன் கேட்டு, அதை அங்கீகரித்து; ஸுகங்களில் ஆசையற்று; இனிமையான வார்த்தையை பதிலாக சொன்னன்.

பகவானே! எனக்காக அனுக்ரஹிக்கவேணும். நான் பரிசுத்தமுள்ள தில்லைவனத்தில் சிலகாலம் வஸிக்க நிச்சயித்துள்ளேன். போகங்களில் கொஞ்சமும் ஆசையில்லை. ஆகையால் கொஞ்சம் தம்பிகளுக்கு

பூபாரம் வஹிக்க, இக்கல்ப்பனே செய்க! எனக்கு இப்பிதா ரிஷி தம்பதிகள் இருக்கின்றனர், அவர்களும் இதை அறிகிருர்கள். இவர்களது தாமரைபோன்ற பாதத்தை, இவ்விடம் ஸ்நேஹத்தால் தொழுகிறவனுயிருக்கிறேன் என்று சொல்லும் அரசனைப்பார்த்து, வ்யாக்ரபாதர் பதில் சொன்னர். இவ்விடத்தில் உனக்கு இருக்க வேணுமானல் ஊருக்கு போய் ப்ரஜை, ஸைன்யம், இவைகளைச் ஸரி செய்து பிறகு திரும்பப் போகிருய். இந்த ஸந்தோஷ ஆஜ்ஞையை எற்றுக்கொள். அந்தர் வேதியில் இருக்கும் முனிகளை நேரில் தேரில் எற்றி, இப்ரகாசமுடைய ஸ்தானத்திற்குத் திரும்பச் செய் என்றதும்;

இவ்விதம் முனியால் சொல்லியதை அரசன் த்யானம் செய்து ப்ரவேசித்து ஸபையில் உள்ள ஈசனையும் பூமியில் விழுந்து நமஸ்கரித்ததும்; அந்தத் தேவரும் அரசனுக்கு ரிஷி 3000 பேர்களையும், கூட்டமாக அழைத்து வா! என்றும், எவினர்.

இவ்விதம் நடராஜரால் சொல்லப்பட்டதை அடிக்கடி ஸரி எனக் கேட்டு நமஸ்கரித்து, வ்யாக்ரபாத பதஞ்சலிகளேயும் நமஸ்கரித்து, விடைபெற்று ப்ரமதகணம், ஸகல ரிஷி, இவர்களேயும் கேட்டு, தன் பட்டணம் போக தில்லேவனமான சிதம்பரத்தைச் சேர்ந்து, அடிக்கடி பார்த்து வஸிஷ்ட முநியையும் கூடவே அழைத்து, ஹிரண்யவர்மன் தன் பட்டணத்திற்குப் புறப்பட்டான்.

பிறகு பலமுள்ள அரசர்களுடன் நகரத்தை ப்ரவேசித்து, சதுரங்க சேனையை வேகமாக ஸித்தம் செய்து, நீங்களும் என்னுடன் வாருங்கள்! என ஆதரவுடன் ஆஜ்ஞை செய்து, பந்துக்கள், ஆயுதங்கள், தம்பிகள், தனது கோசத்திலுள்ள வாஹனங்கள் எல்லாம் சேர்த்து எடுத்து, பலத்துடன் வெளிக்கிளம்பினன். பிறகு நகரத்தினின்று வெளிக் கிளம்பி, அந்தர் வேதியிலுள்ள ரிஷிகளை அடைந்து, எல்லோரையும் வணங்கி, அவர்களை அவன் தேரில் எற்றி, சில தினங்களுக்குள்ளேயே தில்வாரண்யமடைந்தான். தில்லேவனத்தை ப்ரவேசித்ததும், பூமியில் நமஸ்கரித்தான். முனிகணங்கள், அம்பிகை, ஈசன், விக்னேசர், சிவன் இவர்களேத் தர்சித்து அவ்விடத்தில் வந்தவர்களுடன் அரசன் பிறகு அம்மஹா தீர்த்தத்தில் நான்கு புறமும் ஸந்தோஷமடைந்த பந்துக்களுடன், ஸ்நானம் செய்தான்.

எல்லோருடனும் ஸபையை அடைந்தான். சிதம்பரத்தில் சிதானந்த சம்பு தாண்டவம் கண்டான், அப்பொழுதும் ஸாக்ஷாத்தாக

இமைக்கொட்டாத கண்ணல் பார்த்து, அனுபவித்துப் போதும்! என்ற வ்யாபார மின்றி பார்த்தோம் என்ற பாபமில்லாமலும், கஷ்டங்களைத் துலக்கும் ஈசனது ஆனந்த தாண்டவத்தை ஹ்ருதயத்துடன் அடைந்தோம்! என்றுமிராமல் ரஸத்துடன் எல்லோரும் மூர்ச்சை அடைந்தனர்.

தாண்டவத்தை அநேகம் தடவை பார்த்தும், அவனுக்கு மோஹம் விடவில்லை. நடராஜரை நமஸ்கரித்து வெளிக்கிளம்பினுன். அழைத்து வந்த முநீச்வரர்களுக்கு ஈசனைக்காண்பித்தான். ஸந்தோஷ ஹ்ருதய முடைய வ்யாக்ரபாதரிடம் உமது பாவமுடைய அநேக முநிகளுக்கும், ஸந்தர்ப்பம் எற்றது. என்று அம்மூவாயிரம் பேர்வழிகளை எண்ணிப் பார்க்கையில்; ஒருவரைப் பார்க்கவில்லை. பிறகு துக்கமடைந்த முகத்துடன், கஷ்ட மடைந்து அரசன் மறுபடி மனதோடு எண்ணிப் பூர்த்தியாகாமல் முநியும் எண்ணுகையில்; எங்கும் கிடைக்கவில்லையா? என அப்பூமிப்ரதேசத்தில் அழுகிறவனுனன். அப்பொழுது காதுக்கு இனிமையான ஆகாசவாணி பதில் சொல்லியது.

ஹிரண்யவர்ம! இந்த முனிகளில் ஒருவர் காணப்படவில்லை. எனெனில்; எகாந்தமாய் பெரியதுக்கம் அடையவேண்டாம்! சுத்தவம்ச முடைய இவர்கள் அக்னிபோல் ஜ்வலிப்பவர்கள். 3000 பேர்களைப் பூர்த்தி செய்பவர்களுள் நானும் ஒருவன், என்றதும்; அரசன் அவ்வார்த்தையைக் கேட்டு துக்கம்விட்டு ஈச்வர உருவமுடைய ப்ராம்ஹண ச்ரேஷ்டர்களும் ஈசன்தான் என எண்ணினுன். தனிமையான இத்தேஜஸ்உடைய இம்முநிகள் மஹா பாக்யசாலிகள் என வ்யாக்ரபாத முனியிடம் நமஸ்கரித்துச் சொன்னுன்.

தேவர்கள்:— உமது ஆஜ்ஞையால் அந்தர்வேதியை ப்ரம்ஹாவுடன் அடைந்து நாங்கள் எல்லோரும் மறுபடி இவ்விடம் வந்தவர்களாகிரேம். நீர் ப்ரம்ஹாவினுல் யஜ்ஞத்திற்காக யாசிக்கப்பட்டும், அவருடன் நாங்கள் போக இஷ்டப்படவில்லை. இவனும் ஒரு ஸமயமும், இச்சிதம்பரத்தை விட்டுப்போக இஷ்டப்படவில்லை.

இவ்விதம் வ்யாக்ரபாதரிடம் சொல்லிய வார்த்தையைக் கேட்ட பெரிய தேஜஸ்விகள், மெதுவாக அவ்விதமே என பதில் சொன்னர். பிறகு ஹேமஸபை பின்பாகத்தில் முநீச்வரர்களையும், சேனைகளையும், ஸந்தோஷத்துடன் ப்ரவேசிக்கச் செய்ததும்; குறைவில்லா ஸந்தோஷமடைந்தனர். ஸேனைகளுடன் அரசன் அவ்விடத்தில் எப்பொழுதும் தாண்டவத்தைப் பார்க்கிறவனுகவே வஸித்துவந்தான்.

ஸூதர்:— ஹிரண்யவர்ம! சரித்ரசம்பந்த மங்களமுடைய இவ் வத்தியாயத்தை எவன் படிக்கிருனே! கேட்கிருனே? அவனுக்கு சைவ பதம் கட்டாயம் கிடைக்கும்.

இருபத்திநான்காம் அத்யாயம் முற்றிற்று.

———

இருபத்திஐந்தாம் அத்யாயம்.

ஸூதர்:— பின்பு அவ்விடத்தில் சிவன் ஆஜ்ஞையைப் பரிபாலனம் செய்யும் மஹாபாக்யன், ஈச்வரனுக்கு தினமும் மங்கள கார்யங்கள் செய்துவந்தான். பரமேச்வரனது ஆனந்தத் தாண்டவத்தை நிச்சய மாகப் பார்த்துக்கொண்டிருக்கையில்; முனிகளிடம் அத்புத சக்திகள் அங்கு இருந்து வந்தது. ஒரு ஸமயம் அவ்விடம் வ்யாக்ரபாதர் வந்தார். அம் முனிகளை ஆதரவுடன் பார்த்து இவ்வார்த்தையை சொன்னர்.

வ்யாக்ரபாதர்:— மநுவம்சத்தில் உண்டான இவன், நல்ல வ்ரதானுஷ்டான முடையவன். எப்பொழுதும் இப்பூமியையே பரிபால னம் செய்கிருன். குறைவில்லா ஸம்பத் அடைந்து, பெருமையுடைய தனது இரு தம்பிகளுக்கும் யௌவராஜ்யம் செய்வித்து, சத்ருக்களால் அடக்கமுடியாதன்மை அடைந்து, இவர்களை வைத்து பரிபாலனம் செய்ய வேண்டும். என்றதும்; அவர் வார்த்தையை எல்லா முனிச்ரேஷ்டர்களும் கேட்டு, அதிக ஸந்தோஷமடைந்தனர்.

. பிறகு அம்முனியைப் போற்றினர். விதிப்ரகாரம் இவனுக்கு விவாஹம் முதலிய கர்மாக்களைச் செய்வித்து, அவனுக்கு அபிஷேகம் செய்ய ஸ்வர்ண ஸபையை அவனுடனேயே அடைந்து, ஸமஸ்த தேவதைகளும்; ஸர்வதிக்குகளிலும் ஸேவிக்க, ஸர்வ அலங்காரம் செய்த மண்டபம் அடைந்தனர்.

மனோஹரமான மாலைகளும், ஸ்வர்ண தோரணங்களும், திவ்ய ஸிம்ஹாஸனமும், மனோஹரமான மணிகளால் நூல்சுற்றிய கலசங்களும், கும்பம், மாலை, புஷ்பம், பொறி, நெய், ஸமித், தர்ப்பம், இவற்ருல் அதன் மத்தியில் மனோஹர மண்டபத்திற்கும், அலங்காரம் செய்ய, எல்லோரும் ராத்ரியில் அங்கேயே வாஸம் செய்து நடத்தினர்.

மறுநாள் விடியற்காலையில்; விதிப்ரகாரமுள்ள கர்மாக்களுடன் நல்ல முகூர்த்தத்தில், அம்முனிச்ரேஷ்டர்களால் அரசனுக்கு அபிஷேகமும் செய்துவைக்கப்பட்டது. ஸ்வர்ண மயக்ரீடம், மாலை, ஜயத்திற்கு இருப்பிடமுள்ள கத்தி, முதலியன ஜ்வலிக்க பகலில்; தனது முத்ரையுடன் அவைகளை ஸிம்ஹவர்மன் ஸ்வீகரித்தான். பிறகு வ்யாக்ரபாதருக்கு கிரீடசோபையுடன் சிரஸினல் நமஸ்கரித்தான். அவரும் இவனை எழுந்திருக்கச் செய்து, அடிக்கடி கட்டி அணைத்தார். ஸாம்ராஜ்ய சக்ரவர்த்தியான அவனுக்கு, ஆசீர்வாதத்தையும் கொடுத்து: அரசர்களுக்கு கிடைக்க முடியாத வரமும், புலித்வஜமும், கொடுத்தார். இவன் கையைப்பிடித்து சிதம்பரத்தை ப்ரவேசிக்கச் செய்து, நடேசருக்கு புஷ்பாஞ்சலி செய்யச்சொல்லி, அவரது பாதாம்புஜத்தை சிரஸில் முடி; வெகு காலம் வைத்தார். பிறகு தேவர்களுக்கு கிடைக்க முடியாத மஹாத்மியமுடைய அவ்வரசனை. அம்முநிகள் அதிகமாக சிலாகித்தனர்.

அவர் அநுக்ரஹலாபத்தால் ஸந்தோஷமடைந்த மனதுடன் அஞ்சலி செய்து, ஈசனிடம் ஸிம்ஹவர்மன் தெரிவித்தான். மஹேசனே! எங்கள் வம்சத்து நீதிப்ரகாரம் எவ்வளவு பணம் சேர்த்துள்ளதோ? அது முழுமையும் உங்களுக்கு இருக்கட்டும்! இவ்விடத்தில் இனி என்னால் நீதியுடன் எது அடையப்படுகிறதோ? அதில் ஆறில் ஒரு பாகம் உங்களுக்கும், ஐந்து பாகம் சேனைகளுக்கும் உரியது. மற்றும்; எங்கள் வம்ச மனுஷ்யர்கள் அஜ்ஞானத்தினலோ? அல்லது மோஹத்தினலோ? உங்களுக்கு ப்ரியமில்லாமல் செய்யப்படுவதை கருணையால் கவனிக்கவேணும்! என்றதும்;

வ்யாக்ரபாதரும், ஸந்தோஷமடைந்து அவ்வரசனை மூலஸ்தானேச்வரரிடம் நமஸ்கரிக்கச் செய்து. பிறகு வெளிக்கிளம்பினர். அவ்விடத்தில் அரசன் யானையில் ஏறி ஜயமுள்ள, மஹாசங்கம், தீரநாதம் காஹலம், முதலிய வாத்யத்துடன் பட்டணத்தை மெதுவாக பவனி வந்து, பட்டணத்து ஜனங்களால் ஸ்தோத்ரம் செய்யும் வண்ணம், இருந்தான். த்வஜங்களால் மறைத்த ஆகாசபாகங்கள். பக்கத்தில் ஓடும் ஸைன்யங்கள், அடிக்கடி ஸேவிக்க, அப்பட்டணத்தை ப்ரதக்ஷிணம் செய்து, ஸர்வமங்களங்களுடன் தனது ஸொந்த வீட்டைப் ப்ரவேசித்தான். அவ்விடம் தங்கள் பித்ருக்களால் ஆராதித்த அழகிய ஸிம்ஹாஸனத்தை அடைந்து, உத்தமத்தம்பிகள் இருவரையும் கூப்பிட்டு, அரசன் அவர்களுக்கு ஸர்வ அரச சின்னங்களையும் கொடுத்து,

ஸ்வர்ணகும்ப தீர்த்தங்களால் யுவராஜ பட்டாபிஷேகமும் செய்வித்து, மனுஷ்ய அரசர்கள், மற்ற அரசர்கள், சேனைகள், தம்பிகள், இவர்களுடன் பிதாமஹாள்காத்த பூமியை ரக்ஷிக்க புறப்படச் செய்தான்.

பிறகு அபிஷேகம் செய்வித்த அவர்கள் ப்ரீதியுடன்; நடராஜரை நமஸ்கரித்தனர். தன் ராஜ்யத்தை சேனையுடன் அடைய, வெளிக்கிளம்பினர். பின்பு அவ்வரசன் வ்யாக்ரபாதரை வினயத்துடன் மறுபடியும் நமஸ்கரித்து, மெதுவாகத் தெரிவித்தான். இத்திவ்ய சிதம்பரத்தை இப்பொழுது புதிதாகக் கட்ட உத்ஸாகமடைந்துள்ளேன். இத்திவ்ய தேஜஸ் உடைய ஸமஸ்த முனிகளுக்கும், நான்கு புறமும் விசால ஆச்ரமங்களையும், கட்டிக்கொடுக்க ஆசை உள்ளவனுகிறேன். அதை நீர் அறிவீர். எனச் சொல்லி; அவருடன் நான்கு பக்கமும், அரசன் யோசனையின்றி விச்வகர்மாவைக் கூப்பிட்டு, விசேஷ ஆஜ்ஞைகளை செய்தான்.

ஸர்வ சாஸ்த்ரங்களையும் அறிந்த அவன், ஸரி என ஒப்புக்கொண்டு ஐந்து ப்ராகாரம் சுற்றளவுள்ள இடங்களில்வெகுவாகப்ரகாசிக்கும் உயர தோரணங்கள், கோபுரவாயில்களில் அமைந்த அழகிய மேல் பாகங்களுடைய அநேக மண்டபங்கள், அடி முதல் மேல்பாகம் வரை, சுற்றிய மணிகளால் இழைத்த மாளிகை, காண முடியாத அலங்காரமடைந்த படிக்கட்டு, மேல் உப்பரிகைவரை ஆதாரமாகப் பிரகாசிக்கும் த்வஜங்கள், எட்டுவித பதங்கள், பெரிய வஸ்த்ரங்களினுல் சுற்றிய மேல் கோபுரங்கள், விலைமதிக்கத் தகாத வஜ்ரமணியால் அலங்கரித்த ப்ரகாசங்கள், ப்ரகாசிக்கும் கண்ணுடியில் பூசியதுபோல் எல்லா சுவர்களிலும் ப்ரகாசங்கள், பவழம் இழைத்த ஆனந்தங்கள், ஆகாசத்தை அளாவி எங்கும் சித்தரித்துப் பெரிய அலைபோன்ற வைடூரியக் கற்கள் உடைய மேல்பாக ப்ரகாசம், பெரிய நீல மணிகள் ப்ரகாசிக்கும் வேதிபாகம், நல் முத்து இழைத்த மாணிக்க ஸ்தம்பங்கள், இழைத்த உல்லாச காந்தி ஆகாசத்திற்கே கவசம்போலிருந்தது. பச்சை மணிக்கல் இழைத்த வண்டுபோன்ற காந்தி, அநேக ஸூர்யன், சந்த்ரப்ரதேசம் போல் பூமிக்கே அலங்காரமாய், ஸிம்ஹதேஹத்தையும் மட்டம் செய்யும், சிரிப்பு போலும்; திக்கு, காலம், இவைகளுக்கு உவமையான புன்சிரிப்பு போலும், அநேக வீடுகளின் வைபவங்கள் வர்ணிக்க முடியாத விசித்ரமாய்; வாக், மனஸ், இவைகளுக்கு எட்டாத ப்ரகாசமாய், ஸ்ரீமத் சிதம்பரத்தை தேவதச்சன் விச்வகர்மா; வெகு நாகரிகமாக 3000 முனிகளுக்கும், மற்ற முனிகளுக்கும், அழகாய் செய்து வைத்தான்.

அவ்விடம் மனோராஜ்யமாய்; நான்குபுறமும் கொடிமுடிகள், வரிசைக்ரமமாய் வளையம் போலும், மலைக்கூட்டம்போலும் அமைத்து; அழகிய வீதி மார்க்கங்களில் அடைந்துள்ள வாசற்படி தோரண காந்திகள், ஆச்சர்யம் செய்யக்கூடிய ஆச்ரமங்கள், இவை எப்பொழுதும் இருக்கும்படி விச்வகர்மா, மஹாதபஸின் ப்ரபாவத்தால் செய்தான். பின்பு அரசன் புண்யதிதி உள்ள துருவ நக்ஷத்திரத்தில் அதே லக்னத்தில் பெரிய வாஸ்து சாந்தியையும் முன்னுடையதாகச் செய்ய, ஸர்வ முனிகளையும்; ஆச்ரமங்களிலிருந்து ப்ரவேசிக்கச் செய்தான்.

பிறகு அவ்விடம் லோகானுக்ரஹத்தை எதிர்பாக்கும் நடராஜனுக்கு, புண்யாஹவாசனம் முதல் அபிஷேகம்வரை உள்ள, திருவிழாக்களையும் செய்து ஸர்வ உலகங்களும் விசேஷ வ்ருத்தியடைய, அதற்காக வைதிகமந்த்ர, சாஸ்த்ர மார்க்கப்ரகாரம், முநிகளுடன் அரசனும் இதை அழகாகச்செய்ய, இவர்கள் ஆதரவுடன் தேவரின் உத்ஸவ விதானத்திற்காக, சுத்தமாய் செய்யப்பட்ட பாதஞ்சல சாஸ்த்ரத்தை, அதிக நாதவாத்யங்களுடன் யானை முதுகில் எற்றி, பட்டணத்தில் ப்ரதக்ஷிணம் செய்வித்து, ஸபையை ப்ரவேசிக்கச் செய்தான். அம்முநிகள் யாவரும் அதை அடைந்து, ஆதரவுடன் கண்டு, மாதம், ருது, அயனம், நக்ஷத்ரம், இவற்றை ஸமயத்துக்கு உகந்ததாக நிச்சயித்து, அதை நன்றாகச் சோதனை செய்து, விதியுடன் நடேசருக்கு மஹோத்ஸவங்களை செய்ய, ஹிரண்யவர்மனுக்கு இவை யாவையும் தெரிவித்தனர்.

தெரிவித்ததை அவன் கேட்டு, அவர்களுடன் உத்ஸவக்ரமத்தை எவ்விதம் எதிர்பார்க்கப்பட்டதோ? அவ்விதமே செய்ய, மனதினால் எண்ணி, நிச்சயமடைந்து, ஆனிமாதத்தில் அச்சபையில் நன்னாளில் முதன்மையாக பூர நக்ஷத்ரம் வரை, அரசன் சந்த்ர சூடனான ஈசனுக்கு, உத்ஸவத்தைக் கல்பிக்கிறேன் என, செய்ய ஆரம்பித்தான். வேதமறிந்து தபஸினால் சுத்தி அடைந்த முநிச்ரேஷ்டர்களுடன், கூடவே தேவயாக போக்யமுள்ள புதிய தினங்களை ஒன்பது நாட்களுக்கும் விதானமாகச் செய்து, மறுநாள் தீர்த்தோத்ஸவத்தை உத்தேசித்து முதல் நாள் வீதிவலம் செய்யும் விதானமாக, ஸர்வதேவ உத்தமர்களையும் கூப்பிட்டு, முதலில் த்வஜாரோஹணம் செய்ய ஸங்கல்பமும் ஆரம்பித்தான்.

பின்பு ஸமஸ்த தேவஸ்த்ரீகளுடன் தேவர்கள், பூமியில் உள்ள திவ்ய தேஜஸ்விகளான மனுஷ்யர்கள், முனிகள், பட்டணத்து வழியில்

உள்ள மஹா கோபுரங்களில் பூஜிக்கப்பட்டு, ப்ரகாசமுள்ள த்வஜத்தை அநேகர்கள் பார்த்தும், ஸ்தோத்தரித்தும், அதிக ஸந்தோஷத்துடன், அதனிடம் நர்த்தனம் செய்தனர். அநேகம் ஸ்த்ரீகள், ஸூர்யன் போல் ப்ரகாசிக்கும் ஆபரணங்களை அணிந்தனர். விலை மதிக்கமுடியாத மங்கள கரமான உயர்ந்த ஸிம்ஹாஸனம் போன்று மயில் தோகைக்கு இணையுள்ள, ரத்னங்கள் இழைத்த தண்டம், குடை, அநேக ரிஷபத்வஜம் முதலியவைகளைப் பட்டணஸ்த்ரீகள் வாயில் ப்ரதேசங்களில் நிரந்தர தோரணமாக உடனே கட்டி, அத்திவ்ய பட்டணத்தை அலங்கரித்தனர்.

மலர்ந்த தாமரை போன்ற முகமுடைய ஸ்த்ரீகள் தேவர்கள் வீதியை அடைந்து, பரமேச்வரனிடம் விச்வாசத்தினால் அலங்கரித்தனர். அதே பாகமும், அதே தேஜஸும், ஆனந்த பூர்ணமாய், அங்கு காண்பித்து, தத்வ ஞானிகள்போல் இருந்தனர். தீர்த்தங்கள் நிறைந்த ஆகாசமுடைய ஆடிமாதத்தில் ஈச்வரனுக்கு ஜலக்ரீடா மஹோத்ஸவமும், ஆவணி மாதத்தில் யஜ்ஞ தீக்ஷா புரஸ்ஸரம் பரமேச்வரனுக்கு ஆதரவுடன் குறைவை நிறைவேற்ற. புஷ்பக விமானத்தில் ஏற்றி வைத்து, பவித்ரா ரோபணம் என்னும் உத்ஸவமும், சுபமான ஸமஸ்த நெல்தான்யங்கள் வ்ருத்திஅடையக்கூடிய புரட்டாசி மாதத்தில் கருணை உருவமுடைய பரமேச்வரனுக்கு அஷ்டமிதின உத்ஸவமும், ஐப்பசி மாதத்தில் நீலகண்ட புஷ்பங்கள் கூடிய பானுவாரத்தில்; நல்ல லக்னத்தில் ஸர்வ லோகத்திற்கும் ஹிதமுள்ள உத்ஸவமும், கார்த்திகை மாதத்தில் ஜகன் மாதாவான உமாதேவியின் கண்களுக்கு ஆனந்தம் கொடுக்கும் காரணமுடைய ஈசனுக்கு தனிமையான பெரிய தீபாவளி மஹோத்ஸவமும், மார்கழி மாதத்தில் அவ்விதமே ஆர்த்ரா நக்ஷத்திரத்திற்கு சுப தினத்தில் பெரிய வித்வான்கள், தபோதனர்கள், அரசன், முநிகள் எல்லோரும் விதிப்ரகாரம் ஸேவை செய்து அடைந்துள்ள அவ்விடத்தில் அகஸ்தியர், புலஸ்த்யர், விச்வாமித்ரர், பராசரர், வாமதேவர், வஸிஷ்டர், ஜைமினி, முதலிய முநிகளுடன், பரத்வாஜர், ப்ருகு, கண்வர், காச்யபர், இன்னும் மற்றுமுள்ள முநிச்ரேஷ்டர்கள் எல்லோரும் அத்தில்லைவனத்தில் அடைந்து உத்தமோத்தமமான சிவகங்கையில் ஸ்நானம் செய்து, ஸபேசனை நமஸ்கரித்து, மூன்று தடவை ப்ரதக்ஷிணம் செய்து. பரமானந்தத்தினால் நிறைந்த அந்தக்கரணமுடையவர்களானார்கள்.

வராஹ உருவமுடைய விஷ்ணுவும் ஹம்ஸ உருவமுடைய ப்ரம்ஹாவும், ஸ்தோத்ரம் செய்தனர். எந்த ஆதி அந்தமுடைய

சிவனைக்காணமுடியவில்லையோ? அந்த நடேசனை நமஸ்கரிக்கிறேன். விச்வரூபரான உமக்கு நமஸ்காரம். காமவைரியான உமக்கு நமஸ்காரம். கால காலரான உமக்கு நமஸ்காரம். சூல பாணியான உமக்கு நமஸ்காரம். ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், இவை செய்யும் உமக்கு நமஸ்காரம். என இவ்விதம் முனி ச்ரேஷ்டர்களும், ஸ்தோத்ரம் செய்து, ஸாஷ்டாங்கமாக நமஸ்கரித்து, குறைவில்லா ஐச்வர்யமடைந்து, அவர்கள் வந்தவழியே சென்றனர்.

வ்யாக்ரபாதர்:— ஆகையால்; இப்பொழுது பரமேச்வரனுக்கு உன்னால் உத்ஸவம் செய்ய வேண்டியது. இத்தின மஹாத்மியத்தை நூற்றுக்கணக்கான வருஷங்கள் சொன்னாலும் என்னால் சொல்ல முடியாது. ஆகையால் நீ அவச்யம் இதை ஆதரவுடன் செய்ய வேண்டும்.

ஸூதர்:— இவ்விதம் அவருடைய வார்த்தையை 3000 முனிகளும் கேட்டு, அவ்வரசனுக்கு ஆஜ்ஞாபிக்க, நடராஜரைக் காணவே ஸ்நானம் செய்து, அதினின்று மஹாத்மிய ப்ரியமுடைய சித்தமடைந்து; அடைந்தனர். ஸ்வாமின்! அத்தினம் இன்று ஏற்பட்டது. புதிய தீர்த்தத்தை ஆதரவுடன் கொண்டுவந்து, மந்த்ரத்தினால் பரிசுத்தம் செய்து, தனியான பக்தியுடன் சுத்தமுள்ள நடராஜநக்கு அபிஷேக விதியை செய்யுங்கள் என்றதும்; பூமியில் உள்ள தேவர்கள் சிரஸ்முதல் பாதம் வரை, நடராஜநக்கு அபிஷேகம் செய்வித்து, மாலைகள் சாத்தி, நிவேதனம் செய்து, உபசாரங்களையும் செய்து ப்ரீதி அடைந்தனர்.

இருபத்தைந்தாம் அத்யாயம் முற்றிற்று.

———

## இருபத்தாறும் அத்யாயம்.

ஸூதர்:— தபோநிதியான நடராஜருக்கு புஷ்ய மாதத்தில் விதிகளையும், நடந்த வ்ருத்தாந்தங்களையும், முனிகளே! சொல்லப் போகிறேன். கேளுங்கள்.

ரிஷிகள்:— மஹா தபஸ்வியான வ்யாக்ரபாதர் புஷ்யமாத பூஜை எவ்விதம் நடேசருக்குச் செய்யவேணும், எனச் சொன்னாரோ? அதைச்

சொல்லவேணும். ஹிரண்ய வர்ம சக்ரவர்த்திக்கு நன்ருகச் சொல்லப் பட்ட அப்புஷ்யமாத பூஜையை நீங்கள் கேளுங்கள்.

ஸூதர்:— புஷ்யமாதத்தில் புஷ்ய நக்ஷத்ரம் கூடிய சுப தினத்தில் ஆதரவுடன் மஹா நைவேத்யத்தை எவர்கள் செய்கிருர்களோ? அவர்கள் சாச்வதமான முக்தியை அடைகின்ருர்கள், என்ற வ்யாக்ரபாதரது வார்த்தையைக்கேட்டு அரசன் 3000 முநிச்ரேஷ்டர்களுக்கும்; கைலாஸத்திற்கு ஸமமுள்ள அன்னம், முதலியன பக்ஷணங்கள், போஜ்யங்கள், லேகியங்கள், சோஷ்யங்கள், இவை இன்னும் அனேக விதமாக ஸூர்ய பாகங்களும், அக்னி பக்வங்களும், பருப்பு, அப்பளாம், முதலியவைகளும், வாழைப்பழங்களோடு சேர்ந்ததும், தேங்காயோடு சேர்ந்ததும், இதரபாக ரஸங்களும் சேர்த்தும் அநேகம் கொடுத்தான்.

அம்முநிகள் யாவரும், மஹா நேவேத்யங்களைப் பார்த்து, பூஜ்யஞன அரசனிடம், குறைவில்லா ஸந்தோஷமடைந்தனர். பின்னர் வ்யாக்ரபாதர் ஸந்தோஷமடைந்து, அரசனைப் பார்த்துப் பதில் சொன்னர். மற்றும் ஈசன் மஹாத்மியத்தை மறுபடியும் சொல்லப் போகிறேன் என்ருர்.

ஆனிமாத பூர நக்ஷத்ரம் வரும்பொழுது, அத்தினத்தில் அரசன், தேவர்கள், முநிகள், சித்தாள், வித்யாதராள், மநுஷ்யர்கள் மற்றும் யாவரும் ஆதரவுடன், அதிக தாமரைப் புஷ்பங்கள் நிறைந்த தீர்த்தமுடைய தில்லைவனத்தை அடைந்து, ஸ்னனம் செய்து, ஸபா மத்தியில் உள்ள நடேசனை அடைந்து, சுத்தராய், கார்யமற்றவராய், நித்யராய், களங்கமில்லாத விக்ரஹராய், மாயையைத் தாண்டினவராய், பெரிய அதீதராய், ஆகாச கங்கையைத் தரிப்பவராய், அலங்காரமுடைய சந்த்ரப்ரகாசத்தினல் வெண்மையாக்கிய திக் பாலகராய், நெற்றிக்கண் ஜோதிஜ்வாலையால் பொசுக்கிய வ்ருக்ஷம்போல் உள்ள மன்மதனை உடையவராய், கருணைக் கடலின் அலைபோல் கரை ஏறிய கடைக்கண் பார்வையுடையவராய், ஸர்ப்பங்களின் தலையில் உள்ள கற்களின் கிரணங்களுடைய சிறந்த கழுத்துடையவராய், ஹிமாசல புத்ரியின் கஸ்தூரிகா திலகம் சேர்ந்து அடைந்த மார்பு உடையவராய், புலித் தோலைச் சுற்றிக்கொண்டவராய், பாம்புகளைப் பூணலாகக் கொண்டவராய், அழகிய பாதச் சிலம்புகளினல் சப்திக்கும் சப்தத்தினல் அழகிய திக்பாலகுடையவராய், பார்த்த மாத்திரத்திலேயே எல்லோர்க்கும் குறைவில்லாத் தன்மையைச் செய்பவராய், இந்த்ரதனுஸ்போன்ற

வெகிடு உடையவராய், அதிக மனோஜ்ஞமான செம்மஞ்சிக் குழம்பு பூசிய உருவமுடையவராய், தாமரை போன்ற இளம் ஸூர்யன் போல் ப்ரகாசிக்கும் வலது பாதத்தினுல் அபஸ்மாரத்தைக் கீழே மிதித்தும், மாயையுள்ள பதினுன்கு புவனங்கள் த்யானம் செய்தும் சலிக்கும் ஆனந்த மயக்கண்ணினுல் பூர்ணம் அடைந்தது காணும், பார்த்தவர்கள் ஸ்தோத்தரித்தும், நமஸ்கரித்தும், அதே பாவமாகி, தன் தன் ஆச்ரம மடைந்தனர்.

வ்யாக்ரபாதர்:— ஆகையால் அச்சமயத்தில் மஹோத்ஸவம் நன்ருக செய்யவேணும். அரசனே! அக்காலம் வரப்போகிற வருஷத்தில் ஸமீபித்திருக்கிறது. ஆகையால் நீ சீக்ரமாக உத்ஸவத்திற்கு முக்யமாக ரதம், முதலியவைகளை ஸம்பாதித்து, சேர்த்துவை என வ்யாக்ரபாதரால் சொல்லப்பட்டதும், அரசன் வேகமாக யாவற்றையும் ஸம்பாதிக்க ஆரம்பித்தான். பின்பு நன்ருக முநிச்ரேஷ்டர்கள், அச்சமயம் வந்தபொழுது கார்த்திகை நக்ஷத்ர தினத்தில் 3000 ப்ராம்ஹணர்கள் மற்றும் எல்லோரும் ஆதரவுடன் கூடி த்வஜாரோஹணம் செய்ய நிமித்தங்களை அறிந்து, பரமேச்வரன் ஸந்நிதியில் தேவதாவாஹனம் செய்தனர்.

விஷ்ணு, ப்ரம்ஹா, இந்த்ரன், அக்னி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஸூர்யன், சந்த்ரன், கந்தர்வாள், ராக்ஷஸாள், யக்ஷர்கள், கிம்புருஷர்கள், எல்லோரும் ஸபேசனது ஸேவைக்காக வேகமாக வருக! எனத்தேவர்களைக் கூப்பிட்டு, வ்ருஷப அடையாளமுள்ள த்வஜத்தை பட்டணப்ரதக்ஷிணம் செய்வித்து, பரமேச்வரன் ஸந்நிதியடைந்து, வேத மார்க்கத்தில் சொல்லிய வழியில், த்ருடமாக கொடியை எற்றிவைத்தனர். அன்றைய தினம் இரவில் தளம், முறம், படஹம், வேணு, வீணை, கஞ்சிரா, துந்துபி; முதலிய வாத்யத்வனிகளை ஆதரவுடன் மந்த்ரோக்தமாக சப்திக்கச் செய்தனர்.

ப்ரம்ஹாண்டங்களை பிளக்கும் அந்த கோஷம் உலகத்தையே செவிடாகச் செய்யும்போல் ப்ரியமாயிற்று, மறுநாள் மனுஷ்யாள் அரசர், தேவர், ரிஷி, ஸ்த்ரீகள், இவர்கள் ஆதரவுடன் தப்ரஸபாபதியின் உத்ஸவஸேவைக்காக, தில்வாரண்யம் அடைந்தனர். பின்பு மத்யார்ஜுனர், மாயூரேச்வரர், ச்வேதாரண்யேச்வரர், வேதாரண்யேச்வரர், பஞ்சநதேச்வரர், ஏகாம்பரேச்வரர், அருணுசலேச்வரர், இன்னும் மற்றுமுள்ள முநிகள், தேவர்கள், பூமியில் உள்ளவர்கள், எல்லோரும் நடராஜ ஸேவைக்கு அடைந்தவர்களாக வந்தனர்.

இவ்விதம் மக நக்ஷத்ரம் வரை வைதிகோத்தமப்ரகாரம் ரிஷி சரேஷ்டர்கள், ஒன்பது நாள் பூர நக்ஷத்ரம் வரை மஹோத்ஸவ விதி யாகச் செய்து வந்தனர். நடேசனைத் தேரில் ஏற்றிவைத்து உத்ஸவமும் செய்தனர்.

கோடி மாடப்புருக்களின் அழகுபோன்ற ப்ரகாசமுள்ள ஸாமான் உருவமுடைய மந்தாரமாலையில் வழியும் தேன் வடிவமுள்ள பெரிய நல்முத்து ப்ரகாசிக்கும் சந்த்ரிகைபோலும், வெண்மை விக்ரஹமுடைய ஸ்வர்ண கும்பம் கண்ணாடி இவை ப்ரகாசிக்கும் மேல்பாகமும், பட்டு வஸ்த்ரங்களினால் கண்களுக்கு ஹிதத்தைக் கொடுக்கும்படியும் காற்றினால் சப்தமடையும் காரணமுடைய நடேசர் உத்ஸவத்தைப் பார்க்க, ஸமஸ்த தேவர்களையும் அடிக்கடி கூப்பிடுவது போல் த்வஜங்கள் வெளிப்பாகத்தில் ஸகல ஆனந்தமுள்ள நவரத்னங்களுடன் மாலைகளுக்கு ஸமான ப்ரகாசம் அடைந்து ஆகாசத்தில் இந்த்ர தனுஸ் சோபையைக் கொடுக்கும் உடலில் மாணிக்கக் கல்லுடன் அடைந்த மல்லிகைப் புஷ்பம் போல் சோபையும், பட்டுவஸ்த்ரத்தினால் மறைந்த பாத பீடங்கள் ப்ரகாசிக்கும் திவ்ய ஸிம்ஹாஸனத்துடன், ஸதா அலங்கரித்த மத்ய பாக சிகைகளில் அடைந்தும், காது பாகம் வரை ரத்னமயமுள்ள கிங்கிணீ சப்தத்துடன், எதிரொலி கொடுக்கும் திக்பாகமும், மேரு பர்வதம் போல் அநேகவித குடைகள் சூர்ய தாபத்தைத் தடுக்கக் கூடியதும், இருப்பிடமடைந்து ஏறிய மாறுதல் லக்ஷண குணமும், அநேக தேவதா பூர்வக ஸ்வர்ணபர்வதம் போல் ப்ரகாசிக்கிறதாயும், உள்ள ரதத்தில் சீக்ரமாக நடேசரை ஏற்றிவைத்து, தேவி, விக்னேச்வரர், தேவர்கள், இருவர்களுக்கும் தனித் தனி ரதங்களையும் அரசன் ஏற்றிவைத்து, வீதியில் ஸர்வாலங்காரத்துடன் ப்ரதக்ஷிண விதியைச் செய்து வைத்தான்.

ஸ்ரீமத் தப்ரஸபாபதி வீதியில் வருகையில்; ஜனங்கள் அழகிய அலங்காரங்களை அநேகவிதமாக வீதியில் செய்தனர். இளம் காற்று வீசும் வாஸனையுடன் கிங்கிணீவாத்ய சப்தம்போன்ற தோரணங்கள்; உப்பரிகைகளில் முதன்மையாக கட்டப்பட்டு, வஸ்த்ர நிர்மாணம் செய்த கொடிகளும், கம்பீரமான கும்பல்களால் ஆகிய ஸ்தம்பங்களும், தேங்காய்க்குலை, ஈச்சங்குலை, இவைப்ரகாசிக்கும் யாலைகளும், வேடிக்கையாய்க் கட்டிய பொம்மைகள்போல் ப்ரகாசமும்; ஒவ்வொருவாயிலிலும் பூர்ண சந்தரன் போன்ற கண்ணாடி ஸாமான் போன்ற ப்ரகாசமும், புதிய நல் முத்துஹாரம், நல் ரத்னங்களது சித்ரங்கள், அநேகவிதமாய்

நெருங்கிய பட்டு வஸ்த்ரங்களினால் நிர்மாணித்து, அநேகவித திவ்ய அலங்காரங்களுடன் ப்ரகாசிக்க கூட்டமாக கோஷம் செய்து, தேவர் கூட்டம் கரையில் ப்ரகாசிக்கையில்; விலை மதிக்க முடியாத அதிக சோபையுடைய மாணிக்கங்களுடன் வணங்கும் புஷ்பமாலைகள், காது தாளிகளுடன் இணைத்து, பூபாரமிடை வந்ததுபோல் அங்கு வீதிகளில் பெரியதாக காணப்பட்டது.

பிறகு ஸ்வர்ண பட்டண ஜனங்களும், ஸந்தோஷமடைந்த மன துடன் பனித்துளி ஜலங்களை வெளிப்ரதேசங்களில் தெளித்தனர். அநேகவித புஷ்பங்களை வீதியில் இறைத்தனர். பாடலபுஷ்ப தீர்த்தங் களினாலும், குங்கும ஜலத்தினாலும், சுத்த ஜலத்தினாலும், சந்தன ஜலத்தினாலும், கஸ்தூரி ஜலத்தினாலும், ம்ருக மதங்களினாலும், நிர்யாஸ புஷ்பங்களாலும், அகில் கட்டை தீர்த்தங்களாலும், வெளிப் புறங்களில் தெளித்தனர். மத்தள நாதம், துந்துபி கோஷம், படஹ வாத்யம், காஹல வாத்யம், முனிகளது ஸாமகானம், ப்ராம்ஹணர்களது வேத கோஷம், பக்தர்களது ஜெய சப்தம், குதிரைகளது கொட்டாவி, பெரிய யானைகளது சப்தம், ரதசக்ர மஹாரத சப்தம், ருத்ர கன்னிகை களது பாதச் சிலம்பு சப்தம், நர்த்தனம் செய்யும் புஷ்பமாலைகளிலிருந்து விழும் வண்டுகளின் ஜங்கார ஸ்வர சப்தம், இவை பெரிய கோலாகல முள்ள பூமியின் நடுபாகம் முழுமையும் செவிடாகச் செய்யும்படி காது களில் கட்டிய நான்கு இந்த்ரியங்களையும், பரமானந்தம் அடையும்படி ஸர்வஜனங்களுக்கும் செய்தது.

சிலர் நர்த்தனம், செய்தும் ஸந்தோஷக் கண்ணீர் விட்டும், மயிர்க் கூச்சலடைந்தும், பரமான மூர்ச்சை அடைந்தும், சிலர் கான விசேஷங்களால் ஈசனை ப்ரீதி அடைந்தும், பார்த்தனர். இவ்விதம் தப்ரஸபாமத்தியில் ப்ரதக்ஷிணம் செய்வித்து, அரசன், ப்ராம்ஹணர்கள் சேர்ந்துள்ள ஸபையை அரசன்; ப்ரவேசிக்கச் செய்தான்.

பிறகு வ்யாக்ரபாதர், உத்ஸவத்தினால் ஸந்தோஷமடைந்து, தீர்த்த உத்ஸவம் விதிப்ரகாரம் செய்ய அரசனை மறுபடியும் சொன்னார். அரசனே! ஸமாஹிதனாக இரு. மற்றொன்றும் சொல்கிறேன் கேள். வடபாகத்தில் நடராஜனுக்கு விதி பூர்வமாக தீர்த்த வாரியை எந்த மனுஷ்யர்கள் செய்கிறார்களோ? அவர்களுக்கு முக்தி தான் ஸந்தேஹ மில்லை என்றதும்,

ஹிரண்யவர்மர்:— எவ்விதம் அதைச்செய்யவேண்டும். அவ் விதியைச் சொல்லும் என்றதும்,

வ்யாக்ரபாதர்:— புண்டரீகபுரத்தில் கிழக்கில் மேற்கு ஸமுத்ர கரையில் பரமாய், தீர்த்த கர்மா விதியுடன் செய். அக்காலத்தில் ஸ்நானம் செய்கிற எவனுக்கும், மஹாபாதகம் தொலைந்து மோக்ஷம் கிடைக்கும். இவ்விஷயத்தில் முன்பு நடந்த ஒருகதை உனக்கு சொல்லுகிறேன்.

வருணன் நூற்றுக்கணக்கான வருஷம் முன்பு யுத்தம் செய்ததில் அஸுரனால் அபஜய மடைந்தான். அக்காலத்தில் இரவில் ஒரு ப்ராம்ஹண ச்ரேஷ்டன் யதேச்சையாக இருவநக்கும் ஸமாதானம் செய்தற்கு வருகையில்; இநட்டுபோன்ற கண்ணுடைய அவரைப் பார்த்து வருணன்; ராக்ஷஸன் என்ற புத்தியால் பாசாயுதத்தை விடுத் தான். அப்பாசாயுதத்தால் ப்ராம்ஹணன் கட்டுப்பட்டு இறந்து போனான். பிறகு அதனால் ஏற்பட்ட பெரிய ப்ரம்ஹஹத்தி வருண னுக்கு ஏற்பட்டு. கஷ்டம் அடைந்தான். உடனே தேஜஸில்லாமல் ஆனான் வருணன் பாபத்தால் கஷ்டப்படுகையில்; ஏழு ஸமுத்ரமும் வற்றுதல் அடைந்தது. ஸமுத்ரம் வற்றியதால் உலகத்தில் மழை இன்மை ஆயிற்று. உலகமெல்லாம் பரிதபிக்க மஹா தாபம் ஆவிர் பவித்தது. பிறகு வருணன் முதலான தேவர்கள் எல்லோரும் செய்த முயற்சியுடையவர்களாகி, ஒன்றுகூடி தில்லைவனமடைந்து, அப் பாகத்தில் ஆதரவுடன் ஸபேசனை ஸ்தோத்தரித்தனர். அம்ருதம் போன்ற மயில் கோடுகளாய் அலங்கரித்த மேல்பாகமுடைய ஜடைக் கூட்டமுடைய உனக்கு நமஸ்காரம். கருணையாகிற ஸமுத்ரக்கரையில் உண்டான அலைகள் போன்ற ச்ருங்கார கடைக்கண் பார்வையுடைய உமக்கு நமஸ்காரம். நெற்றிக் கண்ணினின்று உண்டான சிறிய நெருப்பு வரிசைகளால் எரித்த மன்மதனை உடைய உமக்கு நமஸ்காரம். பெரிய ப்ரகாசமாய் விளங்கும் பாம்புகளால் ப்ரகாசிக்கும் கழுத்துடைய உமக்கு நமஸ்காரம். பாற்கடலில் உண்டான ஹாலாஹலத்தினால் கருப்பாகச் செய்த கழுத்துடைய உமக்கு நமஸ்காரம். புன்சிரிப்பு காந்தியுடன் பொசுக்கிய அஸுர பட்டண பூமியை எரித்த உமக்கு நமஸ்காரம். பாற்கடலில் உண்டான பார்வதியின் தாமரை போன்ற ஸ்தன பாகங்களில் பாடல புஷ்ப தூளியால் அலங்காரம் செய்த மார்பு பாகமுடைய உமக்கு நமஸ்காரம். பெரிய யானை சரீரம் போன்ற

தோலினால் போர்த்திய அழகிய கடிப்ரதேசமுடைய உமக்கு நமஸ்காரம். மங்கள ஸபையின் நடுவில் இருக்கிற குறைவில்லா நடன பூமியுடைய உமக்கு நமஸ்காரம். நீர் வருணனுக்கு அஜ்ஞானத்தால் உண்டான பெரிய பாபத்தை நிவர்த்தி செய்யும்!

எனச் சொல்லுகிற தேவர்கள் எதிரில் அப்பொழுது உடனே அசரீரிவாக் உண்டாயிற்று. நாங்கள் ஸமுத்ரக் கரையை அடைந்து வருணனது பாபத்தை நிவர்த்தி செய்வோம்! என்றதும்; ஸமஸ்த தேவர்களும், ஆனந்த ரஸத்துடன் பூர்ண ஆசீர்வாதமடைந்து, தன் தன் இடங்களுக்கு எல்லோரும் சென்றனர்.

பின்பு கருணா ஸமுத்ரனான ஈசன் ஒரு ஸமயம் மாகமாத மக நக்ஷத்ரத்தில் ஸமுத்ரம் அடைந்ததும், அந்த ஸந்நிதானத்தில் ப்ரம்ஹ ஹத்தி வருணனுக்கு விடுபட்டதாயிற்று. பாபங்களால் விடுபட்ட வருணன் நமஸ்கார் பூர்வம் ஸ்தோத்ரங்களால் ஸ்தோத்தரித்து, ஸபாபதியை ஸந்தோஷிக்கச் செய்து, கொஞ்சம் வரமடைந்தான். ஸ்வாமின்! இச்சமயத்தில் நான் ஸ்நானம் செய்ததினால் காப்பாற்றப் பட்டவனாகிறேன். அவ்விதமே எம்மனுஷ்யர்கள் இக்காலத்தில் உபாஸித்து ஸ்நானம் செய்கிறார்களோ; அவர்கள் எப்பொழுதும் பரமபதம் அடைக! என வருணனால் சொல்லப்பட்டதும்; பக்தர்களுக்கு வரப்ரஸாதம் செய்யும் நடேசன், அவ்விதமே ஸரி என வரம் கொடுத்து தப்ரஸபாபதி மறைந்தார். அரசனே! உன்னால் இப்பொழுது வரமடைய தீர்த்த ஸ்நான கர்மாவைச் செய்யவேணும் என இவ்விதம் வ்யாக்ரபாதரால் சொல்லப்பட்டதை அரசன் கேட்டு, உத்தர நக்ஷத்ரத்தில் ஆதரவுடன் தீர்த்த கர்மாவைச் செய்ய ஸமுத்ரக் கரையை நன்கு அலங்கரித்து, அவ்விடம் ஈசனுக்கு தீர்த்த யாத்திரையும் செய்வித்தனர்.

பிறகு அந்த ஸமாஜத்தில் எல்லோரும் தெரிந்த மரியாதையுடன், ஈசனுக்கு தீர்த்த யாத்ரையைத் தேவர், முநி, சித்தாள், வித்யாதராள், யக்ஷாள், ராக்ஷஸாள், மனுஷ்யர்கள், கின்னரர்கள், எல்லோரும் வந்து ஆனந்த கூட்டமுடையவர்களாகி ஸமுத்ரத்தில் ஸ்நானம் செய்தனர். சிலர் ஸ்வர்ணமயமான ச்ருங்கங்களாலும், சிலர் நல்முத்துகும்பம், மரகத கும்பம், சிலர் மாணிக்க கும்பம், பவழக் கும்பம், கோமேதகக் கும்பம், இவைகள் உள்ள பெரிய வீடுகளில் ஜலக்ரீடை செய்பவர்களாகியும் அநேக அப்ஸரஸ்களுடன் தீர்த்த விதி நடேசனுக்கு செய்வித்து,